# சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**சா.சத்யா**

(பதிவு எண் : 0879)

நெறியாளர்

பேரா. **மு.பாண்டி**






## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில்3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி ம
ற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**பிப்ரவரி - 2019**

பேரா. **மு.பாண்டி,**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

“**சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்**” என்னும் தலைப்பில் **சா.சத்யா** செய்துள்ள இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் பட்டம் (தமிழ்) பயின்ற காலத்தில் ஆய்வேடாகப் பணிக்கப்பெற்றது. இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

நெறியாளர்
**(பேரா.மு.பாண்டி)**

**சா.சத்யா,**
பதிவு எண்.0879,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்"** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர்

**(சா.சத்யா)**

உறுதிக் கையொப்பம்

பேரா. **மு.பாண்டி,**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

கல்வியுலகில் என்னைப் பயணிக்கச் செய்த தமிழ்க் கடவுளுக்கு என் வணக்கங்களையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் படிப்பதற்கு நிலைக்கலனாக அமைந்த நிறுவனர் பத்மபூஷன் டாக்டர் **அழகப்ப செட்டியார்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த வணக்கம்.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய நம் பல்கலைக்கழக **துணைவேந்தர்** அவர்களுக்கு என் உளம்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

என்னை ஆய்வுலகில் நல்முறைப்படுத்தியும், ஆய்வுகுறித்து அணுகியபோதெல்லாம் அறிவுரைகள் வழங்கியும், ஆய்வு செம்மையடையச் செய்த எனது நெறியாளர் பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கும், அவருடைய குடும்பத்தாருக்கும் என் பணிவான வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான பல்வேறு அறிவுரைகளைக் கூறிய துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

என்னை உயர்கல்வி வரை படிக்க வைத்த எனது பெற்றோரான திரு.**உ.சாத்தையா**, தெய்வத்திரு **சா.இந்திரா** அவர்களுக்கும், மாமா **தோ.சோணைமுத்து**, அத்தை **சோ.அழகம்மாள்** அவர்களுக்கும், எனது கல்விக்கு ஆதரவு நல்கிய எனது சகோதரர்களுக்கும்,

ஆய்விற்குப் பல்வகையிலும் உதவியாக இருந்த என் புகுந்த வீட்டாருக்கும் என் இதயபூர்வமான நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

முனைவர் பட்ட படிப்பினை மேற்கொள்ள உறுதுணையாகவும், என் வாழ்வின் துணையாகவும் அமைந்த எனது அன்பிற்குரிய கணவர் முனைவர் **சோ.மோகன்தாஸ்** அவர்களுக்கும், அன்பு மகன் **எம்.எஸ்.துருவனுக்கும்** என் இனிய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடன் பயிலும் ஆய்வாளர் நண்பர்களுக்கும் என் நன்றி உரியது.

ஆய்வுக்குரிய புத்தகங்களை வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக பொது நூலகத்திற்கும், அகவை முதிர்ந்த தமிழறிஞர் சா.க.முருகேசன் (புத்தக தாத்தா) மதுரை அவர்களுக்கும், எனது ஆய்விற்கு நிதியுதவி நல்கிய பல்கலைக்கழக மானியக்குழுவிற்கும் (RGNF) எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இந்த ஆய்வினைச் சீரிய முறையில் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த திருமதி.சாந்திபாண்டியன் அவர்களுக்கும், உதவிப் பயிற்றுநர் சி.தன்மானம், திரு.ஆறு.செல்வமணி, திரு.இரா.இரவிக்குமார் அவர்களுக்கும் கட்டமைப்புச் செய்தளித்த தோழர் பிரிண்டர்ஸ்க்கும் என் நன்றிகள்.

**ஆய்வாளர்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகநா. | அகநானூறு |
| உ.ஆ. | உரையாசிரியர் |
| ஐங். | ஐங்குறுநூறு |
| கலித். | கலித்தொகை |
| குறிஞ்சி. | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | குறுந்தொகை |
| சிறுபாண். | சிறுபாணாற்றுப்படை |
| சொ.பொ. | சொற்பொழிவு |
| திருமுருகு. | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | தொகுப்பாசிரியர் |
| நற். | நற்றிணை |
| நெடுநல். | நெடுநல்வாடை |
| ப. | பக்கம் |
| பக். | பக்கங்கள் |
| பட். | பட்டினப்பாலை |
| ப.ஆ. | பதிப்பாசிரியர் |
| பதிற். | பதிற்றுப்பத்து |
| பரி. | பரிபாடல் |
| புறநா. | புறநானூறு |
| பொருள். | பொருளதிகாரம் |
| பொருநர். | பொருநராற்றுப்படை |
| பெரும்பாண். | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரை. | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | மலைபடுகடாம் |
| முல்லை. | முல்லைப்பாட்டு |
| மேலது. | மேலே குறிப்பிட்டுள்ள நூல் |
| மொ.பெ. | மொழிபெயர்ப்பாளர் |
| Op.Cit. | In the work cited |
| P. | Page |
| PP. | Pages |
| Tr. | Translator |

பொருளடக்கம்

## முன்னுரை

மனிதனின் உணவு, உடை, உறைவிடம், அறிவு, கல்வி, மற்றும் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைவன தொழில்களாகும். தமிழ்ச் சமூகம் தொழில்கள் அடிப்படையில் பல பிரிவுகளாக அமைந்தது. தொல்காப்பியம் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்று இருந்தமையைப் பறைசாற்றுகின்றது. மனிதனின் குணாதிசியங்களை அவன் சார்ந்திருக்கும் தொழில் மற்றும் தொழிற்கருவிகள் வரையறை செய்கின்றன. தொழில்களின் அடிப்படையில் மக்களின் குடிப்பெயர்கள் இருந்தன என்பதைப் புறநானூற்றின்,

**"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**
**இந்நான்கு அல்லது குடியும் இல்லை"** **(புறநா.335)**

என்ற மாங்குடிக்கிழாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இன்றைய தொழில்நுட்ப உலகில் தொழில்களும் தொழிற்கருவிகளும் பலவித மாற்றங்களையும் வளர்ச்சியையும் கொண்டு விளங்குகின்றன.

ஆரம்ப காலக்கட்டத்தில் மனிதன் தனக்குக் கிடைத்தக் கற்கள், மரக்குச்சிகள் இவைகளைப் பயன்படுத்தி வேட்டை, உணவு தேடத் தொடங்கியுள்ளான். காலப்போக்கில் அக்கருவிகள் மனிதனின் கண்டுபிடிப்புகளால் மாற்றங்களையும் வளர்ச்சியையும் அடைந்து வில், வாள், வேல், அம்பு, கத்தி மற்றும் ஈட்டி என்றெல்லாம் மாறின.

சங்க காலத்தில் மனிதர்கள் தாம் வாழும் இடங்களுக்கேற்பத் தம் தொழில்முறைகளை உருவாக்கியதைச் சங்க இலக்கிய ஐவகை நிலங்களில் காணலாகும் தொழில்முறைகள் நமக்கு விளக்குகின்றன. இதன் வாயிலாக அவர்களின் தொழில்கள் மற்றும் தொழிற்கருவிகளைக் கண்டறிவதாய் இவ்வாய்வானது அமைகிறது.

### ஆய்வுத்தலைப்பு

சங்க இலக்கியங்களில் அக்காலத்தமிழ்ச் சமூகத்தில் நிலவிய தொழில்களையும் தொழிற்கருவிகளையும் காணும் நோக்கில் **'சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்'** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் காணலாகும் தொழில்கள் மற்றும் தொழிற்கருவிகளைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

தொழிற்கருவிகளை நுட்பமாக நோக்கும் இவ்வாய்விற்குச் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் எல்லைகளாக அமைகின்றன.

**சான்றாதாரங்கள்**

தொழிற்கருவிகளையும் அவற்றின் பயன்பாடுகளையும் எடுத்துரைக்கும் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாகும். தொழில்கள் குறித்த திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் மற்றும் இணையத் தகவல்கள் இவ்வாய்விற்குரியத் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**கருதுகோள்**

பண்டைத் தமிழர்கள் திணை அடிப்படையில் அமைந்த இயற்கைசார் வாழ்வியலில் முதல், கருப் பொருட்களைக் கொண்டு உரிப்பொருட்களை அமைத்திருப்பதைப் போல நிலத்தின் தன்மைக்கேற்ப கிடைத்தப் பொருட்களைக் கொண்டு தொழில்களையும் தொழிற்கருவிகளையும் பயன்படுத்தியிருக்கக் கூடும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டை விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive approach), சங்க கால மக்களின் சமூகம் சார்ந்த நிகழ்வுகளைக் காண சமூகவில் அணுகுமுறையும் (Socialogical approach), திணை அடிப்படையில் மாந்தர்களை நோக்குமிடத்து மானுடவியல் அணுகுமுறையும் (Anthropoligical approach) இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

**முன்னாய்வுகள்**

அழகப்பா பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பட்ட முனைவர் க.பஞ்சவர்ணம் அவர்களின் 'சங்க இலக்கியங்களில் புழங்குபொருட்கள்', முனைவர்.மா.மணிகண்டன் அவர்களின் 'காலந்தோறும் தமிழர் இசை', சா.சத்யா அவர்களின் 'செவ்வியல் இலக்கியங்களில் இசைக்கருவிகள்' ஆகிய ஆய்வேடுகளும், காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பட்ட முனைவர். செ.ராஜேஸ் கண்ணனின் 'சங்ககால கலை மாந்தர்களின் வாழ்வியல்' என்ற ஆய்வேடும், சசிவல்லியின் 'பண்டைத் தமிழர் தொழில்கள்', வே.சா.அருள்ராசு அவர்களின் 'பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில்கள்' என்ற நூல்களும் இவ்வாய்விற்கு முன்னாய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வுப் பகுப்பு**

**'சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்'** என்னும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. சங்ககாலத் தொழில்களும் தொழிற்கருவிகளும்
2. முதன்மைத் தொழிற்சார் கருவிகள்
3. துணைமைத் தொழிற்சார் கருவிகள்
4. கலையியல் தொழிற்சார் கருவிகள்
5. பொதுவான தொழிற்கருவிகள்

என்பனவாகும்.

**இயல் விளக்கம்**

**'தொழில்களும் தொழிற்கருவிகளும்'** என்னும் முதலாமியலில் தொழில் பற்றித் தொல்காப்பியம், அகராதிகள், அறிஞர்கள் தந்திருக்கும் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. கருவிகளின் தோற்றம்,கால அடிப்பபடையில் கருவிகளின் வகைகள், பயன்பாடுகள் குறித்தும் விளக்கப்பெற்றுள்ளன.

**'முதன்மைத் தொழிற்சார் கருவிகள்'** என்னும் இரண்டாமியலில் ஐவகை நிலங்களில் காணப்படும் முதன்மைத் தொழில்கள், அந்நில

மக்கள், பயன்படுத்திய முதன்மைத் தொழிற்கருவிகள் பற்றித் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

**‘துணைமைத் தொழிற்சார் கருவிகள்’** என்னும் மூன்றாமியலில் முதன்மைத் தொழிலுக்குத் துணைசெய்த கொல்லர், தச்சர், குயவர், ஓலைத்தொழில் செய்வோர் ஆகியோரின் தொழில்களில் பயன்படுத்தப்பட்ட கருவிகள் புலப்படுத்தப்பட்டுள்ளன.

**‘கலையியல் தொழிற்சார் கருவிகள்’** என்னும் நான்காமியலில் கலையும் தொழில்களுக்குள் அடங்கும் என்பதால் இசை, நாடகம், ஓவியம், சிற்பம், கட்டடம், சமையல், மருத்துவம், கணியம் ஆகிய கலைசார் தொழில்களும், அவற்றில் இடம்பெற்ற கருவிகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

**‘பொதுவான தொழிற்கருவிகள்’** என்பது ஐந்தாம் இயலாகும். ஒவ்வொரு நிலத்திற்கென்றும் தனித்தனியாகத் தொழில்கள் இருந்த போதிலும் இதில் சில பொதுமைப்பண்புகளும் காணப்படுகின்றன. இப்பொதுத்தன்மை கருவிகளிலும் இருக்கும் என்பதனடிப்படையில் ஐவகை நிலங்களில் காணப்படும் போர், வணிகம், அறிவுசார் தொழில்கள் பற்றி இயம்பப்பட்டுள்ளன.

போர்க்கருவிகள் பற்றியும், போர்முறைகள் பற்றியும், பண்டமாற்று முறை பற்றியும் இவற்றிற்குத் துணைபுரிந்த பொதுவான கருவிகளும் சுட்டப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் இயலுக்குரிய தொகுப்புரை மற்றும் அடிக்குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. இடம் பெற்றுள்ள சுருக்கக் குறியீட்டுக்கான விளக்கங்கள் ஆய்வின் முன் பகுதியில் தரப்பட்டுள்ளன.

மேலும் ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் முடிவுரையாக அளிக்கப்படுகின்றன.

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெறுகின்றன. ஆய்வுத்தொடர்பான புகைப்படங்கள் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

## இயல் ஒன்று

# சங்ககாலத் தொழில்களும் தொழிற்கருவிகளும்

## இயல் ஒன்று

## சங்ககாலத் தொழில்களும் தொழிற்கருவிகளும்

பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியம் திணைக் கோட்பாட்டுடன் அத்திணை மக்களின் வாழ்வியல் முறைமைகளை எடுத்தியம்புகின்றன. திணை அகம், புறம் எனப் பாகுபாடு செய்யப்பட்டு, அகத்திணையில் ஐவகை நில மக்களின் வாழ்வியல் கூறுகளும், புறத்திணையில் அம்மக்களின் போர், வெற்றி, தோல்வி, கொடை, புலவருடனான நட்பு ஆகியவற்றை உணர்த்தும் வகையில் அமையப் பெறுகின்றன. மனிதனின் வாழ்க்கை மூன்று அடிப்படைத் தேவைகளை முன்னிருத்தி அமைகின்றன. அவை உணவு, உடை, உறையுள் (இல்லம்) ஆகும். இம்மூன்று தேவைகளை அடைவதற்கு மனிதன் தேடலைத் தொடங்குகின்றான்.

இத்தேடலின் தொடக்கம் மனிதன் சமுதாயத்தில் படிப்படியாக முன்னேறுவதற்குத் துணையாகவும், புதிய சமுதாய உருமாற்றத்தை ஏற்படுத்தவும் காரணமாயிருந்தது. மனிதனின் உணவுத் தேடலின் விளைவாகத் தொழில்கள் உருவாயின. இத்தொழில்கள் மனிதனை அடுத்த கட்ட வளர்ச்சிக்கு எடுத்துச் சென்றன. இத்தொழில்களைச் செய்வதற்கு உறுதுணையாக அமைந்தவை கருவிகளாகும். இவ்வாறாக உருவான தொழில்களையும், தொழிற்சார் கருவிகளையும் ஆராய்வதாய் இவ்வியல் அமையப் பெறுகின்றது.

### தொழில் விளக்கம்

தொழிலைத் தொல்காப்பியர் செய்தி எனக் குறிப்பிடுகிறார். இதனை,

**“செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ”**[1]

என்ற நூற்பா விளக்குகிறது. செய்தி என்பது இன்றைக்குத் தகவல் அல்லது ஒரு கடந்தகால நிகழ்வு என்ற பொருளிலும் கொள்ளப்படுகிறது.

**“வினையே ஆடவர்க்கு உயிரே” (குறுந்.135:1)**

என்னும் பாடலடி தொழிலை வினை எனக் குறிப்பிடுகிறது.

தொழில் என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி “அலுவல், செயல், தன்மை, வினைச்சொல், வேலை”[2] எனப் பொருள் தருகிறது. “வேலை,

மனித உழைப்பு, இயந்திரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தி இலாப நோக்குடன் ஒரு பொருளை உற்பத்தி செய்திடும் செயல்”[3] என நர்மதா தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது.

உழைப்பு என்பது வினைச் சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். “உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்”[4] என்பார் வி.சி.சசிவல்லி.

பொருளியல் பற்றிச் சிந்தித்த மார்சல் உழைப்பிற்குக் கூறும் இலக்கணத்தை “உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றை படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும் கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிருவாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்தினுள் அடங்குகின்றன”[5] எனச் சுட்டுகிறார் வி.சி.சசிவல்லி.

தொழிலை ஆங்கிலத்தில் Vocation, Occupation, Profession, Work, business என பல சொற்களில் குறிப்பிடுவர். Occupation என்பதற்கு “a job or profession: the way in which you spend your time தொழில்; வேலை; திறத்தொழில்; பணி”[6] என ஆக்ஸ்போர்டு ஆங்கிலம் - ஆங்கிலம் - தமிழகராதி சுட்டுகிறது.

இவ்வகராதி work என்பதற்கு “to do sth which needs physical or mental effort, in order to earn money or to achieve sth பணம் ஈட்டுவதற்காக அல்லது ஒன்றை அடையப் பெறுவதற்காக உடல் உழைப்பு அல்லது அறிவுத்திறன் சார்ந்த ஒரு செயலைச் செய்; உடல் /

மூளையை ஈடுபடுத்திச் செயலாற்று; வேலை செய்; பணியாற்று;"[7] என விளக்கம் அளிக்கிறது.

மேலும், "Work என்ற சொல் எண்ணுதற்கு இயலாப் பெயர்ச் சொல்லாகும். சில சூழல்களில் Job என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும். I've found work at the hospital. I've got a new job at the hospital. Employment என்பது ஊதியத்திற்குரிய பணியில் இருப்பதைக் குறிக்கும். இச்சொல் work அல்லது job-ஐவிட முறைசார்பும் அதிகார முறைமையும் மிக்க வழக்காகும். Many married women are in part-time comployment. அதிகாரபூர்வமான ஆவணங்களில் ஒருவரது தொழில் பற்றி வினவ occupation என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

Occupation; student occupation; bus driver; சிறப்புப் பயிற்சியும் உயர்கல்வித் தகுதியும் வேண்டப்படும் தொழில் proffession எனப்படும் - the medical profession. Trade என்பது தனிப்பயிற்சித்திறன் வேண்டப்படும் கைவினைத் தொழிலாகும். He's a carpenter by trade"[8] எனத் தொழில் குறித்த சொற்களின் விளக்கங்களைச் சான்றுகளுடன் இவ்வகராதி எடுத்தியம்புகிறது.

தொழில் பற்றிய மேற்கண்ட விளக்கங்களின் அடிப்படையில் தொழில் என்பது மனிதனின் இயக்கப் பண்புடன் தொடர்புடைய செயல் எனக் கொள்ள முடிகிறது. இத்தொழில்கள் மனிதனின் வாழ்வியல் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், உற்பத்தி செய்யவும், பொருளாதாரத்தை மேம்படுத்தவும் முனைப்பாகத் திகழ்கின்றன.

மனித சமுதாய முன்னேற்றத்திற்கு அடிப்படையாக அமைவது பொருளாதாரமாகும். இப்பொருளாதாரத்தை உருவாக்கவது தொழில்கள் ஆகும். பொருளாதாரம் பற்றி, "ஒரு சமூகத்தின் பொருளாதாரம்தான் அச்சமூகத்தின் அடிப்படை அமைப்பாகும். (Basic Structure) இவ்வமைப்பு அச்சமூகத்தின் மதிப்புகளை வரையறை செய்து அச்சமூகத்தினரின் உணர்வு நிலைகளையும் (Conciousness) கட்டுப்படுத்துகின்றது. சமூக மதிப்புகளும் அவை பற்றிய கோட்பாடுகளும் பொருளாதாரம் என்ற

அடிப்படை அமைப்பின் மேல் எழுதப்பட்ட மேல் அமைப்பகள் (Super Structure)"[9] என கார்ல்மார்க்சு குறிப்பிடுகிறார்.

இவ்வடிப்படையில் மனிதனின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையாக அமைவன தொழில்கள் என்பதை உணரமுடிகிறது.

**சங்ககால தொழில்கள்**

சங்க இலக்கியங்கள் அன்றைய மக்கள் சமுதாய நிலைக்கேற்றத் தொழில்களைக் கையாண்டதைச் சுட்டுகின்றன. சங்ககால மக்கள் தாம் வாழும் நிலம், பருவங்கள், நீர் போன்றவற்றின் இயல்புகளுக்கேற்ப தொழில்முறைகளை அமைத்துக் கொண்டனர். நிலங்கள் ஐந்தாகப் பகுக்கப்பட்டு அந்தந்த நிலங்களின் தன்மைக்கேற்ப தொழில்கள் நடைபெற்றன. பொதுவான தொழில்கள் எல்லா நிலங்களிலும் காணப்பட்டன. இத்தொழில்களை வேட்டை, வேளாண்மை, போர், வாணிகம், கலை என வகைப்படுத்தலாம். இவற்றைச் செய்முறைகளில் இயந்திரத்தொழில், உடல் உழைப்புத் தொழில், அறிவு உழைப்புத் தொழில் எனவும் வகைப்படுத்தக்கூடும். இதனை,



என வி.சி.சசிவல்லி பாகுபாடு செய்துள்ளார். இதனடிப்படையில் தொழிலை முதன்மைத் தொழில், துணைமைத் தொழில், கலையியல் தொழில், பொதுவான தொழில் என வகைப்படுத்தலாம்.

பழந்தமிழர்கள் ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு தொழிலை முதன்மைத் தொழிலாகக் கொண்டு செயல்புரிந்தனர். முதன்மைத் தொழில்கள் பெருந்தொழில்களாகக் கருதப்பட்டன. அவை, குறிஞ்சி நிலத்தில் வேட்டையாடுதல், தினைக்காத்தல், தேனெடுத்தல், முல்லை நிலத்தில் ஆநிரை மேய்த்தல், தயிர், மோர் விற்றல், புஞ்சை வேளாண்மை, மருத நிலத்தில் நஞ்சை வேளாண்மை அதன் சார் தொழில்கள், நெய்தலில் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல், முத்துக்குளித்தல், மீன் உணங்கள் இவற்றை விற்பனை செய்தல், கடல் வாணிகம் போன்றனவும், பாலை நிலத்தில் ஆறலைத்தல் தொழிலும் நிகழ்ந்துள்ளன. தமிழகம் நானிலம் கொண்டது. முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் கோடையில் தன் நிலையினின்று மாறுபடும்போது உருவாகும் நிலம் பாலை ஆகும். இதனை,

**“முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து**
**நல்லியல்பி ழந்து நடங்குதுயர் ருறுத்தும்**
**பாலை என்பதோர் படிவங் கொள்ளும்”[11]**

என்ற சிலப்பதிகார அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு அமைந்த நிலங்களில் மேற்கொள்ளப்பெற்ற முதன்மைத் தொழில்களுக்குத் துணைபுரியும் வண்ணம் அமைந்த இதரத் தொழில்களாகத் தச்சு, கொல்லு, மட்கலம், ஓலைத்தொழில், வண்ணார் போன்றனவும் காணப்பட்டன. ஓய்வு, பொழுதுபோக்கு, கலை வெளிப்பாட்டு நிலைகளில், இசை, கூத்து நிகழ்த்திய கலைஞர்களாகிய பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்றோர் கலையியற் தொடர்பானத் தொழில்களும் மேற்கொண்டுள்ளனர். இவர்களைப் பற்றி ஆற்றுப்படை இலக்கணம் கூறும்

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக்காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்”[12]**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகின்றது. பிற தொழில்களான பருத்தி உற்பத்தி, ஆடை நெய்தல், சமையல், உண்கலன்கள், அணிகலன்கள்,

கலைப்பொருட்கள், மதுபானங்கள் தயாரித்தல் இவற்றுற்குத் தேவையான கயிறு, பெட்டி, பிறபாத்திரங்கள் தயாரித்தல் போன்ற தொழில்கள் நடை பெற்றுள்ளன. மேற்கண்ட தொழில்களைச் செய்தவர்களாக அரசர், அமைச்சர், ஒற்றர், தூதுவர், புரோகிதர், காவலர், மெய்க்காப்பாளர்,அறிவர், ஆசிரியர், கணியன், காணர், உழவர், ஆயர், வேட்டுவர் இருந்துள்ளனர்.

**ஐவகை நிலத் தொழில்கள்**

ஐவகை நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றில் காணப்படும் தொழில்கள் கீழ்க்கண்டவாறு இடம்பெற்றுள்ளன.

**குறிஞ்சி**

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி ஆகும். குறிஞ்சி நிலம் மலைப்பகுதி ஆதலின் அங்கு வேட்டை, தேனெடுத்தல், தினைவிளைவித்தல், தினைப்புனம் காத்தல், போன்றத் தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன.

**முல்லை**

காடும் காடு சார்ந்த இடமும் முல்லையாகும். முல்லை நிலம் காட்டுப்பகுதியாதலின் அங்கு ஆநிரை மேய்த்தல், ஆநிரை காவல், தானியப்பயிர் விதைத்தல், தினைப்புனம் காவல் போன்றன நடைபெற்றன. ஆயர்கள் குடியிருப்பாதலின் தயிர், மோர் செய்வதும் விற்றலுமானத் தொழில்கள் நடந்தேறியன.

**மருதம்**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதமாகும். இங்கிருந்த நீர் வளத்தால் வேளாண்மைத் தொழில் முதன்மைத் தொழில்களாகக் அமைந்துள்ளது. இங்கு உழவு, பயிரிடல், கடாவிடுதல், புனையடித்தல், களைப்பறித்தல் போன்ற தொழில்களுடன் கள் விற்றல் தொழிலும் நிகழ்ந்துள்ளன.

**நெய்தல்**

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் ஆகும். இங்கு மீன் பிடித்தல், விற்றல், உலர்த்தல், உப்பு விளைவித்தல், விற்றல், கள் விற்றல், கடல் வாணிகம் புரிதல் போன்ற தொழில்கள் இடம்பெற்றுள்ளன.

**பாலை**

மணலும் மணல் சார்ந்த இடமும் பாலை என்பர். நானிலங்களில் முல்லையும், குறிஞ்சியும் வறட்சியால் தன் நிலையினின்று மாறுபடுவதால் இங்கு வாழ்ந்தவர்கள் மனம் மாற்றமடைகின்றனர். தங்கள் தொழிலை அதற்கேற்றவாறு ஏற்படுத்திக் கொண்டனர். அதன் விளைவாக இங்கு வழிப்பறிக் கொள்ளை செய்துள்ளனர். இதனை ஆறலைத்தல் என்பர். ஆறலைத்தல் செய்பவர் ஆறலைக் கள்வர் எனப் பெயர் பெற்றனர். நிலங்களின் தன்மைக்கேற்ப மனித மனங்கள், உழைப்பு மாற்றமடைவதை உணரமுடிகிறது.

**கொல்லர் தச்சர் தொழில்கள்**

பெருந்தொழில்களுக்குப் பயன்படும் வண்ணம் இரும்பு, தங்கம் செய்யும் கொல்லர்களின் தொழிலும் மர வேலைப் பார்க்கும் தச்சர்களின் தொழிலும் பொதுவானதாகக் காணப்படுகின்றன.

**கலையியற் தொழில்கள்**

கலையியற் தொழில்களில் இசைக்கலை, ஓவியக்கலை, கட்டடக்கலை, வண்ணம் தீட்டும் கலை ஆகிய தொழில்களும் இடம்பெற்றுள்ளன.

**பொதுவானத் தொழில்கள்**

ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த பழந்தமிழர்கள் போர்த் தொழிலிலும் வாணிகத்திலும் ஈடுபட்டுள்ளனர். நெய்தல் நிலத்தில் கடல் வாணிகம் மேலோங்கியும் பிற நிலங்களில் பண்டமாற்று முறை நிகழ்ந்ததையும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அறிவுசார் தொழில்களான அரசர், அந்தணர், தூதுவர், ஒற்றர், ஆசிரியர் ஆகியோரின் தொழில்கள் பொதுவானத் தொழில்களாகச் சுட்டப்பட்டுள்ளன.

**கரும்பு ஆலை**

பழந்தமிழர்கள் கரும்பு ஆலைகளில் இயந்திரத்தின் வழிக் கரும்புச்சார் எடுத்ததன்வழி இயந்திரத்தினைத் தொழிலில் பயன்படுத்தியதைக் காணமுடிகிறது.

**தொழிற்கருவிகள் தோற்றம்**

மனிதன் தொழில்களை மேற்கொள்ள முக்கியப் பங்கு வகிப்பவை கருவிகள் ஆகும். இக்கருவிகள் தொழில் செய்வதற்குத் துணையாக அமைகிறது. மனிதனுக்குத் துணைபுரிகிறது. கருவியானது ஆங்கிலத்தில்,

1. Instruments, tool, weapon, ayutam
2. Means, Materials, Taranam, Upakaranam
3. Faculties, Organs, Haranam
4. Painting, Cittiram
5. Tate Xaz
6. Coat of mail
7. Shield
8. Assembly, Collection, Tokuti
9. Secondary, Cause, Tunai karanam

என வழங்கப்படுகிறது.

கருவி என்பதற்கு "ஆயுதப்பொது, உபகரணம், கவசம், காரணம், கூட்டம், தொடர்பு, நட்பு, மெய்வாய் முதலி கருவி, மேகம், யாழ், வீணை, வாச்சியம், சாதணம், கேடகம், குதிரைக்கலனை, குதிரைச்சம்மட்டி, தொகுதி, வேட்டி, ஓவியம், கணைக்கரணம், இசை உண்டாவதற்குரிய யாழ் முதலிய கருவிகள், கைத்தாளம், பலவினைப்பெயர் அகக்கருவி, புறக்கருவிகள், பஞ்சக்கருவி, வீணைக்கருவி, கரணம்"[13] எனக் கழகத் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது.

Tool என்பதற்கு "a piece of equipment such as a hammer, that you hold in your hand(s) and use to do a particular job கையில் / கைகளில் பற்றிப் பிடித்துக் குறிப்பிட்ட பணியைச் செய்யப் பயன்படுத்தப்படும் சுத்தி முதலிய கருவி கைவினைக்கருவி"[14] என ஆங்கில அகராதி சுட்டுகிறது.

மேலும் இவ்வகராதி "வழக்கமாக, கையில் பிடித்துப் பயன்படுத்தப்படும் சுத்தி, திருகுமுடுக்கி முதலியவற்றை tool என்ற சொல்

குறிக்கும். பெரும்பாலும் பண்ணை வேலை, தோட்ட வேலை முதலிய வெளிப்புறப் பணிகளில் பயன்படுத்தப்படுவது implement எனப்படும். இயந்திரம் முதலியவை பொருத்தப்பட்டு மின் ஆற்றலால் இயங்கும் உறுப்புகளைக் கொண்டது machine ஆகும். பெரும்பாலும் தொழில் நுட்பம் சார்ந்த அல்லது மிக நுண்ணிய பணிகளுக்கு instrument பயன்படுத்தப்படும்.

பயனுடையதாகக் கருதப்படுவதும் குறிப்பிட்ட ஒரு பணி செய்வதற்காக வடிவமைக்கப்படுவதுமான ஒரு கருவியைக் குறிக்கும் பொது வழக்குச்சொல் device எனப்படும்"[15] எனக் குறிப்பிடுகிறது.

கருவி என்பதற்குத் திருவள்ளுவர்,

**"அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா அரண்"**[16]

என்கிறார். அறிவு நமக்கு அழிவு வராமல் காக்கும் ஆயுதம். பகைவராலும் அழிக்க முடியாத உட்கோட்டை எனச் சுட்டுகிறார். அதாவது கருவி என்பது பாதுகாப்புக் கவசம் எனச் சுட்டப்படுகிறது.

இதனால் கருவியானது ஒரு செயலைச் செய்வதற்குப் பயன்படும் இன்றியமையாத, பாதுகாப்பான, துணையாக அமையும் ஓர் உறுப்பு ஆகும் எனலாம்.

**கருவிகளின் தோற்றம்**

தொழில்களைச் செய்யப் பயன்படும் கருவிகளின் தோற்றம் பற்றி அறிதல் இன்றியமையாததாகிறது. மனிதன் தொழில் செய்வதற்கு முதலில் குச்சி, கோல், கல் ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளான். இக்கருத்தை "இயற்கையோடு வாழ்ந்த ஆதிகால மனிதன் எழும்புகளையும் கற்களையும் கருவிகளாகப் பயன்படுத்தி வந்தான். அவை சில முழுமையான வடிவம் இல்லாததாகவும் கரடுமுரடானதாகவும் இருந்தன"[17] என அ.ஹ.முகைதீன்பாதுஷா கூற்றின்வழியும், "மிருகங்களும் இயற்கையும் மனிதர்களை ஒருசேர வாட்டிய காலம் கொடுரமானது. விலங்குகள் துரத்தினால் அவர்கள் ஓடினர். பின்பு கற்களை எடுத்து விலங்குகளைத் தாக்கினர். மனிதர்கள் முதலில் கண்ட கருவியும் ஆயுதமும் கல்தான்"[18] என எஸ்.ஏ.பெருமாள் கூற்றின் வழியும் அறியமுடிகிறது.

இயற்கையாய் விளைந்த காய், கனிகளை உண்ட மனிதன், இயற்கையாய் தீப்பிடித்து எரியப்பட்ட மாமிசத் துண்டுகளைத் திண்டான். பின் அதன் ருசியை அறிந்து அதற்குப் பழக்கப்பட்டான். பின் எவ்வாறு தீ உருவாக்க வேண்டும் என்பதையறிந்து கற்களை உரசித் தீ மூட்டக் கற்றுக் கொண்டான். மண்ணில் விளைந்த கிழங்குகளைத் திண்பதற்காகக் குச்சிகளைக் கொண்டு மண்ணைக் கீறி அதனைப் பெற்றுக் கொண்டான். எங்கிருந்தோ வரும் பறவைகளின் எச்சங்களின் வழியாக மண்ணில் விதைகள் விதைக்கப்படுவதை உணர்ந்த மனிதன் தானும் மண்ணில் விதைப்போடக் கற்றுக் கொண்டான்.

பெண்கள் தங்கள் இருப்பிடங்களின் பக்கத்திலே மண்ணைக் கீறி விதைகளைப் போட்டுச் சிறு செடிகளையும் பயிர்களையும் உருவாக்கினர். இதனால் பெண்கள் வேளாண்மையில் முதலில் ஈடுபட்டுள்ளனர் எனலாம். “உணவு தேடுதலுக்கும், தாகம் தணிப்பதற்கும் பின்நாளில் உழவுத் தொழிலுக்கும் அடிப்படையாக இருந்த மழையைத் தருவிக்கும் ஆற்றல் பெண்ணிடமே இருந்தது என்று நம்பப்பெற்றது. ஆப்பிரிக்காவில் மந்திரவாதியாக இருக்கும் பெண், மந்திரம் செய்து மழையை வருவிப்பாள்; தடுப்பாள் என்று நம்பப்பட்டது”[19] என்ற க.ப.அறவாணனின் கூற்று குறிப்பிடத்தக்கதாகும். இதன்வழி பெண்கள் வேளாண்மையில் முதன்மை வகித்தனர் என்பதை உணரமுடிகின்றது.

வேட்டைக்கும் சென்றுள்ளனர். வேட்டையில், வில், அம்பு, வேல் போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர், இக்கருவிகள் நாளடைவில் வளர்ச்சியடைந்து பெருகலாயிற்று. இதனையே, “நமது வரலாற்றுக்கு முந்திய மூதாதையர்கள் மரங்களில் வசித்த போது, பல்வேறு பணிகளைச் செய்ய தங்களது கால்களை விடுத்தும் கைகளாலேயே செய்ய படிப்படியாகக் கற்றுக் கொண்டார்கள். பழத்தையும் கொட்டையையும் பறிக்க கவர்முள் வடிவுடைய அடிமரங்களில் கூடுகளைக் கட்டவும் அவை தங்களது கைகளைப் பயன்படுத்தின.

ஆனால் ஒரு கொட்டையைப் பற்றிப் பிடிக்கக்கூடிய ஒரு கை ஒரு குச்சி அல்லது ஒரு கல்லையும் பற்றிப் பிடிக்கும். மேலும் ஒரு

குச்சியை அல்லது கல்லைப் பற்றிய அதே கைதான் அவற்றை நீளமானவையாகவும் வலுவானவையாகவும் ஆக்கின.

உடைப்பதற்குக் கடினமான ஒரு கொட்டையை ஒரு கல்லால் உடைக்க முடியும். சுவையான ஒரு வேரை தரையிலிருந்து ஒரு குச்சியால் தோண்டி எடுக்க முடியும். இவ்வாறாக வரலாற்றுக் காலத்திற்கு முந்திய மனிதன் தனது உணவைப் பெறுவதற்காக அடிக்கடி இத்தகைய கருவிகளைப் பயன்படுத்தத் தொடங்குகிறார்கள்"[20] என மனிதன் எங்ஙனம் பேராற்றல் மிக்கவன் ஆனான் என்ற நூல் குறிப்பிடுகிறது.

கருவிகளைப் பற்றி 'பண்டை இந்தியா பண்பாடும் நாகரிகமும்' என்னும் நூலில் "உலகத்தின் அத்தகைய பகுதிகளில் விரிவாகத் தோண்டி எடுக்கப்பட்ட தொல்பொருள் ஆராய்ச்சிச் சான்றுகள் உத்தேசமாகக் கீழ்க்கண்ட வரிசையைக் காட்டுகின்றன. மிகக் கீழ்மட்டத்தில் எனவே மிகப் பழமையை எடுத்துக்காட்டும் மனிதனால் ஒதுக்கப்பட்ட நயமற்றகற்கள் கிடைக்கின்றன. இவற்றுடன் மரத்துண்டுகள், எழும்புகள் ஆகியனவும் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டன. மரத்தாலும், எலும்பாலும் செய்த கருவிகள் இற்றுப்போய் மண்ணுடன் கலந்திருக்கலாம்.

இப்பழைய கற்காலம் (Palaeolithic) கற்களை நன்கு துண்டுகளாகச் செதுக்கிக் கருவிகளாகப் பயன்படுத்தும் அளவுக்கு மெல்ல முன்னேற்றம் பெற லட்சம் ஆண்டுகளுக்கு அதிகமாகவே பிடித்தன. பிறகு பளபளப்பாக மெருகுடன் விளங்கும் கற்கருவிகளை உபயோகப்படுத்திய புதிய கற்காலம் (Neolithic) வந்தது. இவை இரண்டிற்கும் இடையிலுள்ளது 'மெசோலிதிக்' காலம் என்று அழைக்கப்படுகிறது. இப்போது இச்சொல் வழக்கில் இல்லை. இது நீடித்த பரப்பும் காலமும் உறுதி செய்ய முடியாதவை. கற்கருவிகளை மட்டுமே (எலும்பு, மரம், கொம்புஆகியவற்றால் செய்யப்பட்டதாகவும் உய்த்தறியலாம்) கொண்ட இந்த மண் அடுக்கை உலோகத்தினால் செய்த கருவிகளும் ஆயுதங்களும் கொண்ட மண் அடுக்குகள் காலப்போக்கில் மூடிவிட்டன.

பெரிய அளவில் முதலாவதாக உபயோகிக்கப்பட்ட உலோகம் தாமிரமாகும். தாமிரத்தைக் கனியிலிருந்து பிரித்தெடுக்க ஒரு சூளை

போதுமானது. மட்பாண்டங்களைச் சுடும் சூளைக்கு வேண்டிய நுட்பம் கூட இதற்குத் தேவையில்லை"[21] என டி.டி.கோசாம்பி கருவிகளின் தோற்றம் பற்றி விளக்கம் அளிக்கிறார். தொழிற்புரட்சிப் பற்றி "மனித இனம் முதன்முதலில் கண்ட 'தொழிற்புரட்சி' புதிய கற்கருவிக்கால நாகரிகத்தின் பொழுது நடைபெற்றதாகும். உலக வரலாற்றின் ஏடுகளைப் புரட்டினால், நாம் இந்த உண்மையினை உணரலாம்.

ஆனால் அது பல்வேறு காலங்களில், பல்வேறு நாடுகளில் நடைபெற்றது என்பதை அறிகிறோம். புதிய கற்கருவி நாகரிகக் காலத்தில் தான் மனிதன் உணவைத் தேடுவதையும், உணவுப் பொருட்களுக்காக வேட்டையாடுவதையும் கைவிட்டு உணவுப் பொருட்களைப் பயிரிடக் கற்றான். அதன்மூலம் புதிய வாழ்க்கை முறைகளை அவன் அறிந்தான். அவற்றால் நாகரிக வளர்ச்சியுமுற்றான்.

உழவுத் தொழிலோடு வரலாறு வளர்கிறது. அதனுடன் தொழில் நுட்பங்களும் வாழ்க்கை முறைகளும் இணைந்தும், வளர்ந்தும், சிறந்தும் உள்ளன. உணவுப் பொருள்களைப் பயிரிடுவது விலங்குகளால் பழக்குவது மட்பாண்டங்கள் செய்வது ஆகிய மூன்றும் புதிய கற்கருவிக் காலத்தில் சமூகப் பொருளாதாரத் துறைகளில் சாதிக்கப்பெற்ற மாபெரும் சாதனைகளாகும்"[22] என தொழில் வளர்ச்சி முறையைத் 'தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு' என்னும் நூல் சுட்டுகிறது.

"இக்காலத்திலும் இந்தோனேசிய மக்கள், தங்களுக்குத் தேவையான உணவுப் பொருளை ஓரளவிற்கு வேட்டையாடுதல், மீன் பிடித்தல் மூலமும் பெற்றனர். பேரளவிற்கு உழவுத்தொழில் செய்து அவர்கள் அவர்கள் உணவுப் பொருள்களை விளைவித்தனர்"[23] எனவும் இந்நூல் சுட்டுகிறது.

**கால அடிப்படையில் கருவிகள்**

மனிதன் தோன்றிய காலம் முதல் இன்று வரை காலங்களைக் கற்காலம், புதிய காலம், செம்புக்காலம், உலோகக்காலம் என்றெல்லாம் வரலாற்றாசிரியர்கள் வகைப்படுத்துகின்றனர்.

இதனடிப்படையில் கருவிகள் உருவான வரலாற்றை “கல்யுகம் நான்கு பிரிவுகளைக் கொண்டது. லிதிக் பீரியட் என்றால் கற்காலம என்று பொருள். இயோ லிதிக் பீரியட என்றால் உதய கற்காலம். பாலியோ லீதிக் பீரியட் என்றால் பழைய கற்காலம். மெஸோ லிதிக் பீரியட் என்றால் மத்திய கற்காலம். நமது தமிழ் நாட்டில் உதய கற்காலம் தொட்டே மனிதர்கள் வாழ்ந்துள்ளனர். அது முப்பத்தைந்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமென்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்”[24] என. எஸ். ஏ. பெருமாள் எடுத்தியம்புகிறார்.

“பல நூற்றாண்டுகள் மனிதர்கள் உணவு சேகரிக்க மற்ற உயிரினங்கள் போன்று அலைந்து திரிந்து வாழ்ந்தனர். கருவி செய்யும் விலங்கான மனிதன் கைக்குக் கிடைத்தக் கற்களை அப்படியே பயன்படுத்திய காலம் பழைய கற்காலம் ஆகும். அவர்கள் தீயின் பயன்பற்றி அறிந்திருந்தார்கள். உணவு சேகரித்தல், வேட்டையாடுதல் தொழில்களாயின. வில், அம்பு அக்காலத்து முக்கிய கருவிகளாகும். மரக்கலம் நார்த்துணிகள் இருந்தன.

திண்ணிய மரங்களால் ஆயுதங்கள் செய்தனர். ஓசைச்சீருள்ள பேச்சுத் தோன்றியது. தமிழ்நாட்டு மலைவாழ் மக்கள் காடவர், இருளர். பளியர் வாழ்க்கையில் உலோக முற்காலத்தின் எச்சங்கள் காணப்படுகின்றன”[25] என விளக்குகிறது தமிழக வரலாற்றில் ஒளிர்வது களப்பிரர் காலம் என்னும் நூல்.

“காடுகளை எரித்துப் பயிர் செய்யும்முறை ஏரால் உழும் முறைக்கு வழிவிட்டது. முதல் கொழு மரத்தால் ஆனது. அதற்குப் பிறகு இரும்புக்கொளு பழக்கமாயிற்று. இரும்புக்கோடரி காட்டை அழிக்கப் பயன்பட்டது. கொல்லு வேலை, இரும்பு உருக்குதல், கால்வாய் வெட்டுதல் குளம் தோண்டுதல் ஆகிய தொழில்கள் வளர்ந்தன. தச்சு, கொல்லு, நெசவு, படகு கட்டுதல் போன்ற வேலைகள் தோன்றின. தொழில் திறமையிலும், விவசாயம் உத்திகளிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டன. சமுதாயம் கைவினைஞர்களைக் காப்பாற்றியது. இதற்கு உபரி உற்பத்தி அகம் தேவையாயிற்று. இது உழைப்புச் சக்தியை அதிகப்படி வேலை வாங்கியது.

இந்நிலை நகர வளர்ச்சிக்கு வழி செய்தது. இவற்றின் இணைப்புச் சத்தியாக அரசு தோன்றிற்று. புரோகிதர் இந்நிலையை நிலைநாட்டக் காரணம் ஆனார். உபரி வணிகரைத் தோற்றுவித்தது. இவ்வகையில் இனக்குழு வாழ்க்கை பழைய கற்காலத்தில் உணவு சேகரித்தல் வேட்டையாடுதல் தொழில்களும், புதிய கற்காலத்தில் புராதன விவசாயம், கால்நடை வளர்த்தல் ஆகிய தொழில்களும் உலோகக் காலத்தில் ஏரால் பயிர் செய்யும் பிற தொழில்களுல் முக்கியத்துவம் பெற்றிருந்தன”[26] எனவும் இந்நூல் உணர்த்துகிறது.

இவற்றை நோக்குகையில் சங்க இலக்கியங்களில் காணலாகும் தொழிற்கருவிகளின் வழி இவ்விலக்கியங்கள் கற்காலத்தில் தோன்றியவை என்பதை உணர்த்துகின்றன.

**தொழிற்கருவிகள்**

தொழில்களுக்குப் பயன்பட்ட கருவிகளாகக் கீழ்க்கண்டவை காணப்படுகின்றன.

**தேனெடுத்தல்**

தேனெடுத்தல் தொழிலில் மூங்கில் மரத்தால் செய்த ‘கண்ணேணி’ மற்றும் வில் கோல் போன்றவை பயன்படுத்தப்பட்டன.

**வேட்டையாடுதல்**

வேட்டைத் தொழிலில் வில், வாள், வேல், அம்பு போன்றவை பயன்படுத்தப்பட்டன.

**காவல்**

காவல் தொழில் தினைப்புனம், காவல், நகர்புறம் காவல் என இருநிலைகளில் நடந்தேறியுள்ளது. காவலில் ஆண், பெண் இருபாலரும் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் தட்டை, குளிர், தழல், கணை, ஞெகிழி, அடார் என்னும் கருவிகளைக் கொண்டு ஓசையெழுப்பித் தினைப் பயிர்களைக் காத்தனர். மேலும் வயல்களில் நெற்கதிர்களைத் திண்ண வரும் பறவைகளை விரட்டுவதற்குத் ‘தண்ணுமை’ ஆகிய இசைக் கருவியும் பயன்படுத்தப்பட்டுள்ளன. நகர்புறம் காவலில் ‘உளி’ என்னும் இரும்பால் ஆன கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**ஆநிரை மேய்த்தல்**

ஆநிரை மேய்த்தல் தொழிலில், தீக்கடைக்கோல், கோல், குழல் போன்ற கருவிகள் பயன்பாட்டிலிருந்தன.

**தயிர் மோர் விற்றல்**

தயிர், மோர் கடைந்து விற்கும் தொழிலில் 'மத்து' எனும் கருவி பயன்படுத்தப்பட்டது. தயிரைக் கலத்தில் வைத்துச் சென்று விற்றுள்ளனர்.

**உழவு**

உழவுத் தொழிலில் நாஞ்சில், கலப்பை, கொழு என்றழைக்கப்படும் ஏர்கலப்பைப் பயன்படுத்தப்பட்டது. மேலும் தளம்பு ஏற்றம், கிழார் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**களைபறித்தல்**

வேளாண்மைத் தொழிலில் முதன்மை உழவு அதனைத் தொடர்ந்து நிகழும் தொழில்களாக விதைத்தல், களை பறித்தல், கதிர் அறுத்தல், கடாவிடுதல் ஆகியன நிகழும். களை பறித்தலில் 'துளர்' என்னும் கருவி பயன்படுத்தப்பட்டது. இதனை இன்று 'களைக்கொத்து' என்று வழக்கில் கொண்டுள்ளனர். கடாவிடுதல் என்பது புனையடித்தல் என்று அழைக்கப்படும். இச்செயலில் கால்நடைகள் பயன்படுத்தப்பட்டன. நெல் உதிர்ந்த கதிர் சக்கைகளைப் புனையடிக்க கால்நடைகள் பயன்படுத்தப்பட்டன. அறுவடைத் தொழிலில் வளைந்த இயல்புடைய கதிர் அறுவாள் பயன்படுத்தப்பட்டது. இதனைக் குயம் என இலக்கியங்கள் சுட்டுகின்றன. இன்றைய நடைமுறையில் 'கறுக்கருவா' என்று அழைக்கின்றனர்.

**மீன் பிடித்தல்**

மீன் பிடித்தலில் தூண்டில், எறி உளி, மீன் பொறி, வலை, பறி, படகு ஆகியன கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டன.

**வாணிகம்**

கடற்கரையோரங்களில் வாணிகம் சிறப்புற்றிருந்தமையைப் பண்டை இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வாணிகம் படகு, கப்பல், நாவாய் போன்றவற்றில் நடைபெற்றது. அயலகத்திலிருந்து குதிரை

போன்றவை இறக்குமதி செய்யப்பட்டது. இங்கிருந்து பொன், முத்து, மிளகு ஆகியன ஏற்றுமதி செய்யப்பட்டன.

**கள்வர் தொழில்**

களவுத் தொழிலில் ஈடுபட்டோர் அம்பு, ஈட்டி, வாள், உளி போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**போர்த்தொழில்**

போரில் கேடயம் வில், வாள், ஈட்டி, வேல், அம்பு, தோல்பரிசை, மெய்க்கவசம் போன்ற இரும்பால் ஆகிய கருவிகள் பயன்படுத்தப்பட்டன.

**தச்சர், கொல்லர் தொழில்**

தச்சுத் தொழில் என்பது மரத்தால் செய்யப்படும் தொழில் ஆகும். இத்தொழில் செய்பவர் 'தச்சர்' எனப்படுகின்றனர். மரத்தால் பலகைகள், வண்டிகள், சக்கரங்கள், தேர் ஆகியன செய்யப்படுகின்றன. இன்றைய சூழலில் தச்சு வேலை பார்ப்போர் 'ஆசாரி', 'மர ஆசாரி' என்றழைக்கப்படுகின்றனர். இவற்றில் இரும்பு, மரம், உளி ஆகிய கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. கொல்லர் தொழில் இரண்டினடிப்படையில் நடைபெறுகிறது. இரும்புப் பட்டறை வைத்திருக்கும் இரும்புக் கொல்லன் தொழில், பொன்னை உருக்கி நகை செய்யும் பொற்கொல்லற் தொழில் என நடைபெறுகிறது. இரும்புப் பட்டறையில் கொல்லன் உலையில் இரும்புகளை உருக்கி வில், அம்பு, வாள், வேல், ஈட்டி போன்றவற்றைச் செய்தளிக்கிறார்.

உலையில் 'ஊது உலை' என்னும் கருவியைப் பயன்படுத்துகின்றனர். பொற்கொல்லர் தங்கத்தை உருக்கி அணிகலன்கள் செய்து தருகின்றனர். பொற்கொல்லர் 'உரைக்கல்' என்னும் கருவியை உபயோகப்படுத்துகின்றனர்.

**மட்கலத்தொழில்**

மண்ணால் செய்யப்படும் தொழில் மட்கலத்தொழில் எனப்படும். இத்தொழில் செய்வோர் 'குயவர்' என அழைக்கப்படுகின்றார். மண்ணைக் கொண்டு குழிசி, சாடி, கலன், கன்னல், தசும்பு, மண்டை ஆகிய

புலங்கு பொருட்கள் செய்யப்படுகின்றன. இவற்றில் சக்கரம் கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது.

**நெசவுத்தொழில்**

நெசவுத் தொழிலைப் பற்றி,

**"கூழை விரித்தல் காதொன்று களைதல்**
**ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலோ**
**டூழி நான்கே இரண்டென மொழிப"[26]**

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இத்தொழிலில் பஞ்சு, நூல், வில் போன்றன பயன்படுத்தப்பட்டன.

பண்டையத் தமிழர்கள் நெசவுத் தொழிலில் சிறப்புற்றிருந்தனர். பாம்புத்தோல் போன்ற மெல்லிய ஆடையை நெய்துள்ளனர். பூ வேலைப்பாடுடைய ஆடைகளைத் தயாரித்துள்ளனர்.

"மரங்களில் வளரும் பஞ்சு என்றும், ஆட்டு ரோமங்களால் உண்டாக்கும் கம்பளிகளிலும் மேலானது"[27] என்று ஹெரடோடஸ் என்னும் யவன ஆசிரியர் நம் நாட்டுப் பஞ்சின் பெருமையை உரைக்கிறார்.

பழந்தமிழரின் நெசவுத் தொழிலின் பெருமையை "பட்டிலும் பஞ்சிலும் சீலை நெசவு செய்தல் அக்காலத்தில் சிறந்திருந்ததென்பதைச் சங்க நூல்களிலிருந்து அறியலாம். நூற்சீலையிலும், பட்டுச் சீலையிலும் சிறந்த சித்திர வேலைப்பாடுகள் செய்தனர் தமிழர்"[28] என்று உரைக்கிறார் சு.வித்தியானந்தம்.

**பாத்திரத்தொழில்**

பல்வகை உலோகங்களைப் பயன்படுத்திப் பாத்திரங்களைச் செய்த பாத்திரத் தொழிலாளிகளும் காணப்படுகின்றனர். வெண்கலம், வெள்ளி, செம்பு ஆகியவற்றைக் கொண்டு கலன்களைச் செய்துள்ளனர்.

**அணிகலன் தொழில்**

அணிகலன் தொழில் செய்வதற்கு 'அச்சுப்பொறி' பயன்படுத்தப்பட்டது. இவை வெள்ளி, பொன் ஆகியவற்றை உருக்குவதற்குப் பயன்பட்டது.

**தோல் தொழில்**

சங்க இலக்கியங்கள் தோல் தொழிலில் பழந்தமிழர் சிறப்புற்றிருந்தனர் என்பதை நயம்பட உவமைகள் வாயிலாக விளக்குகின்றன. உடும்புத்தோல், புலித்தோலால் ஊதுளைக்கருவி செய்யப்பட்டது. கைச்சரடு, மெய்புதை அரணம் ஆகியவை விலங்குகளின் தோலினால் செய்யப்பட்டவை ஆகும். யாழின் போர்வை ஆடு, மாடு, மான் ஆகிய விலங்குகளின் தோல் படுக்கைகளாகப் பயன்படுத்தப்பட்டன. வேள்வி செய்வோர் மான் தோலால் ஆன தோலணியை அணிந்தனர்.

**கைவினைத் தொழில்கள்**

பழந்தமிழர்கள் பனை, தென்னை மர ஓலைகளில் கைவினைப் பொருட்களாகிய குடை, கூடை, உண்கலம், வட்டி, பெட்டி, முறம் (சொலகு) ஆகியவற்றைச் செய்தனர். ஓலைப்பாய் போன்றனவும் செய்யப்பட்டது.

**பொம்மைத் தொழில்**

பழந்தமிழர்கள் தாம் பொழுது போக்கிற்காக பாவை மரப்பாச்சி போன்றன செய்து விளையாடினர். குழந்தைகளின் விளையாட்டுப் பொருட்களாகப் பொம்மைகள் செய்யப்பட்டதை இலக்கியங்கள் விளம்புகின்றன. அவற்றில் கிலுகிலுப்பை, கிளிஞ்சலின் உள்ளே முத்துக்களை வைத்து ஆட்டப்படும் ஒரு விளையாட்டுப் பொருள் ஆகும். மரப்பொம்மைகளாக நடை வண்டி, தேர், முரசு, யானை போன்றனவும் செய்யப்பட்டு விளையாட்டுப் பொருள்களாக இருந்தன.

**சாயம் காய்ச்சும் தொழில்**

உடலுக்கு அழகைக் கொடுக்கும் கருங்காலியைச் சீவிக்காய்ச்சி அதனைப் பசிய பாக்குடன் கலந்து சாயப்பாக்குத் தயாரிக்கும் தொழில் நடந்தேறியதை,

**"தகைசெய் தீம்சேற்று இன்னீர் பசுங்காய்**
**நீடுகொடி இலையினர் கோடு சுடு நூற்றினர்" (மதுரை.400-401)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

**சுண்ணம் தயாரித்தல்**

சுண்ணப்பொடி தயாரிக்கும் பழக்கமும் பழந்தமிழரிடையே காணப்பட்டதை,

**"பலர்தொகுபு இடித்த தாதுஉகு சுண்ணத்தார்"** (மதுரை.399)

என்னுமடி உணர்த்துகின்றது. சுண்ணப்பொடி பல பேர் சேர்ந்து இடிக்கப்பட்டதை இவ்வடி உணர்த்துகின்றது.

**பூவிற்றல் தொழில்**

பூ விற்றல் தொழிலும் நடைபெற்றதை மதுரைக்காஞ்சி,

**"பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்"** (397)

என்ற அடியின் வழி விளக்குகிறது. பலவகை பூக்களை விற்பனை செய்திருப்பதை அறியமுடிகிறது.

**கயிறு திரித்தல் தொழில்**

சங்க இலக்கியம் கயிறுதிரித்தல் தொழில் பற்றி உணர்த்துகிறது. பழந்தமிழர் கயிறு திரித்தல் தொழிலிலும் சிறப்புற்று இருந்தனர். கயிறுகளைக் கொண்டு பொருட்களைக் கட்டுவதற்குப் பயன்படுத்தியமையைக் காணமுடிகிறது. மேலும் கன்று, யானை போன்றவைகளைக் கட்டுவதற்குக் கயிறுகள் பயன்படுத்தப்பட்டதை,

**"கயிறுபிணிக் கொண்ட ….. பெருங்கையானை"** (புறநா.3:10)

என்ற புறநானூற்றடி விளக்கும். கயிறு என்பது தாம்பு எனவும் அழைக்கப்பட்டது. கன்றுகளைக் கட்டப் பயன்படும் கயிற்றினை 'தாம்பு' என்றழைத்தனர் பழந்தமிழர். இவற்றினை,

**"சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்"** (முல்லை.12)

என்ற அடி விளக்கும். ஆயர்குலப் பெண்டிர் தயிரைக் கடைவதற்குக் கயிற்றினைப் பயன்படுத்தினர் என்பதை,

**"மத்துக் கயிறாடா வைகற் பொழுது"** (பதிற்.71:16)

என்ற பதிற்றுப்பத்து அடி குறிப்பிடுகிறது. முல்லைநிலப் பெண்கள் கயிற்றால் ஆன வலை போன்ற உறியைப் பயன்படுத்தினர். இதனை,

**"இமிழிசை மண்டை உறியொடு தூக்கி"** (கலித்.106:2)

என்னும் அடி விளம்பும். இதேபோன்று கடலில் செல்லும் படகுகளைக் கட்டுவதற்கும் கயிற்றினைப் பயன்படுத்தியுள்ளனர். பழந்தமிழர் விலங்கு,

பறவைகளைப் பிடிப்பதற்கும், வலைகள் செய்வதற்கும் கயிற்றினைப் பயன்படுத்தி உள்ளனர். இன்றும் பல்வேறு பொருள்கள், தானியங்கள் ஆகியவற்றைக் கட்டுவதற்குக் கயிற்றினைப் பயன்படுத்துகிறோம்.

**நூல் தொழில்**

தமிழர்கள் நூல் கொண்டு ஆடைகளை நெய்வதற்கும் நூலேனி, சிமிளி போன்ற பொருள்களைச் செய்வதற்கும் நூலைப் பயன்படுத்தியுள்ளனர்.

அரண்மனையின் முற்றத்தில் நூலால் ஆன பந்தையும் பாவையையும் தொங்கவிட்டிருப்பர் மன்னர்கள். களவுத்தொழிலில் கள்வர்கள் நூலால் ஆன ஏணியைப் பயன்படுதியுள்ளனர். இதனை,

**''மென்னூல் ஏணிப் பன்மாண் சுற்றினர்'' (மதுரை.640)**

என்னும் அடி செப்புகின்றது.

சிமிலி என்னும் நூல் உறியை முக்காலமும் உணரும் அறிவுடையோரான சான்றோர் விரதங்களை மேற்கொள்வதற்கு வேண்டிய ஒடுங்கிய பாயையுடைய குண்டிகைகளைப் பல வடங்களால் ஆன நூல் உறியிலே இட்டு வழங்குவர். இவற்றிற்கு நூல் பயன்பட்டமையை,

**''ஆன்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்**
**கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்**
**பல்புரிச் சிமிலி நாற்றி'' (மதுரை.481-483)**

என்ற மதுரைக்காஞ்சியடிகள் விளக்குகின்றன. இவ்வாறாக நூல் தொழிலிலும் பழந்தமிழர் சிறப்புற்றிருந்தனர் என்பதைக் காணமுடிகிறது.

**கள் தயாரித்தல்**

சங்க இலக்கியங்கள் பழந்தமிழர்கள் கள் உண்டு வாழ்ந்ததைத் தெளிவுபடுத்துகின்றன. தங்கள் உணவுப் பழக்க முறையில் கள் அருந்துவதை ஒன்றாகக் கொண்டிருந்தனர். அத்தகைய கள் தயாரிக்கும் தொழிலும் பழந்தமிழரிடையே காணப்பட்டது. கள் தயாரித்தலில் கள் வடித்தல், கள் விற்றல், கள்ளைப் பாதுகாத்தல் ஆகிய செயல்முறைகள் காணப்படுகின்றன. கள் தயாரிக்கும் முறையில் பெண்களும் ஈடுபட்டனர். பெண்கள் தங்கள் இல்லத்தில் கள் இறக்கியதைச் சங்க இலக்கியம் விளம்புகிறது. கள் விற்கப்பட்டதை மதுரைக்காஞ்சியின் வாயிலாக

அறியமுடிகிறது. பண்டமாற்று முறையில் கள் பயன்படத்தப்பட்டதை ஆற்றுப்படை நூல்கள் இயம்புகின்றன. கள் என்னும் மதுபானம் மகிழ்ச்சியான வேளையில் களிப்பூட்டும் உணவு வகையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

**சலவைத் தொழில்**

சங்க இலக்கியத்தில் சலவைத் தொழில் பற்றிய குறிப்புகள் உள்ளன. சலவைத் தொழில் என்பது ஆடை வெளுக்கும் தொழில், இன்று வண்ணார் தொழில் என்பர், ஆடை வெளுப்பவர் காழியர் எனப்பட்டனர். ஆடை வெளுக்கும் தொழிலில் பெண்களும் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் புலைத்தியர் எனப்பட்டனர்.

**கட்டடத்தொழில்**

பண்டைய தமிழர்கள் கட்டடக் கலையிலும் மேலோங்கியிருந்தனர் என்பதைப் புலப்படுத்துவனவாகச் சங்க இலக்கியம் அமைகிறது. தங்கள் வசதிக்கேற்பத் தங்கள் இருப்பிடங்களை அமைத்துக் கொண்டிருந்தனர். வைக்கோல் முதலிய சிறுபுல்லால் வேயப்பட்ட சிறுகுடில் முதல் மாடமாளிகை வரை மக்கள் தங்கள் வசதிக்கேற்றவாறு இல்லங்களை அமைத்துக் கொண்டிருந்தனர்.

பழந்தமிழர்களின் நாகரிகம் மற்றும் பொருளாதார வளர்ச்சியை அவர்கள் கட்டிடத்திற்குப் பயன்படுத்தியப் பொருட்கள் கொண்டு காணமுடிகிறது. பெரும்பாணாற்றுப்படை பழந்தமிழர் நிலத்திற்கேற்ற வகையில் வீடுகட்டி வாழ்ந்ததைப் புலப்படுத்துகின்றது. வீடு கட்ட மூங்கில், வைக்கோல், மரம், கல், மண் போன்றவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

கட்டிடங்கள் கட்டுவதற்கு முன் நாள், நேரம், திசை பார்த்துக் கட்டியுள்ளனர். இன்றும் தச்சு செய்வது, திசை பார்ப்பது என்ற பழக்கம் நடைமுறையில் கடைபிடிக்கப்படுவதை அறியமுடிகிறது. கட்டிடக்கலையின் பிரமாண்டத்தைப் பண்டை மாடமாளிகைகள், அரண்மனை ஆகியவற்றின் மூலம் அறியமுடிகிறது.

## தொகுப்புரை

- தொழில் என்பது மனிதனின் இயக்க சக்தியுடன் கூடிய பண்பை உணர்த்துகிறது.
- தொழில் மனிதனின் வாழ்வின் ஆதாரமானது. அது நிலம், பொழுது, பழக்க வழக்கம், சமுதாய உருமாற்றம், வளர்ச்சிநிலையை எடுத்தியம்புகின்றது.
- கருவிகளைக் கொண்டு காலங்கள் பிரிக்கப்படுகின்றன.
- புதிய கற்காலத்தில் சங்க இலக்கியங்கள் தோன்றியமை தெரியலாகின்றது.
- இரும்புக் காலத்திற்குப் பிறகு கருவிகளின் வளர்ச்சி அதிகளவில் காணப்படுகின்றது.
- பெரும்பான்மையான கருவிகள் இரும்பால் செய்யப்பட்டதை அறிய முடிகின்றது.
- ஐவகை நிலங்களில் அவற்றிற்கேற்ற வகைகளில் தொழில்கள் நடைபெற்றுள்ளன.
- போர், வணிகம், பண்டமாற்று போன்ற தொழில்கள் அனைத்து நிலங்களிலும் காணப்படுகின்றன.
- வேட்டை, ஆநிரை மேய்த்தல், வேளாண்மை, மீன் பிடித்தல், களவுத் தொழில் ஆகியன முதன்மைத் தொழில்களாக இருந்துள்ளன.
- கலையியற் சார்ந்த இசைத்தொழில், கட்டடத்தொழில், ஓவியத்தொழில், சிற்பத் தொழில் ஆகியனவும் இருந்துள்ளன.

- கண்ணேணி, வில், வாள், அம்பு, தோற்பரிசை, கேடயம், ஈட்டி, கதை, தோட்டி, தழல், தட்டை, குளிர், ஞெகிளி, கிளை, குயம், துளர், வலை படகு, எறி உளி, உளி, பறி, தூண்டில், கொம்பு, தூம்பு, யாழ், பறை, அடார், தண்ணுமை, குழல், நாஞ்சில் (கலப்பை) கொளு, மணி, சங்கு, அரம், தோல், ஓலை, கயிறு, நாழிகைவட்டில், வட்டில், ஆம்பி, பத்தர், தீக்கடைக்கோல், கம்பு, படகு, ஊசி ஜாடி போன்றவை தொழில்களில் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டன என்பதை அறியமுடிகின்றது.
- பழந்தமிழர்கள் நிலம்சார் தொழில், கைவினைத் தொழில், வாழ்வியல் தொழில், அறிவுசார் தொழில், கலையியற் தொழில், வணிகத்தொழில், போர்த்தொழில் ஆகிய தொழில்களில் கைதேர்ந்தவர்களாகத் திகழ்துள்ளனர்.

**சான்றெண் விளக்கம்**

1. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்., ப.16.
2. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.583.
3. ஆசிரியர் குழு, நர்மதா தமிழகராதி, ப.465.
4. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.36.
5. மேலது., பக்.36-37.
6. Dr.V.Murugan, Oxford English - English - Tamil Disctionary, ப.971.
7. மேலது., ப.1604.
8. மேலது., ப.1605.
9. அன்னிதமாசு (ப.ஆ.)., தமிழக மகளிரியல், ப.61.
10. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.37.
11. இளங்கோவடிகள், சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், ப.291.
12. இளம்பூரணர் (உ.ஆ.) தொல்காப்பியம், பொருள்.,மூலமும் உரையும், ப.146.
13. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, பக்.289-290.
14. Dr.V.Murugan, Oxford English - English - Tamil Disctionary, ப.1476.
15. மேலது., பக்.1476-1477.
16. திருவள்ளுவர், திருக்குறள் பரிமேலழகர் உரை, ப.134.
17. அ.ஹ.முகைதீன்பாதுஷா, தொல்லியல் விதிகளும் வகைகளும், ப.22.
18. எஸ்.ஏ.பெருமாள், மனிதகுல வரலாறு, ப.55.
19. க.ப.அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு பழந்தமிழர் வழிபாடுகள், ப.34.
20. நா.முகம்மது செரிபு (மொ.பெ.), மனிதன் எங்ஙனம் பேராற்றல் மிக்கவன் ஆனான், ப.36.

21. டி.டி.கோசாம்பி, பண்டைய இந்தியா, பக்.48-49.
22. க..திருநாவுக்கரசு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு, பக்.16-17.
23. மேலது., ப.17.
24. எஸ்.ஏ.பெருமாள். மனிதகுல வரலாறு, ப.55.
25. துளசி.இராமசாமி, தமிழக வரலாற்றில் ஒளிர்வது களப்பிரர் காலம், பக்.27-28.
26. மேலது., பக்.28-29.
27. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.152.
28. சு.வித்தியானந்தம், தமிழர் சால்பு, ப.158.

## இயல் இரண்டு

## முதன்மைத் தொழிற்சார் கருவிகள்

### முன்னுரை

நம் முன்னோர்கள் அகக் கூறுகளை, முன்னெடுத்துக் கூற ஐவகை நிலப் பாகுபாட்டை விளக்கும் வகையில் செய்யுள் இயற்றியுள்ளனர். இவ்ஐவகை நிலம் சார்ந்த உரிப்பொருள்களின் வழியே அகத்திணை ஒழுக்கங்கள் நடந்தேறியுள்ளன. பொருள்கள் முதல், கரு, உரி என்றாலும் தலைவன் தலைவியரின் அகம் சார்ந்த ஒழுக்கம் உரிப்பொருளின்பாற்படும். இதனையே 'அன்பின் ஐந்திணை' என்று சுட்டியுள்ளனர். இவ்வாறு பாகுபாடு செய்யப்பட்ட ஐவகை நிலங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும்.

தமிழகம் நானிலம் கொண்டது. பாலை என்றோர் நிலம் இல்லை. இருப்பினும் ஐவகையாகப் பாகுபாடு செய்யப்பட்டமை நிலத்தின் இயற்கையாய் நிகழும் மாற்றத்தினால் உருவாகும் அமைப்புகளை மையப்படுத்தித் தோன்றியது. முல்லையும், குறிஞ்சியும், தத்தம் இயற்கை நிலையை இழந்து புதிய வடிவம் பெறும் ஒரு வறட்சியான நில அமைப்பாக உருப்பெற்றன. இவ்வாறாகத் தோன்றிய நிலங்களிலுள்ள மக்களின் வாழ்வியலில் அந்தந்த நிலங்களின் தன்மைக்கேற்பத் தொழில்கள் நடைபெற்றன.

முல்லை நிலத்தில் நிரைமேய்த்தல், குறிஞ்சியில் தேனழித்தல், மருதத்தில் உழவு, நெய்தலில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், பாலையில் ஆறலைத்தல் போன்ற தொழில்கள் நடைபெற்றன. பிறதொழில்களும் நடந்தேறின. இருப்பினும் இத்தொழில்கள் முதன்மைத் தொழில்களாகக் கருதப்பெற்றன. இம்முதன்மைத் தொழில் செய்வதற்குப் பயன்பட்ட கருவிகளைக் கண்டறியும் வகையில் இவ்வியல் அமையப்பெறுகிறது.

### முதன்மைத் தொழில் காரணம்

ஐவகை நிலங்களில் எண்ணற்ற தொழில்கள் காணப்பட்டாலும் குறிப்பிட்டுச் சொல்லும் அந்தந்த நிலத் தொழில்கள் பெரும்பான்மை

வகிக்கின்றன. தொழிற் பற்றிய இளம்பூரணர் உரையில் "முல்லை நிலத்தில் நிரைமேய்த்தல், குறிஞ்சியில் தேனழித்தல், பாலையில் ஆறலைத்தல், மருதத்தில் உழவு, நெய்தலில் மீன்படுத்தலும் உப்பு விளைவித்தலும"[1] எனச் சுட்டுவதைக் காணமுடிகிறது. இத்தொழில்கள் ஏன் முதன்மைத் தொழில்களாகக் கொள்ளப்படுகின்றன என்றோர் கேள்வி எழும்புகிறது. அதனை ஆராயும் இடத்துத் தொல்காப்பியர் மக்கள் பெயர் பற்றி,

**"பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"[2]**

எனக் குறிப்பிடுகிறார். "குலப்பெயரும் தொழிற்பெயரும் என அவ்விரு வகைப்படும். திணைதொறும் மருவிப் போந்தது திணைநிலைப்பெயர். திணைநிலைப்பெயர் என்றதனான் அப்பெயருடையார் பிற நிலத்து இலர் என்று கொள்ளப்படும். அதனானே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை ஒழித்து நிலம் பற்றி வாழும் கீழ்மக்களையே குறித்து ஓதினார் என்று கொள்க"[3] என இளம்பூரணர் உரை விளக்குகிறது.

நிலம் சார்ந்த தொழில் மேற்கொள்பவர்களை மக்கள் பெயரில் அடக்கிக் கூறினமையால் அவர்கள் மேற்கொண்டத் தொழில்களை முதன்மைத் தொழிலாகக் கொள்ளமுடிகிறது. பெரும்பான்மையாகச் சங்க இலக்கியங்கள் ஐவகை நிலத்தொழில்கள் என்றாலே மேற்கண்டவற்றையே மேம்படுத்தியும் பெரும்பாண்மையாகவும் சுட்டிச்செல்கின்றன. நிலம் சார்ந்த தொழில் மேற்சுட்டிய சாதாரண மக்களை இலக்கியங்கள் எடுத்துரைப்பதால் அவர்கள் மேற்கொண்டத் தொழில்களை முதன்மைத் தொழில்கள் என்று கொள்வதில் ஐயமில்லை. முதன்மை என்றாலே "முதலாவதாக நிற்பது"[4] என கழகத் தமிழ் அகராதி எடுத்தியம்புகிறது. ஆகையால் ஐவகை நிலத் தொழில்களாகச் சொல்லப்பட்டவை அந்நிலத்தின் முதன்மைத் தொழில்கள் என்று உணரமுடிகிறது.

**நிலவகைப்பாடு**

தமிழகம் நானிலம் கொண்டதாகும். இதனைத் தொல்காப்பியர்,

**"மாயோன் மேய காடுரை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்''[5]**

என்ற நூற்பாவின் வழி உணர்த்துகிறார். இந்நூற்பா முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலங்களைப் பற்றி உரைக்கிறது. பாலை நிலம் பற்றிய செய்தி சிலப்பதிகாரத்தில் இடம்பெறுகிறது.

**குறிஞ்சி**

குறிஞ்சி நிலம் மலைப் பகுதியாகும். குறிஞ்சித்திணை என்பது "குறிஞ்சி நிலத்திற்குரியன. அவை மாலை, கூதிர், முன்பனி, இருள், ஐவனம், தினை, கூதிர், களவுப்புணர்ச்சி, சிலம்பன், வெற்பன், பொருப்பன், சேய், கானவர், குறவர், தேன், வெறி, சிறுகுடி, குறிச்சி, அருவி, சுனை, யானை, வேங்கை, மயில்"[6] என்னும் பொருளில் வருவதைக் கழகத் தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

குறிஞ்சி நிலத்தலைவன் வெற்பன், பொருப்பன், சிலம்பன், நாடன் என அழைக்கப் பெற்றான். தலைவி கொடிச்சி எனப்பட்டாள். குறிஞ்சிநில குடிமக்கள் கானவர், வேட்டுவர், குன்றுவர், புனவன், வேட்டுவித்தியர், குறத்தி, குன்றுவித்தியர் எனப் பெறுவர். இவர்களுடைய உணவு ஐவன நெல், தினை, மூங்கிலரிசி, கிழங்கு, தேன் முதலியனவையாகும்.

இதனை ஈட்டும் பொருளிலே இவர்களின் தொழில்களான தினை முதலியன விளைவித்தல், தினைக்காவல், தேனழித்தல், கிழங்கு அகழ்தல், வேட்டையாடுதல் போன்றவை நடைப்பெற்றன.

**தினை விளைவித்தல்**

குறிஞ்சி நிலம் மேட்டு நிலமாதலின் குறிஞ்சிநில மக்கள் அங்கிருந்த அகில், சந்தன மரங்களை வெட்டித் தினைப்பயிரிட ஏற்ற நிலமாக மாற்றித் தோரைநெல், தாள்களையுடைய கடுகு, இஞ்சி, மஞ்சள், மிளகு போன்ற மலைப்படு பொருள்களை விளைவித்தனர். இவற்றை,

**''நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெல்லொடு அரில் கொள்புநீடி**
**இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும்**
**பல்வேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி''** **(மதுரை.286-290)**

என்றடிகள் விளக்குகின்றன. இவ்வாறாகக் குறிஞ்சித் திணையில் தினை விளைவித்தனர். நாறுங்காழ் என்பது மணமுடைய அகில் சந்தனம் ஆகும். கறி என்பது மிளகு ஆகும்.

மின்மினி பூச்சியால் மழையின் இயக்கத்தினைப் பழந்தமிழர் அறிந்து அதற்கு ஏற்றார் போல் பயிர் செய்தமையை,

**"பல் மர உயர்சினை மின்மினி விளக்கத்து**
**செல்மழை இயக்கம் காணும்"** (நற்.44:10-11)

என்றடிகள் உணர்த்துகின்றன. தினைகளைப் பயிரிடும் மலைநாட்டினர் அவற்றில் வரும் களைகளைக் களைவதற்குத் 'துளர்' என்னும் கருவியைப் பயன்படுத்தினர். இதனை,

**"கடவை மிடைந்த துடவைஅம் சிறுதினைத்**
**துளர்எறி துண்துகள் களைஞர் தங்கை**
**தமரின் தீராள் என்மோ ………"** (குறுந்.4-6)

என்றடிகள் புலப்படுத்துகின்றன. துளர் என்பது களைக்கொட்டு என்று அழைக்கப்படுகிறது.

புறநானூற்றின் 159ஆம் பாடல் வேடர் ஐவன நெல்லை விதைத்து அவை கோடையால் வாடிய கதிருடன் இருக்க அப்பொழுது இடி மின்னலும் மழைப் பொழிந்ததைச் சுட்டுகிறது. இதனை,

**"… … … … … … கானவர்**
**கரிபுனம் மயக்கிய அகன் கண் கொல்லை**
**ஐவனம் வித்தி, மையுறக் கவினி,**
**ஈனல் செல்லா ஏனற்கு இழுமெனக்**
**கருவி வானம் தலைஇ"** (15-19)

என்றடிகள் விளக்குகின்றன.

**தினைப்புனம் காவல்**

குறிஞ்சி நிலத்தில் தினைகளைத் திண்ணவரும் யானை, பன்றி, பறவை, கிளி ஆகியவற்றினிருந்து தினைகளைக் காப்பதற்குப் பெண்களும் ஆடவரும் காவலில் ஈடுபட்டுள்ளனர். தினைப்புனம் காவலில் பெண்கள் பெரும்பான்மை வகிக்கின்றனர். தினைப்புனம் காவல் பற்றி இலக்கியங்கள் தெள்ளிதின் உணர்த்துகின்றன. தினைப்புனம் காவலில், குழிர், தட்டை, தழல், வில் அம்பு, கனை, ஞெகிழி, அடார், தண்ணும்மை ஆகிய

கருவிகள் பயன்படுத்தப்பட்டன. தினைப்புனம் காவலால் குறிஞ்சி நிலத்தில் ஓசை எழுந்ததை மதுரைக்காஞ்சி,

**"தினைவிளை சாரல் கிளிகடி பூசல்**
**மணிப்பூ அவரைக் குரூஉத்தளிர் மேயும்**
**ஆமா கடியும் காணவர் பூசல்" (291-293)**

என்ற அடிகளின் வழி அறியலாம். தினைகளைத் திண்ணவரும் கிளிகளை விரட்டும் ஓசையும், மணி போன்ற நிறமுடைய அவரையினது தளிரை மேயவரும் காட்டுப் பசுவை விரட்டும் கானவரின் ஓசையும் ஒலித்ததாகக் குறிப்பிடுகின்றது. தினைப்புனம் காவல் செய்யும் ஆடவர் கானவர் எனப்பட்டனர். தினைப்புனம் காவலில் பெண்கள் ஈடுபட்டிருந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன. தினைப்புனம் காவலுக்குச் செவிலி, தலைவியையும், தோழியையும் அனுப்பி வைத்ததை,

**"நெல்கொள் நெடுவெதிர்க்கு அணந்த யானை**
**முத்து ஆர் மருப்பின் இறங்குகை கடுப்ப**
**துய்த்தலை வாங்கிய புனிறுநீர் பெருங்குரல்**
**நல்கோள் சிறுதினைப் படுபுள் ஒப்பி**
**எல்பட வருதியர் எனதீ விருத்தலின்" (குறிஞ்சி.35-39)**

என்றடிகள் உணர்த்துகின்றன. தினைப்புனம் காவலில் பெண்கள் தழல், தட்டை, குளிறு, கவண் ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"சாரல் சூரல் தகைபெற வலந்த**
**தழலும் தட்யும் குளிறும் பிறவும்**
**கிளிகடி மரபின் ஊழ்ஊழ் வாங்கி" (குறிஞ்சி.42-44)**

என்றடிகள் விளக்குகின்றன. தழல் என்பது கையால் சுற்றும் போது ஓசை ஏற்படுத்தும் கருவி. தட்டை என்பது மூங்கிலைப் பிளந்து அடித்து ஓசை எழுப்புவது. குளிறு என்பது மூங்கிலை வீணை போல் தட்டித் தெரித்து ஓசையெழுப்புமு கருவி. பிறவும் என்பது கவண் போன்ற கருவிகளைக் குறிப்பிடுகிறது. கவண் என்பது கல்லைக் கவட்டையில் வைத்து எறியும் கருவி ஆகும். தினைகளைத் திண்ணவரும் யானைகளை வில், அம்பு, தட்டைக் கொண்டும் பறவை விலங்குகளைச் சீழ்க்கை (விசில், சீட்டி) அடித்தும் விரட்டியதை,

**“சேமம் மறந்த பொழுதின் வாய்மருத்து**
**இரும்புனம் நிழத்தலின் சிறுமை நோனாது**
**அரவுஉறழ் அம்சிலை கொளீஇ நோய்மிக்கு**
**உரவுச்சின முன்பால் உடல்சினம் செருக்கிக்**
**கணைவிடு புடையூக் கானங் கல்லென**
**மடிவிடு புடையூக் கால்லென**
**மடிவிடு வீனையர் வெடிபடுத்து எதிரக்”** (குறிஞ்சி.156-161)

என்றடிகள் விளம்புகின்றன. தினைப்புனம் காவலில் பன்றிகளைப் பிடிப்பதற்குக் கற்பொறி என்னும் கருவியைப் பயன்படுத்தியதை,

**“விளைபுனம் நிழத்திலின் கேழல் அஞ்சிப்**
**புழைதொறும் மாட்டிய இருங்கல் அரும்பொறி**
**உடைய ஆறே …………….”** (மலைபடு.193-195)

என்றடிகள் குறிப்பிடுகின்றன. மலைபடுகடாமில் கூத்தர் செல்லும் வழியின் இயல்பை விளக்கும் புலவர், முற்றி விளைந்த தினைப்புனத்தை அழிப்பதற்குப் பன்றிகள் வரும். அவை புகும் வழிகளில் கரிய கல்லால் ஆகிய அரியபொறியை வைத்தனர் எனச் சுட்டுகின்றார். தினைகளை மேயவரும் யானைகளைப் பரண்களின் மேல் ஏறி கையைக் கொட்டி கவண்கள் கொண்டு விரட்டியதை,

**“புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவர்**
**உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ**
**அகன்மலை இறும்பில் துவன்றிய யானைப்**
**பகல்நிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல்”**
(மலைபடு.203-206)

என்றடிகளின் வழி அறியமுடிகிறது. யானைகள் தினைப்புனத்தை அழிப்பதற்காக வருந்தி ஈன்றணிமை தீர்ந்த முற்றிய தினைப்புனத்தைக் காத்தற்குச் சூழ்ந்த குறவர், மரங்களின் மேல் நிர்மானித்தப் பரண்களில் ஏறிக் கையைக் கொட்டி, அகன்ற மலையிலுள்ள குறுங்காட்டில் நிறைந்த யானைக் கூட்டத்தை, பகல் காலத்திலேயே நிலை தளரச்செய்யும், கவணால் கொடிய கற்கள் கொண்டு எறிவர்.

கவன் (கவட்டை) என்பதற்குக் காட்டாப்புலி என்ற நடைமுறைப் பெயரும் உண்டு. இவ்வாறாகத் தினைப்புனம் காவலில் தினைகளை மேயவரும் கிளி, பறவைகள், காட்டுப் பசு, பன்றி, யானை ஆகியவற்றை விரட்டவும், தினைகளைப் பாதுகாக்கவும் தழல், தட்டை, குளிர், வில்,

அம்பு, கவன், கற்பொறி போன்ற கருவிகள் பயன்படுத்தியமையை விளங்க முடிகிறது.

கவண் என்பது “கயிற்றில் கட்டப்பட்டு இருக்கும் பட்டையான தோலில் கல் வைத்துப் பயிர்களைக் கொத்தின் தின்னும் குருவிகளை விரட்டச் சுழற்றி எறியும் சில கருவி”[7] எனச் சுட்டுகிறது நர்மதா தமிழ் அகராதி.

தினைப்புனம் காவலில் ஒரே நேரத்தில் பல கருவிகள் கொண்டு தினைக்கொல்லையைக் காவல் செய்ததை நற்றிணை,

**“மலை அயற் கலித்த மைஆர் ஏனல்**
**துணையின் தீர்த்த கடுங்கண் யானை**
**அணையக் கண்ட அம் குடி குறுவர்**
**கணையர், கிணையர், கை புனை கவணர்,**
**விளியர், புறக்குடி ஆர்க்கும் நாட!”** (நற்.108:1-5)

எனத் தெளிவுபடுத்தியுள்ளது.

மலைப் பக்கத்தில் முளைத்துச் செழித்துக் கரிய நிறமுடைய தினைக் கொல்லையில் உண்ணும் பொருட்டுத் தன் துணையைப் பிரிந்த கொடிய ஆண் யானை வந்து புகுந்தது. அது கண்ட அழகிய குடியிலுள்ள குறவர்களுள் அம்பினை உடையவரும், கிணைப்பறையுடையவரும், கைவிரலில் கோர்த்த கவணுடையவரும் கூவி பேரிரைச்சலிடுவோரும் ஆர்ப்பரிக்கும் மலை என வருவதாய் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. தினைப்புனம் காவலில் கிணைப்பறையும் பயன்படுத்தியமையைக் காண முடிகிறது.

தினைப்புனம் காவலில் கொள்ளிக்கட்டையைப் பயன்படுத்தினர் கானவர் என்பதை,

**“பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி**
**விடுபொறிச் சுடரின் மின்னி .........”** (அகம்.73:15-16)

என்றடிகள் இயம்புகின்றன.

**தேனழித்தல்**

குறிஞ்சி நிலத்தில் மரம் செடி கொடிகள் நெருசலாகவும் அடர்த்தியாகவும் காணப்படுவதால் அங்குத் தேனிக்களால் தேனடைகள்

கட்டப்பட்டுத் தேன் வழிந்து காணப்பட்டன. அங்கு வாழும் மக்கள் தங்கள் உணவு வகைகளில் ஒன்றாகத் தேனைப் பயன்படுத்தியுள்ளா். அவற்றை ஈட்டும் பொருட்டுத் தேனழித்தல் தொழில் அந்நிலத்தில் நடந்தேறின.

**“தேன் தூங்கு உயர்ச்சிமைய மலை” (மது.3:4)**

என்றடி தேனடைகள் இருக்கும் மலை எனக் குறிப்பிடுகிறது.

**“பிரசம் தூங்கு மலைகிழவோற்கே!” (குறந்ெ.392:8)**

என்றடி தேனடைகள் இருக்கும் மலைத் தலைவன் எனச் சுட்டுவதன் வழி குறிஞ்சியில் தேனடைகள் இருப்பதை இலக்கியங்கள் இயம்புகின்றன. தேனழித்தல் தொழிலில் ‘மால்பு’ என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர்.

‘மால்பு’ என்பதற்குக் “கண்ணேணி: மூங்கில் ஏணி”[8] என கழகத் தமிழகராதி பொருள் விளக்கம் தருகிறது. கண்ணேணியை “கணுக்களில் அடிவைத்து ஏறிச் செல்லும்படி அமைந்துள்ள மூங்கில் மலையுச்சியில் ஓங்கி வளர்ந்த மரத்தின் உச்சியின் உள்ள தேனிறாலை அழிக்கும் பொருட்டுச் செங்குத்தான மலையில் ஏறுவதற்கு அதன் அயலில் இவ்விரு மூங்கில்களைக் கூட்டிநிறுத்தி அமைப்பது வழக்கம்”[9] என உரைக்கிறார் மா.இராசமாணிக்கனார்.

மலைபடுகடாமில் மலைகளில் கேட்ட ஓசைகளைச் சுட்டும் பொருட்டுக் கானவரின் ஓசையை கேட்டதாகவும் அவர்கள் தேன் எடுத்ததையும் அதில் ‘மால்பு’ என்னும் கண்ணேணியைப் பயன்படுத்தியமையையும்,

**“கலைகை யற்ற காண்பின் நெடுவரை**
**நிலைபெய்து இட்ட மால்பு நெறி ஆகப்**
**பெரும்பயன் தொகுத்த தேங்கொள் கொள்ளை”**
**(மலைபடு.315-317)**

என்றடிகள் வெளிப்படுத்துகின்றன. ஆண் குரங்கு ஏறுதற்கு இயலாது செயலற்று நிற்கும். காண்பதற்கு இனிமையான நீண்ட மலையில் நிலையாகக் கட்டப்பெற்றக் கண்ணேணி வழியாக, பெரிய பயன் உண்டாகத் தொகுத்து வைத்திருந்தத் தேனை அழித்துக் கொள்ளைக் கொண்டனர் என்று விளக்குகிறது. பெரியத் தேனடைகள் காணப்படுவதைப் ‘பெருந்தேன்’ என்று பண்டையோர் அழைத்தமையை,

**“கருங்கோள் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே” (குறுந்.3-4)**

என்கின்ற அடிகள் விளம்புகின்றன. குறுந்தொகையில் 179 ஆம் பாடலிலும் தேன் பற்றிய பதிவு காணப்படுகின்றது. அகநானூற்றில் மூங்கிலில் விளைந்த தேனால் செய்த கள் என 368 ஆம் பாடல் எடுத்துரைக்கிறது இதனை,

**“அம்பணை விளைந்த தேக்கட் தேறல்” (14 அடி)**

பாடலடி உணர்த்துகிறது. அகநானூற்றில் 102 ஆம் பாடலிலும் தேன் பற்றிய பதிவு இடம்பெறுகின்றது. இவை போன்ற சான்றுகளின் வழித் தேன் எடுக்கும் தொழில் இருந்ததைக் காணமுடிகின்றது.

**கிழங்கு அகழ்தல்**

குறிஞ்சி நிலத்தில் கிழங்கு எடுக்கும் பழக்கம் நிகழ்ந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன. மலைச்சாரலில் தேனுடன் கிழங்குகள் காணப்பட்டதை,

**“மணஇல் கமழும் மாமலைச் சாரல்**
**தேனினர் கிழங்கினர் ஊன் ஆர் வட்டியர்”**
**(மலைபடு.151-152)**

என்கின்றடிகள் விளம்பும். மதுரைக்காஞ்சியில் கவலைக் கிழங்கெடுத்தக் குழிகளில் அருவிகள் பட்டு ஒலி ஏற்பட்டன எனக் குறிப்பிடும்மிடத்தில் கவலைக் கிழங்கெடுத்ததைக் காணமுடிகிறது. இவற்றை,

**“கவலையம் குழும்பின் அருவி ஒலிப்பக்” (மதுரை.241அடி)**

என்னும் அடி சுட்டுகிறது. கானவர் கிழங்குகளை அகழ்வதை உணர்த்தும் பாங்காய்,

**“……………… கானவர்**
**கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கை” (ஐங்.280:1-2)**

என்றடிகள் அமைகின்றன.

கிழங்குகளை மனிதர்கள் மட்டுமன்றி பன்றியும் அகழ்ந்தெடுத்திருக்கிறது. தன் உணவாகக் கொண்டிருக்கிறது. அவை அகழ்ந்த இடத்தில் ஏற்பட்ட குழிகளில் பழந்தமிழர் தினை விளைவித்தனர் என்ற செய்தியை,

**"கிழங்கு அகழ்கேழல் உழுத சிலம்பில்**
**தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்"** **(ஐங்.270:1-2)**

என்கின்றடிகள் உணர்த்துகின்றன. இதேபோன்று,

**"கேழல் உழுத கரிபுனக் கொல்லை"**[10]

என்னும் ஐந்திணை எழுபது அடியும் உணர்த்துவது நோக்கத்தக்கது. பன்றியானது தன் மறுப்பால் கீறி கிழங்குகள் அகழ்வதைக் காணமுடிகிறது. இவ்வாறு குறிஞ்சிநில மக்கள் தம் தொழில்களில் தம் உணவுத்தேடலில் கிழங்கு அகழ்வதைத் தொழிலாக மேற்கொண்டிருந்தனர் என்பதை இப்பாக்களின் வழியாகக் காண இயலுகிறது.

**முல்லை**

முல்லை காடும் காடு சார்ந்த இடமும் ஆகும். இதன் தெய்வம் திருமால் ஆவார். முல்லை என்பதற்கு "இசை; ஐந்நிலத்தொன்று; அதுகாடுங்காடு சார்ந்த இடமும்; ஒரு மரம்; கற்பு; காமன் கணையில் ஒன்று; முல்லைக்கொடி; வனமல்லிகை வெற்றி"[11] என கழகத்தமிழகராதி விளக்கம் அளிக்கிறது. முல்லைநில மக்கள் ஆயர், ஆய்ச்சியர் ஆவர். இவர்களின் தொழிலாக ஆநிரை மேய்த்தல், ஆநிரைகாத்தல், தயிர், மோர் விற்றல், தானியம் பயிரிடல் ஆகிய தொழில்கள் நிகழ்ந்துள்ளன. இதனுள் வேளாண்மையும் நடந்ததை இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது. முல்லை நிலத்தில் காவலாக நின்ற சிறிய கண்களையுடைய யானைக்குக் கரும்புடன் நெல் கதிர்களையும், அதிமதுர தாழையையும் உண்பதற்குக் கட்டப்பட்டிருந்ததை முல்லைப்பாட்டில்,

**"கவலை முற்றம் காவல் நின்ற**
**தேம்படு கவுள சிறுகண் யானை**
**ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந்துயாதத்**
**வயல்விளை இன்குளகு உண்கிறாது……"**
**(முல்லை.30-33)**

என்கின்ற அடிகள் குறிப்பிடுகின்றன. முல்லைநிலத்தில் தானியப் பயிர்களான எள் வரகு போன்றவற்றைப் பயிரிட்டிருந்தனர் என்பதை,

**"சிறுதினை கொய்ய கவ்வை கறுப்பக்**
**கருங்கால் வரகின் இருங்குரல் புலர"** **(மதுரை.271-272)**

என மதுரைக்காஞ்சியடிகள் இயம்புகின்றன. முல்லைநில மக்கள் சிறிய தினையின் கதிர்களைக் கொய்தனர். எள்ளின் இளங்காய்கள் கறுத்தன. கரிய தாளையுடைய வரகின் பெரிய கதிர்கள் புலர்ந்து கிடந்தன எனவும் சுட்டுவதன் வழி தினைப் பயிர்களை விளைவித்துக் கொய்தனர் என்பது தெளிவாகிறது. மேலும் முல்லை நில மக்கள் வரகு, அவரை ஆகிய பயிர்களை விளைவித்து அவற்றை உணவாகச் சமைத்து உண்டார்கள் என்ற செய்தியை,

**“அவரைவான் புழுக்கு அட்டி, பயில்வுற்று,**
**இன்சுவை முரல் பெருகுவிர்” (பெரும்பாண்.195-196)**

என்ற பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது. மேலும், இந்நூல் வரகு கதிரைக் குதிர்களில் சேமித்து வைக்கும் பழக்கத்தினை முல்லை நில மக்கள் கொண்டிருந்தனர் என்பதையும் வரகு கதிர்களைத் திரிப்பதற்குத் ‘திரிமரம்’ என்னும் கருவியைப் பயன்படுத்தியமையும் அவர்கள் வேளாண்மை செய்வதற்கு அடையாளமாக வண்டிகளின் சக்கரங்கள் கலப்பை ஆகியவற்றைத் தம் இல்லச் சுவரில் சாத்தி வைத்திருந்தனர் என்பதையும்,

**“............................ முன் உடுத்து**
**எழுகாடு ஓங்கிய தொழிவுடை வரைப்பில்**
**பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றிலை,**
**களிற்றுத் தாள்புரையும் திரிமரப் பந்தர்**
**குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சாத்தி**
**நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்”**
**(பெரும்பாண்.184-189)**

என்றடிகள் மெய்ப்பிக்கின்றன. முல்லைநிலத்தில் அம்மக்கள் வாழ்கின்ற பகுதியைச் சுற்றி முள்ளாலான உயிருள்ள வேலியை அமைத்திருந்தனர். அவர்கள் வீட்டு முற்றத்தில் பெண் யானைக்கூட்டம் போன்ற குதிர்களில் வரகுக் கதிரைப் போட்டு வைத்திருந்தனர்.

வரகுக் கதிரைத் திரிப்பதற்கு யானையின் கால்கள் போன்ற திரிமரங்கள் இருந்தன. சின்ன வண்டிகளின் சக்கரங்களையும், கலப்பையும், நீண்ட சுவரில் சார்த்தி வைத்திருந்தனர் எனச் சுட்டுகின்றன. முல்லைநில மக்கள் தினைப் பயிர்களை விளைவித்துள்ளனர் என்பதும் அதற்குச் சக்கரம், கலப்பை, திரிமரம் போன்ற கருவிகளைப்

பயன்படுத்தினா் என்பதும் விளங்குகிறது. கலித்தொகையில் தினை அரிந்த வயல்களில் கன்றுகளைப் பெண்கள் மேயவிட்டனா் என வருவதன் வழி தினைப் பயிர் செய்ததை,

**“தினைக் காலுள் பாய் விட்டகன்று மெய்கிற்பதோ?”**

**(கலித்.108:33)**

என்றடியின்வழிக் காணமுடிகிறது. இவ்வடியில் தலைவி தலைவனைப் பார்த்து உன் நெஞ்சானது தினை அரிந்த வயலுள் என் தாய் மேயவிட்ட கன்றுகளைப் போல மேய்ந்துக் கொண்டிருக்குமோ என்று விளம்புவதாய் இடம்பெறுகிறது. இவ்வாறாக முல்லைநிலத்தில் தினைப்பயிர்கள் பயிரிட்டமையும் வேளாண்மை செய்ததையும் இலக்கியங்கள் சுட்டுவதைக் காணலாம். மேலும் முல்லைத் திணையின் பயிர்களாக வரகு, தினை, கொள்ளு, அவரை ஆகியவை பயிரிடப்பட்டன என்பதை,

**“கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே**
**சிறுகொடிக் கொள்ளே பொறிகிளர் அவரையொடு**
**இந்நான்கு அல்லது உணவும் இல்லை”**

**(புறநா.335:3-5)**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. முல்லை நிலத்தில் கரிய அடிப்பகுதியையுடைய வரகுப் பயிர் பெரிய கதிர்களையுடைய தினை, சிறிய கொடியாக வளரும் கொள் புள்ளிகளைக் கொண்ட பூக்களால் பொலிந்து தோன்றும் அவரை ஆகிய நான்கு உணவுப் பொருள்களைத் தவிர பிற உணவுப் பொருள்கள் இவ்வூரில் இல்லை எனலாம்.

**ஆநிரை மேய்த்தல்**

முல்லை நிலம் மேய்ச்சல் நிலமாகும். இந்நிலமக்கள் கால்நடைகளை மேய்ச்சலின்வழி தம் பொருளாதாரத்தை மேற் கொண்டிருந்தனர். ஆநிரை மேய்ப்போர் ஆயர் எனப்பட்டனர். இவர்கள் கையில் கோலும் குழலும் கொண்டிருப்பர். இவர்கள் ‘கோவலர்’ என்று அழைக்கப்பட்டனர்.

**ஆயர் பெயர்க்காரணம்**

“முல்லை நிலத்தில் வாழும் மக்கள் ‘ஆயர்’ எனப்படுவர். ‘ஆ’ என்பது பசு ‘ஆயம்’ என்பது பசுத்திரள் அதை ஓம்பி வாழ்ந்தவர் ஆயர்

எனப்பெற்றனர் எனவும், ஆயர் என்னும் குடிப்பெயர் ‘அர்’ என்னும் பலர்பால் விகுதி பெற்று ஆயர் என்போர் தாம் கொண்டிருந்த பசுத்திரள்களாலும் குடியாலும் பெயர் பெற்றவராவர்”[12] என விளக்கம் அளிப்பார் அ.முத்துச்சாமி. கோவலர் என்பதற்கு “முல்லைநில மக்கள் இடையர்”[13] என கழகத் தமிழகராதி விளக்கம் அளிக்கிறது. முல்லைநில ஆடவர்கள் ஆநிரைகளை வளர்த்து அதன்வழி பொருளீட்டுதலைக் கொண்டிருந்தனர். அவர்கள் ஆநிரைகளை மேய்த்தல் அவற்றைப் பாதுகாத்தல், பராமரித்தல் ஆகியவற்றில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர்.

முல்லைப்பாட்டில் தலைவிக்கு மாலைப்பொழுதில் தலைவன் பிரிவால் ஏற்படும் துன்பம் தீரும் பொருட்டு முதுபெண்டிர் நற்சொல் கேட்டதைக் கூறுவதாய் வருமிடத்து மேயச்சென்ற பசுக்களின் கன்றுகள் கயிரால் கட்டப்பட்டிருந்தன. அவை தம் தாயாகிய பசுவின் வரவைக் கண்டு பசியில் துன்பத்துடன் வருத்தத்துடனும் இங்கும் அங்கும் பார்த்தவண்ணம் இருந்தன. இதைக்கண்ட இடைக்குலப் பெண்ணானவள் கொடிய கோலுடைய (கம்புடைய) இடையர் பின்னே நின்று செலுத்த இப்போதே உங்கள் தாயார் வந்துவிடுவர் என்று அக்கன்றுகளைப் பார்த்துச் சொன்னதாக,

**“சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**
**உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்**
**நடுங்குசுவல் அசைத்த கையல் கைய**
**கொடுங்கோல் கோவலர் பின்னின்று உயர்த்தி**
**இன்னே வருவர் தாயர் என்போள்**
**நன்னர் நன்மொழி கேட்பறம் அதனால்”** (முல்லை.12-17)

என்றடிகள் வருகின்றன. இவ்வடிகளின் வழி ஆநிரை மேய்ச்சலுக்குக் கோவலர் சென்றனர் என்றும், அவர்கள் கொடிய கம்பினைக் கையில் கொண்டிருந்தனர் என்பதும் விளங்குகின்றன. கோல் என்பதற்கு “அஞ்சனக்கோல்; அம்பு; அளவுகோல்; இலந்தை; ஊன்றுகோல்; எழுதுகோல்; குதிரைச்சம்மட்டி; கோலென்னேவல்; செங்கோல்; துடி; துலாக்கோல்; தூண்டில்; தெட்பம்; புள்ளி; மரக்கொம்பு; மரக்கோல்; சித்திரந்தீட்டுங்கோல்; முத்திரைக்கோல்; தீக்கடைகோல்; திரட்சி; முட்கோல்; அழகு, சவுக்கு”[14] எனக் கழகத் தமிழகராதி குறிப்பிடுகிறது.

கடுங்கோல் என்றதனால் அது தீக்கடைக்கோல் ஆக இருந்திருக்க வேண்டும். இதையே பெரும்பாணாற்றுப்படை கோவலர்கள் பசுக்களையும் கன்றுகளையும் காட்டில் மேய்க்கும்போது மூங்கிலில் தீக்கடைக் கோலால் தீ உண்டாக்கி அம்மூங்கிலில் துளைப்போட்டுக் குழல் செய்து குழல் இசையில் பாலைப்பண்ணை இசைத்தனர் என வருவதன் வழி கோவலர்கள் ஆநிரைகளை மேய்ச்சலுக்கு அழைத்துச் செல்லும் போது உடன் தீக்கடைக் கோலும் எடுத்துச் சென்றனர் என்பதை,

**"............................. இடையன்**
**கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி**
**அம்நுண் அவிர்புகை கமழ, கைம்முயன்று**
**ஞெலிகோல் கொண்ட பெருவிறல் ஞெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்"**
**(பெரும்பாண்.175-179)**

என்றடிகள் விளக்குகின்றன. 'ஞெலிகோல்' என்பது தீக்கடைக்கோல் ஆகும். மேலும் முல்லை நிலத்தில் ஆநிரைகளை மேய்ப்பதோடு அவற்றைக் காவல் செய்தனர் என்பதை,

**"................................ மறிய**
**குளகு அரை யாத்த குறுங்கால், குரம்பை,**
**செற்றைவாயில், செறிகழிக் கதவின்,**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்,**
**அதளோன் துஞ்சும் காப்பின் உதள,**
**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றி"**
**(பெரும்பாண்.147-154)**

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன.

முல்லைநில மக்களாகிய இடையர் வசிக்கும் ஊர்களில் சிறுசிறு குடில்கள் காணப்பெற்றன. குடில்களின் வாயிலில் கட்டையான கால்களில் ஆட்டிற்குரிய குழைகள் கட்டிருந்தன. ஆட்டுக்குட்டிகள் அவற்றைத் தின்று கொண்டிருந்தன. குடிலின் வாயிலில் கழிவுகள் குப்பையாகக் கிடந்தன. குடில் கதவுகள் மூங்கில் கழிகளால் அமைக்கப் பெற்றிருந்தன. உட்பகுதியில் ஆட்டுத்தோலாலான படுக்கையில் ஆட்டைக் காவல் காத்துக் கொண்டு படுத்துருந்தான் என விவரிக்கின்றன. மாலைப்பொழுதில் மேயச்சென்ற ஆடுகள் தொழுவத்தை வந்து அடையும் என்பதை,

**“செந்நிலப் புறவின்புன் மயிர்ப் புருவை**
**பாடுஇன் தெள் மணித் தோடுதலைப்பெயர்”** (நற்.321:1-2)

என்ற அடிகள் சிவந்த நிலத்தையுடைய காட்டிடத்தில் புல்லிய மயிரைக் கொண்ட தெளிந்த மணிகள் கட்டப்பெற்ற ஆடுகளின் கூட்டம் தாம் மேய்வதை விட்டு இடம்பெயர்ந்து தொழுவத்தைச்சேரும் எனச் சுட்டுகின்றன. இதன் வழி ஆடுகளைத் தொழுவத்தில் கட்டிவைத்திருந்தனர் என்பது விளங்குகிறது. பல ஆநிரைகளைக் கோவலர் மேய்த்தனர் என்பதை,

**“உறும் இசை அறியாச் சிறுசெந் நாவின்**
**ஈர் மணி இன்குரல் ஊர் நனி இயல்ப**
**பல் ஆ தந்த கல்லா கோவலர்”** (நற்.364:7-9)

என்றடிகள் சில கோவலர்கள் ஆநிரை மேய்த்தலைத் தவிர பிற தொழில் அறியாத கல்லாத கோவலர்களாக இருந்தனர் என்பதை மெய்ப்பிக்கின்றன. இவர்கள் பலவகை ஆநிரைகளை மேய்த்துள்ளனர் என்பதும் உணரமுடிகிறது. இதுபோன்று நற்.169, 266 ஆகிய பாடல்களின் வழியும் ஆநிரை மேய்த்தல் பற்றிய செய்திகளைக் காணமுடிகிறது. கோவலர் ஆநிரை மேய்த்தலின் போது தங்களுடன் கொள்ளிக் கட்டையினை எடுத்துச் சென்றதை,

**“ஆர்கலி முனைஇய கொடுங்கொல் கோவில்**
**ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பிப்**
**புலம்யெர் புலம்பொடு கலங்கிக் கோல்**
**நீடு இதழ்க் கண்ணி நீரலைக் கயாது**
**மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்**
**கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க”**
(நெடுநல்.1-8)

என்கின்ற அடிகளின் மூலம் உணரலாம். மழை காரணமாக மிகுதியான வெள்ளம் பெருகியமையால் வளைந்த கம்பியினை உடைய முல்லைநில மக்களாகிய கோவலர் தம் ஆடு, மாடு ஆகிய கால்நடைகளை மேய்ச்சலுக்கு மேட்டு நிலங்களுக்குக் கொன்று சென்றனர். தம்மிடத்தை விட்டு நீங்கிய தனிமையில் கலங்கினர். காந்தள் பூவின் நீண்ட இதழ்களால் தலைமாலை அணிந்திருந்தனர். அந்தக் கண்ணியில் நீர் விழுவதால் கலக்கமடைந்து உடம்பில் மிகுதியான குளிர்ச்சி ஏற்பட

வருத்தமடைந்தனர். குளிர்ச்சியைப் போக்கக் கையில் கொள்ளிக் கட்டைகளை வைத்திருந்தனர் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. கோவலர் கையில் கோலும், கொள்ளிக் கட்டைகளும் வைத்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

முல்லைநில மகனாகிய இடையன் எவ்வாறு இருப்பான் என்ன என்ன வைத்திருப்பான் என்பதை,

**"தொடுதோல் மரீஇய வடுஆழ் நோன்அடி**
**விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை**
**உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்**
**மேம்பால் உரைத்த ஓரி, ஓங்கு மிசைக்**
**கோட்டவும் கொடியவும் விரைஇ, காட்ட**
**பல்பூ மிடைந்த படலைக் கண்ணி**
**ஒன்று அமர் உடுக்கை கூழ்ஆர் இடையன்**
**கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி**
**அம்நுண் அவிர்புகை கமழ கைம்முயன்று**
**ஞெலிகோல் கொண்ட பெருவிறல் ஞெகிழச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்**
**இன்தீம் பாலை முனையின் குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்**
**வில்யாழ் இசைக்கும், குறிஞ்சி"** (பெரும்பாண்.169-182)

என்னும் அடிகள் விளக்குகின்றன. முல்லைநில மகனாகிய இடையன் காலில் எப்பொழுதும் செருப்பு அணிந்திருப்பதால் அதன் அடையாளம் தெரிகின்ற காலையுடையவன். கையில் எப்போதும் கோடரி வைத்திருப்பதால் அதன் தழும்பு தெரியும் வலிமையான கைகளையுடையவன். தோளில் இருபக்கமும் உள்ள காவடியைச் சுமத்தலால் தோளில் மென்மையான மயிரினையுடையவன்.

தலைமயிர் உடையவன். காட்டில் வளர்ந்துள்ள மரங்களிலும் கொடிகளிலும் மலர்ந்துள்ளப் பல மலர்களை இணைத்துக் கட்டி அதைத் தலையில் கண்ணியாகச் சூடியுள்ளான். ஒற்றையாடையை உடுத்திருந்தான். பால் சோற்றைத் திண்ணும் இயல்புடையவன்.

கன்றுகளையும் பசுக்களையும் காட்டிலே மேய்க்கும் போது மூங்கிலில் தீக்கடைக் கோலால் தீ உண்டாக்கி அம் மூங்கிலில் துளைபோட்டுக் குழல் செய்து குழல் இசையில் பாலைப் பண்ணை

இசைப்பான். அந்த இனிமையான பாலைப்பண்ணை வெறுத்தால் குமிழ மரத்திலுள்ள துளையுடைய கொம்பை வளைத்து அதில் மரல் மரத்தின் கயிறை நரம்பாகக் கொண்டு வில் யாழிசைப்பான்.

அதில் குறிஞ்சிப் பண்ணைப் பாடுவான் என இடையனின் இயல்புகளை விளக்குமிடத்து அவன் கோடரி, தீக்கடைக்கோல் போன்றவற்றுடன் வில், யாழ், குழல் போன்றவற்றை வைத்திருந்ததை உணரமுடிகிறது.

**தயிர், மோர் விற்றல்**

முல்லைநிலப் பெண்கள் ஆநிரைகள் தரும் பாலினைக் கரந்து அவற்றிலிருந்து பெரும் தயிர், மோர், வெண்ணெய் ஆகியவற்றை விற்கச் சென்றனர். பாலிலிருந்து வரும் வெண்ணையை வீட்டிற்குப் பயன்படுத்தியும் அதைப் பண்டமாற்றுப் பொருளாகவும் பயன்படுத்தியமையை இலக்கியங்கள் இயம்புகின்றன.

மத்து என்னும் கருவி பால் கடைவதற்குப் பயன்பட்டது. இவற்றை ''தயிர் முதலியன கடையுங் கருவி''[15] என்று மெய்யப்பன் தமிழகராதி விளம்புகிறது. 'மத்து' என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளமையை,

**''நள்இருள் விடியல் புள்எழுப் போகி**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஆம்பிவான் முகை அன்ன கூம்புமுகிழ்**
**உறைஅமை தீம்தயிர் கலக்கி நுரை தெரிந்து**
**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ**
**நாள்மோர் மாறும் நல்மாமேனி**
**சிறுகுழை துயல்வரும் காதின் பணைத்தோள்**
**குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்**
**அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி**
**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்**
**எருமை நல்ஆன் கருநாகு பெறூஉம்'' (பெரும்பாண்.155-165)**

என்கின்றடிகள் தெளிவுபடுத்துகின்றன. முல்லைநில இடைக்குலப் பெண் இருள்புலரும் காலையில் பறவைகள் எழுகின்ற காலத்தில் எழுந்து புலிக்குரல் போன்று ஒலிக்கின்ற மத்தினை எடுத்துத் தயிர் கடைந்தாள். அத்தயிர் குடைக்காளான் போன்று உறைந்திருக்கும்.

அதைக் கடைந்து அதிலிருந்து வரும் வெண்ணெயைத் தனியாக எடுத்து வைத்துவிட்டு மோரை மட்டும் அதற்குரிய பானையில் எடுத்துக் கொண்டு புள்ளிகளையுடைய மோர்ப்பானையைத் தலையில் மென்மையான சும்மாட்டின் மீது வைத்து விற்கச் செல்வாள்.

மோரை விற்றுத் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களை வாங்கி வருவாள். அவற்றைத் தம் கிளைகளுடன் உண்பான். தயிர் கடைந்த வெண்ணெயில் இருந்து பெற்ற நெய்யை விற்றுப் பசும்பொன்னை வாங்காது எருமை, நல்ல பசு, கன்றுகளை வாங்கிடுவாள் எனச் சுட்டுகின்றன. இதன் வழி அன்றைய காலக்கட்டத்தில் ஆநிரைகளை வைத்திருப்பதைச் செல்வம் எனக் கருதியிருக்கின்றனர்.

'பொன்' போன்றவற்றைக் காட்டிலும் தம் குலப்பெருமையை உணர்த்தும் ஆநிரைகளை வைத்திருத்தலே செல்வம், பொருளாதாரம் எனக் கொண்டிருந்தமையைக் காணமுடிகிறது. கலித்தொகையில் மோர்விற்றல் பற்றி பெரும்பாண்மையான குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றில்,

**"…………………… மதை**
**பேர் ஊரும் சிற்றூரும் கௌவை எடுப்பவள் போல்**
**மோரோடுவந்தாள் …………………………"**

**(கலித்.109:5-7)**

என்றடிகள் பெண்கள் மோர் விற்கச் சென்றதை உணர்த்துகின்றன. மோர்விற்கச் செல்லும் பெண்ணானவள் தம் கையில் நெல் கொண்டு செல்லும் கூடையைக் கையில் தழுவிக் கொண்டு சென்றால் என்பதை,

**"வரிக்கூழ வட்டித் தழீஇ, அரிக்குழை**
**ஆடல் தகையள் ……………………"** **(15-16)**

என்னும் இவ்வடிகள் விளக்குகின்றன. கூழ் என் என்பது நெல் ஆகும். வட்டி என்பது கூடை ஆகும். அக்காலத்தில் மோர் விற்றுவிட்டுப் பதிலாக நெல் போன்றவற்றை வாங்கி வந்திருக்க வேண்டும். அதன் பொருட்டே ஆயர் பெண்ணானவள் மோர் விற்கச் செல்லும்போது நெற் கூடையையும் கொண்டு சென்றிருக்க வேண்டும். மற்றொரு பாடலில் மோர் வெண்ணை இரண்டையும் சேர்த்து விற்கச் சென்றதை,

**"................................ அளைக்கு எளியாள்**
**வெண்ணெய்க்கும் அன்னள் எனக் கொண்டாய்"**
**(கலித்.110:5-6)**

என்றடிகள் உணர்த்துகின்றன. இப்பாடலில்

**"மத்தம் பிணித்த கயிறுபோல் நின்றாம்**
**சுற்றிச் சுழலும் என் நெஞ்சு" (10-11)**

என்றடிகள் தலைவனின் நெஞ்சிற்கு உவமையாக மத்தைச் சுற்றிய கயிறு போல் நின் நலத்தைச் சூழ்ந்து திரிகின்றது என் நெஞ்சு எனச் சுட்டுவதாக இடம் பெறுவதன் வழி மத்து கொண்டு மோர் கடைவர் என்பதை உணர்த்துகிறது. மத்தைக் கயிறு கட்டி இருபக்கம் இழுத்துக் கடைந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

இவைபோன்று அகம் 394, கலி.106, 108 ஆகிய பாடல்களிலும் பெண்கள் மோர் தயிர், வெண்ணெய் விற்கச் செல்வதை விளக்குவதாய் அமைகின்றது. தயிர் மோர் விற்றலில் தயிர், மோர், வெண்ணெய் கடைவதற்கு மத்து, கயிறு ஆகியவற்றையும், அதை எடுத்துச் செல்வதற்குக் களன்கள் போன்றனவும் பயன்படுத்தப்பட்டமை காணக்கிடக்கின்றன. அவர்கள் விலையாக நெல், பசு ஆகியவற்றைப் பெற்று வந்ததையும் விளங்க முடிகிறது.

**மருதம்**

மருதம் வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகும். மருதம் என்பதற்கு "வயலும், வயல்சார் இடமும்; மருதநிலத்துக்குரிய காலைப்பண்; ஊடியும கூடியும் இன்பம் நுகர்வதுமான ஒழுக்கம்; மருதமரம்; வயல்"[16] எனச் சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி சுட்டுகிறது. மருதத்தில் வேளாண்மையே பெருந்தொழிலாகும்.

மருதநிலமே பொருளாதாரப் பண்பாட்டில் மக்களை மேம்பட வைத்த ஒன்றாகும். பொருளாதார உயர்வும், நிலவுடைமைச் சமூகமும் தோற்றுவித்தது. வேளாண்மையைப் பெண்கள் முதலில் கண்டறிந்தனர். இதனை, "முதலில் பெண்களே பயிர்த் தொழிலில் ஈடுபட்டனர். அவர்கள் பயிர்த் தொழிலைக் கண்டு பிடித்தனர். பயிர்த் தொழில் செய்ய ஆள் பழம் வேண்டும்.

அதற்குரிய மக்களை ஈன்றதும், கற்றக்கொடுத்ததும் பெண்கள். ஆண்கள் வேட்டைக்காக நெடுந்தூரம் சுற்றி அலைவார்கள். சில நாட்களுக்கு ஒருமுறையே குடில்களுக்குத் திரும்புவார்கள். ஆகவே பயிர்த்தொழிலின் தொடக்கக் காலத்தில் ஆண்களுக்கு அதில் அதிகபங்கு இருந்ததில்லை. குடும்ப வளர்ப்பிலும், அதிகப்பங்கு இருந்தில்லை. பெண்களே புராதனப் பண்பாட்டை உருவாக்குவதில் முக்கியப் பங்கு பெற்றனர்"[17] என சுட்டுகிறார் நா.வானமாமலை.

"ஈகைக்குப் பெயரான வேளாண்மை என்னுஞ் சொல், அவ்வீகைக்குக் கருவியான பயிர்த்தொழிலுக்குப் பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்பவரான வேளாளர்க்குப் பெயராயிற்று"[18] என்கிறார் மறைமலையடிகள்.

"வேளாண்மை என்பதை ஒரு கலை என்றும் ஓர் அறிவியல் என்றும் கூறலாம். வேளாண்மை என்பது பொருளாதார வளர்ச்சிக்காகப் பயிர்களையும், கால்நடைகளையும் கொண்டு செய்யப்படும் தொழிலாகும். இவ்வேளாண்மைத் தொழிலில் பயிர் உற்பத்தி, கால்நடைப் பராமரிப்பு, தோட்டக்கலை, பால்பண்ணை, காடுவளர்ப்பு, மீன்வளம் மற்றும் வேளாண், பொறியியல் போன்ற பிரிவுகள் அடங்கும்"[19] என்று இல.செ.கந்தசாமி குறிப்பிடுகிறார்.

இன்றும் வேளாண்மையில் அதிகப் பங்களிப்பினைப் பெண்கள் செய்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். உழவும், விதைப்பும் ஆண்களைச் சார்ந்தும்; களை எடுத்தல், நாற்றுநடுதல், கதிர் அறுவடை செய்தலில் பெண்கள் அதிகம் பங்கு பெறுவதைக் காணமுடிகின்றது. இத்தகைய உழவு, விதைத்தல், களைபறித்தல், நாற்றுநடுதல், அறுவடை செய்தல், கடாவிடுதல், நீர்பாய்ச்சுதல், ஏற்றம் இறைத்தல் என பல்வேறு தொழில்களை உள்ளடக்கியது மருதநிலம். அத்தொழில்களைக் கீழ்க்கண்டவாறு காணலாம்.

**உழவு**

வேளாண்மையின் முதல் நிலை கரடுமுரடான நிலங்களைச் சமப்படுத்துவதாகும். அந்நிலங்களை ஏர் கொண்டு உழுது

சமநிலைப்படுத்தி முதலில் நிலத்தைப் பண்படுத்துகின்றனர். அதன்பிறகு விதைத்தல் தொடர்பான வேலைகளை மேற்கொண்டுள்ளனர். உழவை தலையான தொழில் எனக் குறள் உணர்த்துகிறது. இவற்றை,

**"சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை"[20]**

என்னும் குறளடிகள் விளக்குகின்றன. உலகத்தவர் பிற தொழில்களைச் செய்து திரிந்தாலும், முடிவில் உணவின் பொருட்டு உழவரையே எதிர்ப்பார்ப்பர். ஆகையால் வருத்தம் அடைந்தாலும் உழவே தலையாய தொழில் என இக்குறள் சுட்டுகிறது.

இத்தன்மை வாய்ந்த உழவினைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் தெள்ளிதின் உணர்த்துகின்றன. உழவுக் கருவிகளாக, "கலப்பை, மேழி, ஏக்கால், நுகத்தடி, கார், காரின் ஆணிகள், ஏர்க்காலின் புள், பரம்புச்சட்டம், மாமரம், கொழு, கலப்பை, கட்டைப்பாறை, எருதுகள், பூட்டாங்கயிறு, மண்வெட்டி, குந்தாலி, கோடாலி, கலைக்கொட்டு, கருக்கு அரிவாள், பிக்காசு, வெட்டுக்கத்தி, முள்வாள், துறட்டுக்கோல், தாற்றுக்கோல், இறைகூடை, கை ஏற்றம், ஆன் ஏற்றம்"[21] போன்றவற்றை அபிதானசிந்தாமணி உரைக்கிறது.

உழவானது பலமுறை உழுவிடப்பட்டதை,

**"......................... உறுபெயல்**
**தன் துளிக்கு ஏற்ற பல உழு செஞ் செய்**
**மண் போல் நெகிழ்ந்து ................." (அகநா.26:24-25)**

என்றடிகள் விளம்புகின்றன. நிலமானது பலமுறை உழுதலினால் நெகிழும் தன்மையாய் பண்பட்டதாகிறது என்பதை உணர்த்துவனவாய் இவ்வடிகள் அமைகின்றன. கலித்தொகையில், புலவர்களின் நாவன்மைக்கு உவமையாக ஏர் சுட்டப்படுவதை,

**"...................... வல்லவர்**
**செது மொழிசீத்த செவி செறுஆக**
**முதுமொழி நீரா, புலன்தா உழவர்" (கலித்.68:2-4)**

என்கின்றடிகள் இயம்பும். யானைகளின் நிலமைக்கு உவமையாக உழுகின்ற கலப்பையைச் சுட்டுவதை,

**“……………………… ஞாயிறு**
**கடுகுபு கதிர் மூட்டிக்காய் சினம் தெறுதலின்**
**உறல் ஊறு கமழ் கடாத்து ஒல்கிய எழில் வேழம்**
**வறன் உழு நாஞ்சில் போல் மருப்பு ஊன்றி நிலம்சேர”**
**(கலித்.8:2-5)**

கடுமையான வெயிலின் காரணமாக வண்டுகள் மொய்த்தவாய் கமழும் ஊறுகின்ற மதநீரை உடைய யானைகள் அழகு கெட்டு ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள் போல, கொம்புகளை ஊன்றி, கையை நிமிர்த்தி நிலத்தே நின்றன என விளக்குகிறது. ‘கலப்பை’ என்பது “இது உழவர் நிலத்தைப் பண்படுத்த உபயோகிக்கும் கருவி. இரு நிலத்திலுள்ள உறுதியாகிய மண்ணினைக் கீழ்மேலாகக் கலப்பது”[22] என்று அபிதானசிந்தாமணி விளம்புகிறது. உழவு பற்றிப் பெரும்பாணாற்றுப்படை பலமுறை உழவு மேற்கொண்டதையும், எவ்வாறு ஏர்பூட்டி உழுததையும், கலப்பையின் தன்மையையும் உணர்த்துவதாய்,

**“குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்**
**நடைநவில் பெரும்பகடு புதவில் பூட்டி**
**பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**
**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி**
**தொடுப்பு எறிந்து உழுத ……………”**
**(பெரும்பாண்.197-201)**

என்றடிகள் இயம்புகின்றன. வீடு நிறைய உணவுப் பொருள்கள் இருந்தும் நில, நீர் வளம் கொண்டிருந்த உழவர் பலமுறை உழுதனர். நன்கு உழுதொழிலைச் செய்த பழக்கப்பட்ட காளைமாடுகளை நுகத்தடியில் பூட்டி பெண் யானையின் வாய் போன்ற வளைந்த கலப்பையைக் கொண்டு கலப்பையில் உள்ள உடும்பு போன்ற வடிவம் உடைய கொழு முங்கும்படியாக உழுதனர் எனச் சுட்டுகிறது.

இப்பாடலடிகள் கலப்பையின் உருவமைப்பை உணர்த்துவதாய் அமையப்பெறுகிறது. ‘செஞ்சால்’ என்பது பலமுறை உழுதல் எனப் பொருள்படும். ‘கலப்பை’ என்றால் “உபகரணம்; உழுபடை; யாழ்வாத்திய முட்டுக்களையுடையவை; நாஞ்சிற்படை; உறுப்பு; ஏர்”[23] என்ற பொருளில் வருவதைக் கழகத் தமிழ் அகராதி எடுத்தியம்பும். இலக்கியங்களில் கலப்பையானது நாஞ்சில், ஏர், கலப்பை என்ற பெயரில் அதிகம்

இடம்பெறுகிறது. 'கொழு' என்பதற்குக் "காறு; கொழுவென்னேவல்; மழு; கொழுப்பு; துளையிடும் பெரிய ஊசி; கலப்பையிரும்பு; கோள்; மதர்துத்தழை"[24] எனக் கழகத் தமிழகராதி பொருள் தருகிறது. கொல்லையை உழுது உழுது கலப்பையின் கொழுவெல்லாம் மழுங்கிப்போனது என்று பொருநராற்றுப்படை உணர்த்துகிறது.

**"கொல்லைஉழு கொழு ஏய்ப்ப, பல்லே**
**எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி" (பொருந.117-118)**

என்றடிகளின்வழி கரிகால் பெருவளத்தானின் உணவு உபசரிப்பால் பொருநர்களுக்கு உணவு உண்டு உண்டு பற்கள் எல்லாம் கொல்லையை உழுத கொழு மழுங்கிப்போனது போன்று ஆயிற்று என உவமையாகச் சுட்டப்படுகிறது. நிலங்களில் நன்செய், புன்செய் என்ற இரு நிலப்பகுதிகள் காணப்படுகின்றன. நன்செய் நிலம் நீர்ப்பாசன வசதிக்கேற்பவும், புன்செய் நிலம் வானம் பார்த்த பூமியாகவும் அமைந்திருக்கும். இங்குக் கொல்லை சுட்டப்பெறுவது புன்செய் நிலமாகும். பதிற்றுப்பத்தில்,

**"சீருடைப் பல் பகடு ஒலிப்பப் பூட்டி**
**நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்**
**அலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன் கண் வைப்பின் நாடு கிழவோனே" (பதிற்.58:16-19)**

வன்புலத்தில் விதைகளை விதைக்கின்ற வலிய கையை உடைய உழவுத்தொழில் செய்வோர் சிறப்புடைய பல கடாக்களை அவை ஒலிக்கும்படி நுகத்தின் கண்ணே பூட்டி உழுவர். கலப்பைகள் உழுத கொழுவினது படைச்சாலின் பக்கத்தே அசைகின்ற ஒளியுடைய அழகிய மணியைப் பெறுதற்கு இடமான அகன்ற இடத்தையுடைய ஊர்களைக் கொண்ட நாட்டுக்குரியோன் என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் குறிப்பிடுவதாய் இவ்வடிகள் இடம்பெறுகின்றன. இவ்வாறு உழுவதற்குப் பயன்படும் கலப்பை, ஏர், நாஞ்சில், கொழு, நுகம் என்ற பெயரில் பல இடங்களில் சங்க இலக்கயங்களில் காணப்படுகின்றன.

உழவில் தமிழர்கள் எருதுகளையும் எருமைகளையும் பயன்படுத்தியுள்ளனர். எருமைகளைப் பயன்படுத்துவதை,

**"பெரு நெற் பல்கூட்டு எருமை உழவ" (நற்.60:2)**

என்றடி விளக்குகிறது.

“சுமேரியர் நிலத்தை உழுவதற்கு எருதுகளைப் பயன்படுத்தினர். விதைவிதைப்பதற்கு முக்கோணமான ஒரு கருவியைப் பயன்படுத்தினர். பாரசீக மக்கள் மரத்தாலான கலப்பையை உழவுக்குப் பயன்படுத்தினர். அதன் கொழு முனை உலோகத்தால் செய்யப்பட்டிருந்தது. இவர்கள் எருதுகளைக் கலப்பையில் பூட்டியே நிலங்களை உழுதனர். பாபிலோனியர் ஏரில் போர்த்தப்பட்ட ஒரு குழாயின் மூலம் விதைகளை விதைத்தனர்”[25] என்று அநுமந்தன் குறிப்பிடுகிறார்.

உழுதபின் வயல்களில் உள்ள மேடு பள்ளங்களைச் சமப்படுத்துவதற்குத் தளம்பு என்ற கருவி கொண்டு பயன்படுத்தியமையை,

**“மலங்கு மிளிர் செறுவின் தளம்பு தடித்து இட்ட”** (புறநா.61:2)

என்றடி இயம்புகிறது.

**விதைத்தல்**

உழவினைத் தொடர்ந்து மருதநிலத்தில் நெல்லும் கரும்பும் பெரும்பான்மை விளைபொருளாக விளைவிக்கப்பட்டன. நெல்விதைத்ததை,

**“வித்திய உழவர் நெல்லொடு பெயரும்”** (ஐங்.3:1-4)

என்றடி உழவர் பின்வரவிருக்கும் விளைச்சலுக்கு விதைகளைக் கொண்டு சென்று முன்னர் விளைந்த நெல்லைக் கையில் கொண்டு வீடு திரும்பினர் என்பதாக இடம்பெறுகிறது. மருதநிலம் கரும்பும் நெல்லும் மிகுதியாகக் கொண்ட விளைச்சல் நிலம் என்பதை,

**“பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்**
**கழனி ..................................”** (ஐங்.4:3-4)

என்றடிகள் புலப்படுதுகின்றன. இதேபோன்று சங்க இலக்கியத்தில் மருதநிலத்தில் நெல்லும் கரும்பும் அதிகம் விளைவிக்கப்பட்டதை உணர்த்துகின்றன.

கரும்பைப் பயிரிட்ட தமிழர்கள் பாத்திப் பாத்தியாகப் பிரித்து நட்டனர். அப்பாத்தியின் அளவானது யானையின் காலடியின் அளவைப் போன்று இருந்தது. இதனை,

**“கரும்புநடு பாத்தியன்ன பெருங்களிற்றடி”** (குறுந்.262:7)

என்ற பாடலடி விளக்குகிறது.

கரும்பு விளைக்கப்பட்டதைத் தொடர்ந்து கரும்புச்சாறு பிழியும் ஆலைகள் இருந்ததை,

**“தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த” (பதிற்.19:23)**

என்றடி உணர்த்துகிறது. கரும்பு ஆலையின் ஒலியானது ஊர் எங்கிலும் கேட்டுக் கொண்டேயிருந்ததை

**“கரும்பின் எந்திரம் சிலைப்பின்” (புறநா.322:7)**

என்னும் அடி இயம்புகிறது. மேலும் பட்.2, ஐங்.55, மலை.119 போன்ற பாடலடிகளில் கரும்பும் கரும்புச்சாறு பிழியும் எந்திரம் பற்றியச் செய்திகள் இடம்பெறுகின்றன.

மருதநிலத்தில் உழுந்து விளைவிக்கப்பட்டது. திருமணத்தில் உழுந்தால் சமைக்கப்பட்ட உணவினை அளித்தனர் தமிழர் என்பதை,

**“உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ் சோற்று அமலை நிற்ப” (அகநா.86:1-2)**

என்றடிகள் புலப்படுத்துகின்றன.

உழுந்தை தோலிலிருந்துப் பிரித்தெடுப்பதற்குக் கழுந்துள்தடியைப் பயன்படுத்தினர். இதனை,

**“உழுந்துடைக் கழுந்தின் இரும்புடைப் பணைத்தோள்”**
**(குறுந்.384:1)**

என்னுமடி விளக்குகிறது.

**நீர் பாய்ச்சுதல்**

வேளாண்மையில் விதைப்பினைத் தொடர்ந்து பயிர்களுக்கு நீர் பாய்ச்சும் தன்மைக் காணப்படும். இந்நீர் குளங்களிலிருந்து வயல்களுக்கு இறைக்கப்பட்டது. நீர் இறைக்கப்படுவதை,

**“நீர்த்தெவ்வும் நிரைத்தொழுவர்**
**பாடுசிலம்பும் இசைஏற்றத்**
**தோடுவழங்கும் அகல் ஆம்பியின்**
**கயன் அகைய வல்நிறைக்கும்**
**மென்தொடை வன்கிழாஅர்” (மதுரை.89-93)**

என்கின்ற அடிகள் விளக்குகின்றன. நீரை முகந்து இறைக்கின்ற தொழிலாளர் வரிசையாக நின்று பாடும் இசையால் எழுந்த ஓசையும், ஏற்றத்தோடு இயங்கும் அகன்ற பன்றிப்பத்தரின் ஓசையும், குளங்களின்

நீரை வடிய இறைக்கும் மென்மையான கட்டுகளை உடைய பூட்டைப்பொறியின் ஓசையும் உடையது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஊர் எனச் சுட்டுவதன் வழி நீர் இறைக்கும் கருவியான ஆம்பி பற்றி எடுத்துரைக்கிறது.

'ஆம்பி' என்பதற்கு "குடைக்காளான்; இறைகூடை; ஒலி; பன்றிபத்தர்"[26] எனவும், 'பன்றிபத்தர்' என்பதற்கு "நீர் இறைக்கும் கருவி; பன்றி கூழ்த்தொட்டி"[27] எனவும் கழகத் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது. கிழார் என்பதற்கு - நீர் இறைக்கும் கருவி என உரையாசிரியர் விளக்கம் தருகின்றனர். ஆகையால் நீர் இறைப்பதற்கு ஏற்ற மரத்துடன் கூடிய கூடை வடிவில் இருக்கும் பன்றிப்பத்தர் பயன்படுத்தியமையைக் காணமுடிகிறது. இவ்வாறு குளத்திலிருந்து நீர் பாய்ச்சியதைப் பண்டை இலக்கியம் சுட்டுவதை அறிகின்றோம். வயல்களில் நீர் நிரையும்படி நீர் பாய்ச்சியதை,

**"ஏர் பரந்த வயல், நீர் பரந்த செறுவின்" (புறநா.338:1)**

என்ற புறநானூற்றுப் பாடலடி குறிப்பிடுகிறது.

"குடிமக்களது பொருளாதாரத்துறையிலும் உதவிபுரிதல் அரசனது கடமையாகும். பயிர்த்தொழில், கைத்தொழில், வாணிகம் என்ற மூன்றையும் அரசன் ஆதரித்தான். பல காடுகள் அழிக்கப்பட்டு விளைநிலங்கள் ஆக்கப்பட்டன. புதிய சிற்றூர்கள் தோற்றுவிக்கப்பட்டன.

ஆறுகளுக்குக் கரைகள், ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டப்பட்டன, உயர்த்தப்பட்டன. அவற்றிலிருந்து கால்வாய்கள் வெட்டப்பட்டன. நாடெங்கும் நீர்வசதி உண்டாக்கப்பட்டது. ஆற்றுப்பாய்ச்சல் இல்லாத இடங்களில் பெரிய குளங்களும் ஏரிகளும் வெட்டப்பட்டன. அவற்றில் மழைநீர் தேக்கப்பட்டது. அவற்றிலிருந்து கால்வாய் மூலம் வயல்களுக்கு நீர் கொண்டு செல்லப்பட்டது"[28] என மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.

வயல்களில் நீர் பாய்ச்சுவதற்கு வழிவகை செய்வது மன்னர்களின் கடமையாக இருந்தமையைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இதனை,

"காடுகொன்று நாடுஆக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கி" (பட்:283-284)

என்றடிகள் விளக்குகின்றன.

**களைப்பறித்தல்**

மருதநிலத்தில் உழவிட்டு விதைவிதைத்து நீர்ப்பாய்ச்சிய பின்பு பயிர்களிடையே வளரும் கோரை போன்ற களைகளைக் களைந்தனர். களைபறித்தனர். இதனைத் தற்காலத்தில் 'களையெடுப்பு' என்பர். களையெடுப்பதற்குத் 'துளர்' என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். நீர்ப்பாய்ச்சித் தண்ணீர்க் களையெடுத்தல், நீர் இன்றி காய்ந்த தரையில் பயிருடன் இருக்கும் கோரை புல் போன்றவற்றைத் துளர் என்னும் 'களைக்கொட்டு' கொண்டு களைபறித்தல் மருதநிலத்தில் காணப்பட்டது. தண்ணீர்க் களையெடுப்பில் உழவர்கள் உழத்தியர் கையால் களைகளைப் பிடிங்கியும் அரிக்கவும் செய்வர். களையெடுப்பைப் பெரும்பான்மை பெண்கள் செய்தனர். இன்றும் செய்கின்றனர். ஆண்கள் ஒரு சில இடங்களில் களையெடுத்தனர் என்ற குறிப்பும் பழந்தமிழ் இலக்கியத்தில் இடம்பெறுகிறது. களையெடுக்க உதவும் 'துளர்' (களைக்கொட்டு) என்பதற்கு "களைக்கொட்டு; பயிரின் களை"[29] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழகராதி.

களை பறிக்கும் பெண்கள் 'கடைசியர்' எனப்பட்டனர். இதனை,

**"கொண்டைக் கூழைத் தண்தழைக் கடைசியர்
சிறுமாண் நெய்தல் படு ஆம்பலொடு கட்கும்"**
**(புறநா.61:1-2)**

என்றடி அழகுடைய நெய்தலுடன் ஆம்பலையும், கொண்டையணிந்த கூந்தலையும் குளிர்ந்த தழையும் உடைய உழத்தியர் களையைப் பறிப்பர் என எடுத்துரைக்கிறது. இங்கு 'கடைசியர்' என்பது உழத்தியரைக் குறிக்கும். இதேபோன்று களையெடுப்புப் பற்றி,

**"கரும்பின் எந்திரம் கட்பின் ஓதை" (மதுரை.258)**

என்றடி உணர்த்துகின்றது. துளர் என்னும் கருவி களையெடுக்கப் பயன்படுவதை,

**“தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை”**
**(பெரும்பாண்.201)**

என்றடி உணர்த்துகிறது. துளர் பற்றி முல்லை நிலத்திலும் காணமுடிகிறது. முல்லை நிலத்தில் களையெடுக்கவும் ‘துளர்’ என்னும் கருவி பயன்பட்டதை,

**“கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர்” (அகநா.184:13)**
என்றடியும்,

**“களைகால் கழீஇய பெரும்புன் வரகின்” (அகநா.194:9)**
என்றடியும் களைக்கொட்டுக் கொண்டு களைப்பறிக்கப்பட்டதை எடுத்தியம்புகின்றன.

**நாற்றுநடுதல்**

நஞ்சை, வேளாண்மையில் நாற்றுநடுதல் என்பது ஒரு பகுதியாகும். நாற்று நடுதலில் ஆண்களும் பெண்களும் செயல்பட்டனர் என்பதை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. இதனை,

**“நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்தநின்**
**நடுநரொடு சேறி ஆயின் ……………………” (நற்.60:7-8)**

என்றடிகள் உழவன் உழத்தியரோடு நீர்மிக்க சேற்றில் நாற்றுகளை நடுவதற்குச் சென்றான் என விளம்புகின்றன. நாற்று நடப்பட்டதை,

**“முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்” பெரும்பாண்.212)**
என்றடியும் இயம்புகின்றது. நாற்றானது நன்றாக அழுந்த நடப்பட்டதைக் காணமுடிகிறது. நாற்று நடும் முறையினை, நெல் நன்றாக விளைவதற்கான காரணத்தைக் கூறும் விதமாய் மலைபடுகடாமில்,

**“பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு**
**வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்”**
**(மலைபடு.114-115)**

கால் கட்டி முற்றிப் பல கிளைகளாய் காற்று ஊடே செல்வதால் நன்றாக விளைந்தது என்று சுட்டப்படுகிறது. கரும்பும் இவ்வாறு காற்று மோதுவதால் நன்றாக விளைந்து ஆலைக்குக் கொண்டு செல்லப்பட்டதை,

**“வேல் ஈண்டு தொழுதி இரிவுற் றென்னக்**
**காலுற துவைப்பின் கவிழ்க்கனைத்து இறைஞ்சிக்**
**குறைஅறை வாரா நிவப்பின் அறையுற்று**
**ஆலைக்கு அலமரும் தீங்கழைக் கரும்பே” (மலைபடு.116-119)**

என்றடிகள் காற்று இடையே செல்லும் அளவுக்கு இடைவெளிவிட்டு நட்டதால் பயிர்கள் நன்றாக வளர்ந்தன என்னும் வேளாண் தொழில் நுட்ப அறிவியலை உணர்த்துகிறது.

**அறுவடை**

வேளாண்மையில் விளைந்த கதிர்களை அறுவடை செய்வதற்கு 'குயம்' என்னும் கருவியைப் பயன்படுத்தினர் பழந்தமிழர். 'குயம்' என்பது 'கருக்கருவாள்' ஆகும். குயம் என்பதற்கு "இளமை; கொடுவாள்; தருப்பை; முளை; அரிவாள்; நாவிதன் கத்தி; குயச்சாதி; தருப்பைப்புல்"[30] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழகராதி. கருக்கருவாள் கொண்டு நெல் அறுவடை செய்யப்பட்டதை,

**"நெல்லரி தொழுவர் கூர்வாள்" (நற்.26:2)**
**"கூனிக் குயத்தின் வாய்நெல் அரிந்து" (பொருந.242)**

என்ற அடிகள் வளைந்த கதிர் அறுவாளால் நெல்லை அரிந்தனர் என இயம்புகின்றன. பாணர்கள் நெல்லரிந்த செய்தியை,

**"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ**
**கண்மடல் கொண்ட தீம்தேன் இரிய**
**கள் அரிக்கும் குயம் சிறுசில்**
**மீன் சீவும் பாண் சேரி" (புறநா.348:1-4)**

என்றடிகள் வெள்ளிய நெல்லை அரிகின்றவர்கள் ஒலிக்கும் தபாரிப் பறையின் ஒலியைக் கேட்டு அஞ்சி, நெற்பயிரின் மடற்கண் உறைந்த இனிய வண்டுகள் தம்முடைய தேனடைகளிலிருந்து விரைந்து ஓடின. அவ்வரிவாளால் சிறிய சிலவாகிய மீன்களைச் சீவுகின்ற பாணர்கள் வாழும் சேரி என விளக்கம் அளிக்கின்றது. இவ்வற்றின்வழி பாணர்கள் நெல் அறுவடையும் செய்தனர் என்பதைக் காணமுடிகிறது. இவர்கள் கருக்கறுவாக் கொண்டு அறுவடை செய்தமை புலனாகிறது.

**கடாவிடுதல் (புனையடித்தல்)**

அறுவடை செய்த நெல்லை அடித்து உதிர்த்தபின் மீண்டும் சில நெற்கள் அந்தக் கதிர் சக்கையிலே இருக்கும். அவற்றை உதிர்க்கவும் கதிர் சக்கையை நன்கு பயன்படுத்தவும் அதில் உள்ள சொனைத்தன்மை நீங்கவும் புனையடிக்கப்பெறுகிறது. புனையடிக்க கால்நடைகள்

பயன்படுத்தப்பட்டன. இப்புனையடித்தலைச் சூடு அடித்தல் எனவும் கூறுவர். இதனை,

**"குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி**
**பகடு ஊர்பு இழிந்த பின்றை ............"**
**(பெரும்பாண்.237-238)**

என்றடி சுட்டுகிறது. அத்துடன் நெல்லைத் தூற்றிச் சுத்தம் செய்ததை,

**"......................... துகள் தப**
**வையும் துரும்பும் நீக்கிப் பைது அற**
**குடகாற்று எறிந்த குப்பை, வடபால்**
**செம்பொன் மலையின் சிறப்பத் தோன்றும்"**
**(பெரும்பாண்.238-241)**

என்றடிகள் மேல் காற்றின் உதவியுடன் பொலிதூற்றித் துரும்பு, தூசு நீக்கி நெல்லை மட்டும் பொன்மலைப்போன்று குவிந்திருந்தனர் எனச் சுட்டுகின்றன. இதுபோன்று நெல் தூற்றப்பட்டச் செய்தியை இலக்கியங்கள் உணர்த்துவதைக் காணமுடிகிறது.

**மீன்பிடி தொழில்**

மருத நிலத்தில் வேளாண்மை சிறப்புற்றிருந்தமையோடு மீன் பிடித்தலும் மீன் விற்றலும் நடந்தேறின. தூண்டில் போட்டு மீன் பிடித்ததை,

**"தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது**
**கயிறு இடு கதச் சேப்போல மதம் மிக்கு" (அகநா.36:6-7)**

என்ற அடிகளால் அறியலாம். தூண்டிலை இட்ட வலைஞன் அம்மீனை இழுக்கவும் வராது மூக்கில் கயிறிட்டு இழுக்கப்படும் சினம் கொண்ட எருதினைப் போன்று உடைய ஊரன் என இடம் பெற்றுள்ளது. இவ்வடிகளின்வழி மீன்பிடிக்கத் தூண்டில் என்னும் கருவி பயன்படுத்தப்பட்டமை புலனாகிறது. தூண்டிலானது இரும்பால் ஆனது என்பதை,

**"கொடுவாய் இரும்பின் கோள் இரை துற்றி" (அகநா.36:2)**

என்றடி விளக்குகிறது. காவிரியாற்றில் பாணர்கள் இரவில் மீன்பிடித்து விடியல்காலை வீடு திரும்பியதை,

**"மால் இருள் நடுநாட போகி தன் ஐயர்**
**காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு"(அகநா.126:7-8)**

என்றடியும் உணர்த்துகின்றது. பாண்மகள் மீனை மருதநிலத்தில் விற்று விளையாக நெல்லைப் பெறாது முத்துக்களைப் பெற்றதை,

**“அவ்வாங்கு உந்தி, அம்செல பாண்மகள்**
**நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்**
**பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளான்”**
**(அகநா.126:9-11)**

என்றடிகள் விளம்புகின்றன. கடலில் மீனானது நள்ளிரவில் உறங்கும். அந்த வேளை மீன் பிடிப்பதற்கு ஏதுவானதாக அமையும் என்பதை அறிந்து இரவில் மீன்பிடிக்கச் சென்றிருக்க வேண்டும். இரவில் மீன் உறங்கும் என்பதை,

**“கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து” (அகநா.142:20)**

என்ற அகநானூற்றடி விளக்குவதைக் காணமுடியும். பாண்மகளானவள் மேற்கண்ட பாடலில் பழைய நெல்லைத் தான் விற்ற மீனுக்கு விலையாக வாங்கவில்லையென்பதை அறியமுடிகின்றது. மீனுக்கு விலையாகப் பழைய நெல்லை வாங்கியதாக ஐங்குறுநூற்றில் காணலாகும்போது,

**“வலைவல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்**
**வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்**
**யாண்டுகழி வெண்ணெல் நிரைக்கும் ஊர” (ஐங்.48:1-2)**

என்னும் இப்பாடல் சுட்டுகிறது. வலைவீசி மீன்பிடிப்பதில் வல்ல பாணனுடைய வெண்மையான பற்களையுடைய இமைகள் வரால் மீனைக் கொண்டு வந்து சொரிந்த வட்டியுள் உழவர் மனைக்கிழத்தி முந்தைய ஆண்டு விளைந்த பழைய வெண்ணெல்லைச் சொறிந்தற்கு இடமான ஊர் என இப்பாடல் இடம்பெறுகிறது.

மீனுக்கு விலையாக முத்துக்களையும் நெல்லையும் பெற்றனர் என்பதை விளக்குகின்றன. மீன்பிடித்தலில் தூண்டில் வலை போன்ற கருவிகள் பயன்பாட்டில் இருந்தமையும் அறிய முடிகிறது. ஐங்குறுநூறு.49 ஆம் பாடலும் பாண்மகள் சில மீன்களைக் கொடுத்து அவற்றுக்கு ஈடாக பனுவாகிய நெற்களைப் பெற்றாள் எனச் சுட்டுகிறது. அகநானூறு (பா.186:1-3) குளத்தில் மீன்பிடிக்கும் வினைஞர்கள் தூண்டில் கொண்டு மீன் பிடித்ததைக் குறிப்பிடுகிறது.

**நெய்தல்**

நெய்தல் கடல் சார்ந்த பகுதி ஆதலின் அங்குக் கடல் சார்ந்த தொழில்கள் நடந்தேறின என்பதை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றன. நெய்தல் என்பதற்கு "ஆடை முதலியன நெய்தல்; ஆம்பல்; இரங்குதல்; ஐவகை நிலங்களில் ஒன்று சாப்பறை; புலந்தோர் புலம்பல்"[31] என கழகத் தமிழகராதி விளக்குகிறது. நெய்தல் நிலத்தில் மீன்பிடித்தல், மீன் உலர்த்தல், மீன்விற்றல் ஆகியவற்றுடன் கடல் வாணிபமும் நடந்துள்ளன. நெய்தல் நிலத்தில் கிடைக்கப்பெறும் பொருள்களாக மதுரைக்காஞ்சியில்,

> **"முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**
> **அரம்போழ்ந்து அறுத்த கண்தேர் இலங்குவளை**
> **பரதர் தந்த பல்வேறு கூலம்**
> **இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்பும்**
> **பரந்தோங்கு வரைப்பின் வன்கை திமிலர்**
> **கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்**
> **விழுமிய நாவாய் பெருநீர் ஒச்சுநர்**
> **நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்**
> **புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொடு அனைத்தும்**
> **வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப" (மதுரை.315-324)**

என்றடிகள உணர்த்துகின்றன. நெய்தலில் ஒலிக்கின்ற கடல் தந்த ஒளி பொருந்திய முத்துக்கள், அரத்தால் அறுக்கப்பெற்ற நேரிதாக விளங்கிய வளையல்கள், வணிகர் விற்பனைக்குக் கொணர்ந்த பல்வேறு பண்டங்கள், கரிய பெரிய உப்பங்கழியில் வெண் உப்பு, இனிமையான பொரித்த புளி, பரந்து ஓங்கிய மணல் குன்றுகளில் செழுமையான மீன் துண்டங்கள், துடிக்கண் போன்று அறுக்கப்பெற்ற மீன் துண்டங்களும் கிடைத்தன.

பெரிய மரக்கலத்தைக் கடலில் ஓட்டுநர் இடமகன்ற உலகத்தில் பல தேசங்களுக்குத் தமிழகத்தில் கிடைக்கும் அணிகலன்களைக் கொண்டு சென்றனர். மேல்நாட்டிலிருந்து கொணர்ந்த குதிரைகளும் கிடைத்தன. இவ்வாறு நாளுக்குநாள் கடல் வாணிபம் சிறந்து வளர்ந்துள்ளது. இவ்வடிகளில் இங்கு நடைபெற்ற தொழில்களைக் காணமுடிகிறது.

**மீன்பிடித்தல்**

நெய்தல் நில மக்களின் தொழில்களில் தலையான தொழில் மீன்பிடித்தலாகும். மீன்பிடிக்கத் தூண்டில், கப்பல் (மரக்கலம்) எறிஉளி, பறி வலை ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியதைப் பட்டினப்பாலையில்,

**"கொடுந்திமில் பரதவர் குருஉச்சுடர் எண்ணவும்"**

**(பட்.112)**

என்ற பாடலடியின் வாயிலாக அறிய முடிகின்றது. கடலில் மீன்பிடிக்கச் சென்ற வளைந்த படகையுடைய பரதவர் எனப் பொருள் தருகிறது. இதன்வழி மீன்பிடிக்கச் செல்லும் பரதவர் படகில் மீன்பிடிக்கச் சென்றுள்ளனர் என்பதைக் காணமுடிகின்றது.

மருதநிலத்திற்கும் நெய்தல் நிலத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் வாழும் மக்கள் வலைஞர்கள் எனப்பட்டனர். இவர்கள் மீன்பிடிப்பதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். கடற்கரைப்பகுதியை அடுத்துத் தங்கியிருந்தனர். இவர்கள் மீன்பிடிப்பதற்கு 'பறி' என்னும் கருவியைப் பயன்படுத்தியதைப் பெரும்பாணாற்றுப்படையின்,

**"குறியிறைக் குரம்பைப் பறியுடை மூன்றில்" (பெரும்பாண்.265)**

என்றடி விளக்குகிறது. இவர்கள் மீன்பிடிக்கத் தோல்பை, தூண்டில் ஆகியவற்றை எடுத்துச் சென்றுள்ளனர். இத்தூண்டில் மூங்கில் கோலாலானது என்பதைபெரும்பாணாற்றுபடை,

**"பச்சூன் பெய்த கவல்பிணி பைந்தோல்**
**கோள்வல் பாண்மகன் தலைவலித்து யாத்த**
**நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇ**
**கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்" (283-286)**

என விளக்குகின்றது. பாணர் மீன்பிடிக்கச் செல்கையில் பச்சை இறைச்சியைத் தோல் பையில் இட்டுத் தோளில் வைத்திருந்தனர். அவர்கள் வைத்திருந்த தூண்டிலானது மூங்கில் கோலால் செய்யப்பட்டது. அதனை அவர்களே செய்துள்ளனர். தூண்டில் முள்ளானது இரும்பால் செய்யப்பட்டுள்ளது. தூண்டிலானது மூங்கில் கோலால் இரும்பில் செய்த வளைந்த வடிவுடைய முள்ளாகக் காணப்பட்டதை இவ்வடிகள் தெள்ளிதின் விளம்புகின்றன.

தூண்டில் என்பதற்கு “தக்கை இணைக்கப்பட்ட உறுதியான நரம்பு அல்லது இழையின் நுனியில் கொக்கி போன்ற இரும்பு முள்ளினை உடைய நீளமான கோல்”[32] என்று நர்மதா தமிழகராதி விளக்குகிறது.

“கவை/கொக்கி போன்று அமைப்புடைய இரும்பு முள்ளில் நரம்பினை இணைத்து அதன் இடையில் நெட்டித்தக்கை பொருத்தப்படுகிறது. இவ்வாறு தயார் செய்யப்பட்ட நரம்பு பலமான மூங்கில் குச்சியின் நுனியில் கட்டப்படுகிறது”[33] என சா.சுந்தரபாலு குறிப்பிடுகிறார்.

பரதவர்கள் பெரிய மீனைப்பிடிக்க ‘எறி உளி’ என்னும் கருவியைப் பயன்படுத்தினர். இக்கருவியால் பெரியமீனைக் கொன்று பிடித்தனர் என்பதை,

**“குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்**
**எறிஉளி ஏமுறு பெறுமீன்” (அகநா.210:1-2)**

என்கின்ற பாடலடிகள் இயம்புகின்றன. பெரியமீனைப் பிடிப்பதற்கு எறிஉளி என்ற கருவி பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மீன்பிடித்தலில் இறால் மீனுடன் பிற மீன்களையும் பிடிக்க வலையைப் பயன்படுத்தினர் தமிழர். இதனை,

**“இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை**
**முடங்குபுற இறவோடு இனமீன் செறிக்கும்”**
**(அகநா.220:16-17)**

என்கின்ற அடிகள் உணர்த்துகின்றன. பதரவர்கள் மீன்பிடிக்க வலைகளை வைத்திருப்பர் என்பதை அகநானூறு 250 ஆம் பாடல் விளக்குகிறது. படகில் மீன்பிடித்து வந்தனர் பண்டைத் தமிழர் என்பதை,

**“திரைச்சுரம் உழந்த தின்திமில் விளக்கில்**
**பல்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய” (அகநா.240:5-6)**

என்றடிகள் இயம்புகின்றன. ‘திமில்’ என்பது படகினைக் குறிக்கிறது. திமில் என்பதற்கு “படகு; மரக்கலம்; கட்டுமரம்; மாட்டின் முதுகுப்புறத்தில் அமைந்தது; வேங்கை மரம்; பேரொலி; boat; ship; catamarah; hump; a kind of tree; loud hoise”[34] என சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி சொற்பொருள் விளக்கம் அளிக்கிறது.

இவ்வடிப்படையில் படகை மீன்பிடிக்க எடுத்துச் சென்றிருக்க வேண்டுமென்பது புலப்படுகிறது. படகில் மீன்பிடிக்கச் சென்றதை அகநானூறு 260ஆம் பாடல் இயம்புகின்றது. பரதக்குடிச் சிறுவர்கள் மீன்பிடிப்பதற்குக் கயிற்றாலாகிய வலையைப் பயன்படுத்தினர் என்பதை,

**"கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்**
**நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென" (அகநா.290:3-4)**

என்றடிகள் விளக்குகின்றன. மீன்பிடிப்பதற்கு வலை, எறிஉளி, படகு, பறி, தூண்டில் கம்பு, தூண்டில்முள் போன்ற கருவிகளைப் பண்டையோர் பயன்படுத்தினர் என்பதை அறிய முடிகின்றது. இன்றைய பரதவர்கள் தங்கள் மீன்பிடித்தலில் பல்வேறு வகையான கருவிகளைப் பயன்படுத்துகின்றனர்.

வலையில் பலவகைகள் காணப்படுகின்றன. இவற்றை, "மீன்களைப் பிடிக்க (பிளாஸ்டிக்கில்) அரை வலை ஒன்றை மீனவர்கள் தயாரிக்கின்றனர். இறால்களைப் பிடிக்க எறாவலையை மீனவர்கள் செய்கின்றனர். மேலும் காணாது கழுத்துவலை, தாக்வாலா வலை, நாக்கு வலை, பத்தாம் நம்பர் வலை, நெத்திலி வலை, கனவாவலை, மாவலாசி வலை முதலிய வலைகளை மீன்பிடிப்பதற்கு மீனவர்கள் பயன்படுத்துகின்றனர்"[35] எனச் சுட்டுகிறார் இரவிக்குமார். வலைகளில் பல வகையான வலைகளைத் தற்போது மீனவர்கள் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது.

படகுகளிலும் பல வகைகள் உள்ளன. "படகுகளை மீனவர்கள் 'போட்' (Boat) என்ற ஆங்கிலச் சொல்லால் குறிப்பிடுகின்றனர். ஓரிருவர் மட்டும ஏறிச் செல்லும் போட், நான்கு அல்லது ஐந்து பேர் ஏறிச்செல்லும் சிறிய போட், முப்பது அல்லது நாற்பது மீனவர்கள் செல்லும் பெரிய போட் என்று படகுகளில் பலவகைகள் உண்டு"[36] என உரைக்கிறார்.

இதன்வழிக் காலங்கள் செல்லச் செல்ல தொழிற்கருவிகளின் வளர்ச்சியில் மாற்றம் நிகழ்ந்துள்ளன என்பதை அறியமுடிகிறது. படகு வகைகளாக "கட்டுமரம், பரிசல், தெப்பம், மிதவை, படகு, குழிப்படகு

முதலியவை நமக்கு நன்கு அறிமுகமானவை"[37] என சற்குணன் உணர்த்துகிறார். இவ்வாறு படகுகளிலும் பல வகைகள் காணப்படுவதை அறிய காண்கிறோம்.

**மீன் உலர்த்தல்**

தோனி, படகு, தூண்டில், வலை ஆகியவற்றில் பிடிக்கப்பட்ட மீன்களைக் கடற்கரை மணற்பரப்பில் கொட்டிக் காயவைத்தனர். அதனைப் பறவைகளிடமிருந்து பாதுகாத்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தோதுகின்றன,

**"நிணச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி**
**இனப் புள் ஓப்பும் ........................"** (நற்.45:6-7)

என்றடிகள் சுறாமீனை அறுத்துக் காயவைத்து, கூட்டமாகத் திண்ணவரும் பறவைகளை ஓட்டினர் எனக் குறிப்பிடுகிறது. இதேபோன்று மீன் காயவைத்தலை,

**"................................... இறவின்**
**கணம் கொள் குப்பை உணங்கு திறன் நோக்கி**
**புன்னை அம்கொழு நிழல் முன் உய்த்துப் பரப்பும்"**
(நற்.101:2-4)

என்ற நற்றிணையடிகள் குறிப்பிடுகின்றன. இறாமீன் குவியல்களைப் புன்னை மரநிழலில் உலர்த்தினர் என்பதை விளக்குகின்றன. நற்றிணை 175-ஆம் பாடலும், பரதவர் தாம் படகில் பிடித்து வந்த மீன்களை மணலில் கொட்டிக் குவித்திருப்பர் எனவும், அதன் பிறகு மீன் கொளுப்பினால் செய்த நெய்யைக் கிளிஞ்சலில் ஊற்றிச் சிறிய சுடரை எரியவிட்டு (விளக்கேற்றி) அவ்விளக்கொளியில் அதனைக் காக்கும் பொருட்டுத் துயில்வர் என்பதையும்,

**"நெடுங் கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்**
**கொழுமீன் கொள்ளை அழி மணல் குவைஇ**
**மீன் நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய**
**சிறுதீ விளக்கில் துஞ்சும் ..................."** (நற்.175:1-4)

என்றடிகள் விளம்புகின்றன. நற்றிணை 63-ஆம் பாடலும் மீனை உலர்த்துவதை உணர்த்துகிறது. மீனானது உப்பிட்டு உலத்தப்படுவதை நற்.331ஆம் பாடலில்,

**“கானல் இட்ட காவற் குப்பை**
**புலவு மீன் உணங்கள் படு புள் ஓப்பி” (நற்3-4)**

என்றடிகள் விளக்குகின்றன. இதனால் நெய்தல் நிலத்திலும் காவல் தொழில் நடந்ததும் தெளிவாகிறது.

**மீன் விற்றல்**

நெய்தல் நில மக்கள் தாங்கள் பிடித்த மீனை விற்பனை செய்துள்ளனர். இவர்கள் பகலும் இரவும் ஒருங்கே தோன்றும் மாலை நேரத்தில் மீன் விற்பனை செய்ததை,

**“ஞான்ற ஞாயிறு குடமலை மறைய**
**மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்**
**இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி” (நற்.239:1-3)**

என்றடிகள் புலப்படுத்துகின்றன.

**உப்பு விளைவித்தல்**

நெய்தல்நில மக்கள் தங்கள் விளைநிலமான கடலையொட்டிய நிலப்பகுதியில் பாத்தியாகக்கட்டி அதில் கடல் நீரைப் பாய்ச்சி உப்பினை விளைவிப்பர். சங்க இலக்கியங்கள் உப்பு விளைவிக்கும் இடத்தினை, ‘இருங்கழி’ எனக் குறிப்பிடுகிறது. உப்பங்கழி, உப்பளம் என்றும் அழைக்கப்படுகின்றன.

**“உறுகழி மருங்கின்” (அகநா.230)**

**“இருங்கழி மலர்ந்த வள்இதழ் நீலம்” (அகநா.270:1)**

**“கழிசேர் புன்னை அழிபூங் கானல்” (அகநா.290:9)**

**“இனமீன் இருங்கழி ஓதம் மல்கு தொறும்” (குறுந்.9:5)**

**“சூழ்கழி மருங்கின் நாண் இரை கொளீஇச்” (ஐங்.111:2)**

**“செருந்தி தாய இருங்கழிச் சேர்ப்பன்” (ஐங்.112:2)**

போன்ற அடிகள் உப்பங்கழி இருந்ததையும், உப்புக்கள் விளைவிக்கப் பட்டதையும் பறைசாற்றுகின்றன. உப்பு விளைவதைக் குன்றுடன் ஒப்பிட்டு உவமையாகப் புலவர்கள் செய்யுள் இயற்றியமையைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனை,

**“உவர் விளை உப்பின் குன்று போல் குப்பை” (நற்.138:1)**

என்றடி உவர் நிலத்தில் விளையும் உப்பானது குன்றுபோல் குவிந்திருந்தது என குறிப்பிடுகின்றது. இதனைப் போன்று புறநானூறும் உப்பு விளைச்சலை,

**“................................ கானற்**
**கழிஉப்பு முகந்து கல் நாடு மடுக்கும்” (புறநா.60:6-7)**

என்ற பாடலடிகளின் வாயிலாக உணர்த்துகிறது.

**“நேர் கண் சிறு தடி நீரின் மாற்றி**
**வானம் வேண்டா உழவின் எம்” (நற்.254:10-11)**

என்கின்ற அடிகள் நேரிய இடத்தையுடைய சிறிய உப்புப் பாத்திகளில் கடல்நீரை ஊற்றி மழையை எதிர்பார்க்காமல் செய்யும் வேளாண்மை எனக் குறிப்பிடுகிறது. மழைபெய்யாமல் இருப்பதே உப்பு விளைவிப்பதற்கு நல்லதாகும். வெயிலின் நெருப்பால் வெப்பத்தால் கடல் நீரானது உருஞ்சி உப்பு தோன்றுகின்றது. என்பதை உணரவே மழையை வேண்டாத உழவு என செய்யுள் யாத்துள்ளனர் புலவர்கள்.

**உப்பு விற்றல்**

தமிழக நெய்தல் நிலத்தில் விளைவிக்கப்படும் உப்பானது பல நாடுகளுக்குக் கொண்டு செல்லப்படுகிறது. ‘உப்பில்லாப் பண்டம் குப்பையில்’ என்ற பழமொழிக்கேற்ப உப்பின் பயன்கள் இன்றியமையாதனவையாகும். இவ்உப்புக்களைப் பழந்தமிழர்கள் வண்டிகளில் கொண்டு சென்று விற்றனர். இவர்கள் ‘உமணர்’ என அழைக்கப்பட்டனர். உப்பு விற்பதில் பெண்களும் ஈடுபட்டுள்ளனர். உப்புக்கு விலையாக நெல்லைப் பெற்றதையும் இவ்விலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. உப்பு விற்கக் கூட்டம் கூட்டமாகவும் நெய்தல் நில மக்கள் சென்றனர் என்பதையும் காணமுடிகிறது. உப்பு வணிகர்கள் உப்பை விற்று அதற்கு விலையாகப் பெற்ற நெல்லைக் குற்றிச் சமைத்தனர் என்பதை,

**“உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்**
**அயினி மா இன்று அருந்த .........” (நற்.254:6-7)**

என்றடிகள் இயம்புகின்றன. உப்பினை விளைவிப்பது ஒருத்தர் அதனை விற்பனை செய்பவர் வேறொருவர் என்பதை,

**"உவர் விளைஉப்பின் உழாஅ உழவர்**
**ஒழுகை உமணர் வருபதம் நோக்கி**
**கானல் இட்ட காவற் குப்பை" (நற்.331:1-3)**

என்றடிகள் உணர்த்துகின்றன. உழாது விளைவிக்கும் உப்பினை விற்பதற்கு மேன்மையுடைய உப்பு வணிகர் வருகின்ற காலம் நோக்கிக் கடற்கரைச் சோலையில் காவலையுடையதாய் குவித்தனர் என சுட்டுகின்றன. உப்பு வணிகர்கள் உப்பினை விற்கச் சென்றனர் என்பது தெளிவாகிறது. வெயிலின் வழியாக உப்புக்கள் விளைவதையும் விளைந்த உப்பினை உப்பளங்களிலிருந்து வண்டிகளில் உமணர்கள் எடுத்துச் சென்றதையும் அறியமுடிகின்றன.

**"கடுவெயில் கொதித்த கல் விளை உப்ப**
**நெடு நெறி ஒழுகை நிரை செலப் பார்ப்போர்**
**அளம் போகு ஆகுலம் கடுப்ப" (நற்.354:8-10)**

என்னும் அடிகள் கடுமையான வெயிலில் கொதிக்கின்ற கல்லாக விளைந்த உப்பை ஏற்றிக்கொண்டு நீண்ட வழிகளிலே செல்லும் உப்பு வண்டிகளின் வரிசைகளைச் செலுத்தும் உமணர் உப்பளத்து வெளிகளில் வண்டிகளை விரட்டி ஓட்டும் போரொலி கேட்க வண்டிகள் சென்றன என விளக்குகிறது. இவ்வடிகள் உப்பு விற்க வணிகர் கூட்டம் நீண்ட தூரம் சென்றதையும், நுனி சிதைந்த கோல் ஒன்றை வைத்திருந்ததையும், பெண் உப்பிற்கு நெல்லை விலையாகக் கூறி தெருக்களில் விற்றதையும் உப்புக்கு நிகராக நெல் விலையாகக் கொள்ளப்பட்டதையும்,

**"உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி**
**அதர்படு பூழிய சேன்புலம் படரும்**
**ததர்கோல் உமணர் பதிபோகு நெடுநெறிக்**
**கணநிரை வாழ்க்கைத்தான் நன்று கொல்லோ?**
**வணர்சுரி மூச்சி முழுதும் மன்புரள**
**ஐதுஅகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**
**பலகுழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி**
**நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!**
**கொள்ளீ ரோ" எனச் சேரி தொறும் நுவலும்**
**அவ்வாங்கு உந்தி அமைத்தோ ளாய்? (அகநா.390:1-10)**

என்றடிகள் விளம்புகின்றன. பெண்கள் தெருவில் விலைகூறி உப்பினை விற்றதைக் காணமுடிகிறது. பெரும்பாணாற்றுப்படை உமணர் உப்பு

விற்கச் செல்லும் வண்டியின் தன்மை பற்றியும் பெண் வண்டி ஓட்டி உப்புவிற்கச் சென்றதையும் கீழ்க்கண்ட பாடலில் விளக்குகின்றது.

**"கொழுஞ்சூட்டு அருந்திய திருந்துநிலை ஆரத்து**
**வேழம் காவலர் குரம்பை ஏய்ப்பக்**
**கோழி சேக்கும் கூடுடைப் பதவின்**
**முளைஎயிற்று இரும்பிடி முழந்தாள் ஏய்க்கும்**
**துளை அரைச் சீறுரல் தூங்கித் தூக்கி**
**நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த**
**விசிவீங்கு இன்இயம் கடுப்பக் கயிறு பிணித்துக்**
**காடி வைத்த கலனுடைய மூக்கின்**
**மகவுடை மகடூஉப் பகடுபுறம் துரய்க்**
**கோட்டு இணர் வேம்பர் ஏட்டுஇலை மிடைந்த**
**படலைக்கண்ணிப் பருஏர் எறுழ்த்திணி தோள்**
**முடலை யாக்கை முழுவலி மாக்கள்**
**சிறுதுளைக் கொடுகம் நெறிபட நிரைத்த**
**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப**
**சில்பத உணவின் கொள்ளை சாற்றி**
**பலஎருத்து உமணர்பதிபோகு நெடுநெறி"(பெரும்பாண்.46-65)**

வண்டியின் சக்கரம் மிக உறுதியாக இருக்கும். சக்கரத்தின் விளிம்பில் வளைவு மரம் காணப்படும். ஒரே மரத்திலான குடம் செய்யப்பட்டுக் காணப்படும். அதனைக் குறடு என்றும் அழைப்பர். அதில் அச்சாணி செருகப்பட்டிருக்கும். குடத்தையும் விளிம்பு வளைவு மரத்தையும் இணைக்க ஆரம் உறுதியாக இருக்கும். அதில் இரண்டு பக்கம் நீண்டு கிடந்த பருமரங்கள் இருந்தன.

அம்மரங்கள் இரண்டினையும் நெடுகத் துளைத்துக் குறுக்கே ஏணிப்பழுபோல ஒரு மரத்தைக் கோத்து இருந்தனர். அது நுகத்தடி என்பதாகும். வண்டி மலைபோன்று இருந்தது. மேலே வேயப்பட்ட தேர்த்தாளிப்பாய் கூந்தற்பனையால் முடைந்தபாய், மேகம் போன்று இருந்தது. அவ்வண்டி மலை மீது மேகம் கிடந்தது போல காணப்பட்டது. அவ்வண்டியின் முன்புறத்தில் பரணின் மீது இருந்து யானையை விரட்டும் காவலர் குடியிருக்கும் பரண் போன்ற சிறு அமைப்பில் கோழி கிடக்கும் கூடு வைக்கப் பெற்றுக் காணப்பட்டது. மூங்கில் முளை போன்ற கொம்பினையுடைய பெண் யானையின் முழந்தாள் போன்ற துளையுடைய உரல் வண்டியின் முன்பகுதியில் கட்டப்பட்டிருந்தது.

நாடக மகளிர் பயன்படுத்தும் வார்களால் இழுத்துக் கட்டப்பெற்ற முழவு போன்று இவ்வுமணர் பொருள் வைத்திருந்த பானையானது வண்டியின் முன் பகுதியில் கட்டப்பெற்றிருந்தது. குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு உமணப் பெண்ணானவள் மாடுகள் பூட்டிய வண்டியைச் செலுத்தினாள். பக்கத்தில் வேம்பின் தழை இடையிடையே வைத்துக் கட்டப்பெற்ற மாலையை அணிந்த பருத்த திண்மையான வலிமையான தோளினையுடைய உமணர் வண்டியின் இருபக்கத்திலும் காவலாகப் பாதுகாத்து உடன்சென்றனர்.

வண்டியில் கட்டப்பெற்ற காளைகள் நுகத்தடியில் இருந்து விலகிப்போகாமல் இருக்கவும் வண்டி முறையாகச் செல்லவும் இவர்கள் உதவினர். இவ்வாறாகச் சென்று உப்பை விலைகூறி விற்று அதற்குப் பதில் அவர்களுக்குத் தேவையான பொருள்களை வாங்கிச் சென்றனர் உமணர் என இவ்வடிகள் இயம்புகின்றன. இடம் கடந்தும் உப்பு விளைவிக்கும் இடத்திலேயும் உப்பு விற்கப்பட்டதைக் காணமுடிகிறது. பெண்கள் வண்டி ஓட்டியதை அறியமுடிகிறது. உப்பானது கூவிக்கூவி விற்கப்பட்டதை அறியமுடிகிறது. உப்பு விற்க மாட்டுவண்டிகள் பயன்பட்டமை உணரமுடிகிறது.

**கடல் வாணிபம்**

நெய்தல் நிலத்தில் பெரும் தொழிலாகக் கருதப்படுவது வாணிபம் ஆகும். பண்டையோர் கடல் வாணிபத்தில் கைதேர்ந்தவர்கள் என்பதைச் சங்க இலக்கியம், சிலப்பதிகாரம் போன்ற நூல்களின் வழி அறியமுடிகின்றன.

**“திரைக்கடல் ஓடியும் திரவியம்தேடு”**[38]

என்பது பலராலும் அறியப்பட்ட பழமொழியாகும். பெண்கள் கடல் கடந்து செல்வது வழக்கம் இல்லையென தொல்காப்பியம் உணர்த்துகிறது. இதனை,

**“முந்நீர் வழக்கம் மகடூ உவோடு இல்லை”**[39]

என்ற நூற்பா விளக்கும். பெண்கள் கடல்கடந்து செல்லக்கூடாது என்பதில் ஆண்கள் கடல்கடந்து சென்றனர் என்பதை உணர்த்துகிறது. கடலின் வழியாக வாணிபம் மேற்கொண்டு பொருளீட்டினர் தமிழர். தமிழகத்தில்

துறைமுகப்பட்டினங்கள் இருப்பதன்வழி கடல் வாணிபம் சிறப்புற்றிருந்தமை விளங்கமுடிகிறது.

கடலைக் கடப்பதற்குப் பயன்பட்ட கலன்களாக புணை,தோணி, ஓடம், ப..றி, திமில், அம்பி, நாவாய் ஆகியவற்றை இலக்கியங்கள் சுட்டுகின்றன. தோணி வகைகளை "தோண்டப்பட்ட மரம் போல்வது தோணி, இரைந்தோடும தட்டைத் தோணி, ஓடம்: பன்றி வடிவத் தோணி ப..றி வட்டபிரம்புத் தோணி, பரிசல்"[40] என ஞா.தேவநேயன் குறிப்பிடுகிறார்.

"மயில், அன்னம், கிளிமுக அம்பிகளும் உண்டு. அரிமுக, கரிமுக அம்பிகள் வலிமை மிக்கன: பேராறு, பெருங்கடல் கடக்கும் திறன் மிக்கன: மன்னர், வணிகர் தம் சுற்றம் சூழச்செல்ல ஏற்றது"[41] என அம்பிகளைப் பற்றி விளக்குகிறார் அ.இராகவன்.

கடல் வாணிபத்தின்வழி பிற நாட்டுடனான தொடர்பு ஏற்பட்டதையும், மிளகு, முத்து, யானைத்தந்தம், படகு போன்றவை ஏற்றுமதியானதும், அங்கிருந்து குதிரை இறக்குமதி செய்யப்பட்டதையும் அறியக்கூடும்.

**"............................... பால் கேழ்**
**வால்உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்**
**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**
**மாடம் ஓங்கிய மணல்வலி மறுகின்" (பெரும்பாண்:319-322)**

இவ்வடிகள் பால் போன்ற வெண்ணிறமுடைய வெண்மையான தலையாட்டத்தினை உடைய குதிரைகளும் பிறநாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட குதிரைகளும் இருந்தன எனவும், வடநாட்டிலிருந்து வருகின்ற பொன், மணி போன்ற வளமுடைய பொருள்களைக் கொண்டு வந்த மரக்கலங்கள் காணப்பட்டன எனவும் சுட்டுகின்றன. கடல் வழியாகக் கப்பல்களில் வந்த பொருட்களைப்பற்றி

**"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**

ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகின்" (பட்.185-193)

என்ற பட்டினப்பாலையடிகள் குறிப்பிடுகின்றன. கடல் வழியாக மரக்கலங்களில் நிமிர்ந்து செல்லும் இயல்புடைய குதிரைகள், நிலத்தின்வழி கரிய மிளகு மூடைகள், மேருமலையில் தோன்றிய மாணிக்க மணிகளும் பொன்னும், மேற்குமலையில் பிறந்த சந்தனமும் அகிலும், தென்கடல் துறைமுகமாகிய கொற்கையிலிருந்து முத்துக்கள், கிழக்குக் கடலிலிருந்து பவளங்கள் வந்தன.

கங்கையாற்றில் விளைந்த பொருள்கள், காவிரி ஆற்றில் விளைந்த பொருள்கள், ஈழத்திலுள்ள பொருள்கள், கடாரத்திலுள்ள பொருள்கள் போன்றன காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் கொண்டுவரப்பட்டதாக இவ்வடிகள் விளம்புவதன்வழி கடல்வழியாகவும், நிலத்தின் வழியாகவும் வந்த வாணிப பொருள்கள் பற்றி அறிய முடிகின்றன.

கடல்வழியாக வந்தவற்றில் முக்கியமானவை குதிரைகள் ஆகும். இக்குதிரைகள் பற்றி, "பரிப்புரவிகள் (குதிரைகள்) கடல்வழியாகக் கப்பல்களில் வந்து இறங்கின. குதிரை தமிழ்நாட்டுக்கோ அல்லது பாரத நாட்டுக்கோ உரிய விலங்கு அன்று அவை பாரசீகம். சிந்து தேசம் முதலான நாடுகளிலிருந்து கப்பல் வழியாகக் கொண்டு வரப்பட்டவை"[42] என விளம்புகிறார் மயிலை.சீனிவேங்கடசாமி. மிளகானது நிலத்தின் வழியாகக் கொண்டு வரப்பட்டதாக ச.வே.சுப்பிரமணியன் விளக்கம் அளிக்கிறார்.

மயிலை.சீனிவேங்கடசாமி 'காலின் வந்த கருங்குறி மூடையும்' என்பது "காற்றின் உதவியினால் கப்பல்களின் கடல் வழியாகக் கொண்டுவரப்பட்ட கறி(மிளகு) மூட்டை"[43] என விளக்கம் தருகிறாள். இக்கருத்து ஏற்புடையதாகிறது. மிளகானது சேரநாட்டு மலைச்சரிவுகளில் தான் உருவாகிறது என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறாக பழந்தமிழர்கள் கடல் வாணிபத்தில் சிறப்புற்றிருந்தமையை உணரமுடிகின்றது. இறக்குமதியாக அயலகக் குதிரைகள் இங்கு வந்தமை புலனாகிறது.

கடல் வாணிபத்திற்கு இன்றியமையாத கருவியாக ‘நாவாய்’ எனப்படும் கப்பல் பயன்பட்டமையை அறியமுடிகிறது. நெய்தல் நிலத்தில், படகு, மரக்கலம், தோனி, கப்பல், நாவாய் (திமில்), தூண்டில், பறி, எறிஉளி, வலை போன்ற கருவிகள் மக்கள் பயன்படுத்திய தொழிற்கருவிகளாக அமைகின்றன.

**முத்துக்குளித்தல்**

நெய்தல் நிலத்தில் மீன் பிடித் தொழில் தலையானத் தொழிலெனக் காணப்பட்டாலும் முத்துக் குளித்தல் தொழிலும் நடைபெற்றது. பரதவர்கள் முத்துச் சிப்பிகளையும், சங்குகளையும் மூழ்கியெடுத்துக் கரைக்குக் கொண்டு வந்து அவற்றைப் பங்கிட்டு வளம் பெருக்கி வாழ்ந்தனர் தமிழர். இதனை,

> **“விரிதிரைக்**
> **கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்**
> **தேன் இமிர் அகன்கரைப் பகுக்கும்**
> **கானல் அம்பெருந்துறை பரதவன்”** **(அகநா.280:11-14)**

என்றடிகள் விளக்குகின்றன. இவற்றை ஐங்குநுறூறு 195ஆம் பாடலும் இவற்றை உணர்த்துகிறது. வலம்புரி என்னும் சங்கிலிருந்தும் முத்துக்களைப் பெற்றனர் பண்டையோர். சங்கு எடுத்தலின் போது சுறாமீன்களால் இடையூறு ஏற்படும். அவற்றிலிருந்து மீளுவதற்குப் பரதவர்கள் தங்களுடன் சுறாக்களைக் கட்டிப்போடும் மந்திரவாதிகளை உடன் அழைத்துச் சென்றனர்.

சுறாமீனினை விலக்கிவிட்டு வலம்புரிச் சங்கினை எடுத்தனர் என்பதை,

> **“இலங்கு இரும் பரப்பின் எறிசுறா நீக்கி**
> **வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர் ...”** **(அகநா.350:10-11)**

என்றடிகள் விளம்புகின்றன. இவற்றின்வழி நெய்தலில் முத்துக்குளித்தலும், சங்கு எடுத்தல் தொழிலும் காணப்பட்டன.

**பாலை**

பாலைநிலம் மணல் சார்ந்த நிலப்பகுதியாகும். பாலைநிலத்தின் தோற்றம், இயல்பு முன்னைய இயலில் சுட்டப்பட்டுள்ளது.

பாலைநில மக்கள் எயினர் எயிற்றியர் ஆவர். “முல்லையும் சிறுமலைக் குறிஞ்சியும் முதுவேனிற் காலத்தில் வற்றி வறண்டதனால் அங்குள்ள வேட்டுவர், ஆறலைப்போரும் சூறைக் கொள்வோருமாக மாறி, அம்பெய்வதால் எயிநர்(எயினர்) என்றும், மறமிகையால் மறவர் என்றும் பெயர் பெற்றனர்.”[44] என்று ஞா. தேவநேயப்பாவணர் குறிப்பிடுகிறார்.

மேலும் பாலைநிலத்தில் ஆறலைத்தல், புல்லரிசி எடுத்தல், வேட்டை, காவல் ஆகிய தொழில்கள் நடந்தேரின. பாலை என்பதற்கு “ஒரு கொடி; ஒரு மரம்; ஒரு வகை மீன்; கடல்; கல்வியிற் பிரிதல்; குழந்தை; சிவசக்தி; பாடற்சுவையின் ஒன்று; பாலை நிலம்; பாலைப்பண்; பாலைப்பூ; புநர்பூசநாள்; பொருள்வயிற் பிரிதல்; மிருகசீரிடநாள்; வெம்மை முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலம்; புறங்காடு; முள்மகிழ்; வெட்பாலை முதலியன யாழ்; பெரும்பாண்”[45] என சொற்பொருள் விளக்கம் அளிக்கும் கழகத் தமிழகராதி.

வறட்சியான நிலமாதலின் அந்நிலத்தில் வாழும் மக்களும் வறட்சிக்கு ஆட்படுகின்றனர். ஆகையால் அவ்வறட்சியின் விளைவாக அவர்களின் தொழிலானது அதனை முன்னிருத்தி அமைகிறது. பாலைநிலத்தொழிலில் இன்றியமையான ஒன்று ‘ஆறலைத்தல்’ ஆகும். அதாவது ‘களவு’ ஆகும்.

வறட்சி காரணமாக இக்களவானது நடந்தேறுகிறது. மனிதன் மாற்றமடைய மிக இன்றியமையான ஒன்று சுற்றுச்சூழல் ஆகும். ‘மனிதன் ஒரு சூழ்நிலைக் கைதி’ என்றெல்லாம் சொல்வது நினைவிற்கொள்ளத்தக்கதாகிறது.

**புல்லரிசி எடுத்தல்**

பாலைநிலப் பெண்கள் தங்கள் உணவிற்காகப் புல்லரிசி எடுக்கச் செல்வது வழக்கம். எறும்பு ஆண்டுகளாகச் சேர்த்து வைத்த புல்லரிசியானது நிலத்திற்குக் கீழ் புற்றுக்குள் இருக்கும். இவற்றை எயினப் பெண்டிர் கடப்பாறைக்கொண்டு மண்ணைக்கீறி குத்தி எடுக்கின்றனர். இவை புல்லரிசி எடுக்கும் முறையாகும். இதனை,

**"ஈன் பிணவு ஒழியப்போகி நோன்காழ்**
**இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்**
**உளிவாய்ச் சுரையின் மிளிரமிண்டி**
**இருநிலக் கரம்பைப் படுநீறுஆடீ"**
**(பெரும்பாண்.90-93)**

என்றடிகள் மெய்ப்பிக்கின்றன. அண்மையில் குழந்தை ஈன்ற பெண்ணைத் தவிர்த்து ஏனைய பெண்கள் பூண் கட்டிய சீரியகோலின் செருகப்பட்ட உளிபோலும் வாயையுடைய ஒரு பக்கம் இரும்புப்பூண் செருகும் சுரையையும் உடைய கடப்பாரையால் கரியகாம்பு நிலத்தைக் குத்திக்கிளறி, புழுதியை அலைந்து நுண்ணிய புல்லரிசியினை எடுத்தனர் என வினவுகின்றன. புல்லரிசி எடுக்க கடப்பாரைப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. இப்புல்லரிசியை உரலால் குத்தி தூய்மைப்படுத்துவதை,

**"நிழல் முன்றில் நிலஉரல் பெய்து**
**குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று"**
**(பெரும்பாண்.96-97)**

என்கின்ற அடிகள் இயம்புகின்றன.

**ஆறலைத்தல்**

பாலை நிலத்தில் நடைபெறும் தொழிலான ஆறலைத்தல் என்பது வறட்சியான பாலைப்பகுதியில் வரும் புதியவர்களிடம் அந்நில மறவர், மழவர், எயினர் என அழைக்கப்படும் ஆடவர்கள் வழிப்பறி செய்யும் தன்மையைச் சுட்டுகிறது. பாலை நிலத்தில் பொருள் ஈட்டி செல்வோர், உப்பு வணிகர் போன்றோர் செல்லும் நிலையினை இலக்கியங்கள் இயம்புகின்றன. அன்னோரிடம் வழிப்பறி செய்வதும் அவர்களிடம் பொருதுவதும், உயிர்க் கொலை செய்வதையும் தம் தொழிலாகக் கொண்டுள்ளனர். இவர்கள் 'மறவர், மழவர்' என அழைக்கப்பெற்றனர். பாலை நிலத்தில் வழிப்பறி செய்யும் பொருளைத் தம் சுற்றத்தாருடன் பகிர்ந்துண்டு வாழ்ந்தனர் இந்நில மக்கள். ஆறலைக் கள்வரைப் பற்றி,

**"ஆடுதொறு கனையும் அவ்வாய்க் கடுந்துடிக்**
**கொடுவில் எயினர் கோட் சுரம் படர"** **(அகநா.79:13-14)**

என்ற அடிகள் ஆடும் பொழுதெல்லாம் ஒலிக்கும் அழகிய வாயினையுடைய அச்சத்தைச் செய்யும் துடியினையும் வளைந்த வில்லினையும் உடைய மறவர்கள் வழி செல்வோரை அலறத்தாக்கி

அவருடைய கைப்பொருளைக் கொள்ளும் நோக்குடன் சுரவழியில் செல்லும் இயல்பினை உடையவர் என எடுத்துரைக்கின்றன. எயினர்களான ஆறலைக்கள்வர்கள் தங்கள் கையில் அச்சம்தரும் துடி, வளைந்த வில்லை கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது. வணிகர் கூட்டத்துடன் சண்டையிட்டு வழிப்பறி நடத்தியதை,

**"விளர் ஊன்தின்ற வீங்குசிலை மறவர்**
**மைபடு திண் தோள் மலிர வாட்டி**
**பொறை மலி கழுதை நெடு நிரை தழீஇய**
**திருந்து வாள் வாயவ அருந்தலை துமித்த**
**படுபுலாக் கமழும் ஞாட்பில் துடி இகத்து**
**அருங் கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர்**
**வில் கெழு குறும்பில் கோள்முறை பகுக்கும்" (அகநா.89:10-16)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

விசைகொண்ட வில் ஏந்திய மறவர்கள் கொழுப்புடைய ஊனைத்தின்று கருமை பொருந்திய தம் வலியத் தோள்கள் பூரிக்க பண்டச்சுமை மிகுந்த கழுதைகளின் நீண்ட வரிசையைப் பின் தொடர்ந்து வருகின்ற திருந்திய வாளினையுடைய வீரர்களான வாணிகச் சாத்தரை வாட்டி அவர்களின் தலைகளைத் துண்டிப்பர்.

மிக்க புலால் நாறும் அப்போர்க்களத்தில் தம் துடியினைத் தாழக்கொட்டி முழக்கியவாறே அவ்வணிகர்களிடம் பெற்ற பெறற்கரிய அணிகலன்களைத் திறையாகப் பெற்றுக்குவித்த போரெனில் விரும்பும் புனைகழல் அணிந்த மறவர்கள். அத்திரைப்பொருள்களை விற்கள் பொருந்திய அரளிடத்தே அவரவர்குரிய பங்குகளாக முறையே தமக்குள் பகுத்துக் கொள்வர் என்பதைத் தெளிவுறுத்துகின்றன. இப்பாடலில் வணிகருடன் ஆறலைக்கள்வர் சண்டையிட்டதும், வணிகர்களும வாள் கொண்டிருந்தமையால் அவர்களும் வீரர்களாக இருந்திருக்க வேண்டும். இத்தகைய ஆறலைக் கள்வரால் தமக்கு இடர்பாடுகள் வருமென்பதை அறிந்தே பாதுகாவலுடன் சென்றமை விளங்கமுடிகிறது. ஆறலைக்கள்வர்கள் வழிப்பறி செய்யும் போது எதிர்படும் வணிகருடன் சண்டையிட்டு அவர்களைக் கொல்லாது விடவும் செய்தனர். அவ்வாறு

கொல்லாமைக்காக தண்டம் கட்டினர் என்பதைக் கீழ்க்கண்ட பாடல் தெளிவுறுத்துகின்றது.

**“கைப்பொருள் இல்லை ஆயினும் மெய்க்கொண்டு**
**இன்உயிர் செகா அர்விட்டு அகல் தப்புதற்குப்**
**பெருங்களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும்”**
**(அகநா.109:10-15)**

பாலை நிலத்தில் ஆறலைக்கள்வர் இருக்கும் வழியில் வந்தவர்களிடம் பொருள் இல்லாமல் இருந்தால் அவர்களைக் கொல்லாது விடுவது உண்டு. அங்ஙனம் கொல்லாது விட்டுப் போனமைக்காக களிற்றின் கொம்போடு (தந்தம்) புலியின் வரிபொருந்திய தோலைத் தண்டமாக அக்கானகத்து எயினர் தலைவன் தன் ஏவல் இளையாரைக் கொடுக்கச் செய்வான் என உணர்த்துகிறது. இப்பாடல் ஆறலைத்தொழிலில் தலைவன் ஒருவன் இருந்ததும் அவன் ஏவிவிட ஏவல் தொழில் செய்வோறாக ஆறலை செய்வோர் இருந்தனர் என்பது விளக்குகிறது. கலித்தொகையில் ஆறலை செய்வோர் அம்பினால் வழி செல்வோரைத் தாக்குவர் என்பதனை,

**“மறையா மரல்கவர மாரி வறப்ப**
**வரைஓங்கு அருஞ்சுரத்து ஆர்இரைச் செல்வோர்**
**சுரை அம்பு, மூழ்கச் சுருங்கி புரையோர்தம்”**
**(கலித்.6:1-3)**

என்ற பாடலடிகளின் வழியாக அறியமுடிகின்றன. ஆறலைத்தலில் ஆறலைக்கள்வர் துடி, வில், அம்பு நான் ஆகியவற்றைப் பயன்படுத்தியமை புலனாகிறது. இதைப்போன்று ஐந்திணை எழுபது ஆறலைக் கள்வர்களைப் பற்றி,

**“வில்லுழு துண்பார் கடுகி யதரலைக்குங்**
**கல்சூழ் பதுக்கையா ரத்தத்திற்.........”[46]**
**(ஐந்திணை எழுபது 28:1-2)**

எனச் சுட்டுகின்றது.

வில்லினால் முயன்று போர் புரிந்து அதனால் வரும் பொருளைக் கொண்டு உண்டு பிழைக்கும் மறவர்கள் விரைந்து வழிச் செல்வாரை வருத்திக் கொள்ளையடிக்கும்படியான கற்கள் சூழ்ந்த பாலைநிலம் என உணர்த்துவதைக் காணமுடிகிறது. ஆறலைத்தல் செய்வோரைச் சங்க

இலக்கியம் ‘மறவர்’ எனச் சுட்டுகிறது. சங்க மருவிய இலக்கியமான ஐந்திணை எழுபது ‘கள்ளர்’ எனச் சுட்டுவதை,

**“கள்ளர் வழங்குஞ் சுரமென்பர் காதல்”[47]**

**(ஐந்திணை எழுபது 34:3)**

என்றடி விளக்கும். ஆறலைப்போர் சஞ்சரிக்கும் கொடிய பாலைவனம் எனக் குறிக்கிறது. இவ்வாறு பாலை நில வரட்சியின் காரணமாக வழிப்பறி கொள்ளை நடந்தேறியதை இலக்கியங்கள் விளம்புகின்றன.

**வேட்டைத் தொழில்**

மனிதனின் வயிற்றுப் பசியைப் போக்கிய முதல் தொழில் வேட்டையாகும். இவற்றை, “குரங்கில் இருந்து மனிதனாகப் பரிணாம ரீதியில் வளர்ச்சி பெற்ற மக்கள் தொடக்கத்தில் காட்டுமிராண்டிகளாக வாழ்ந்தனர். பின்னர் படிப்படியாக வளர்ந்து முன்னேறி அநாகரிக நிலையினை அடைந்தனர். காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த காலகட்டத்தில் உணவுக்காக வேட்டைத் தொழிலையே பெரிதும் சார்ந்திருந்தனர்”[48] என வெ. பெருமாள்சாமி சுட்டுகிறார்.

“ஆதிகாலத்தில் மனிதன் விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்தே விலங்கைத் தாக்கி வீழ்த்தி வாழ முற்பட்ட நிலையில் வேட்டைத் தொழில் தோன்றி இருத்தல் வேண்டும். அன்று தொடங்கி இத்தொழில் காலந்தோறும் வளர்ந்து வேட்டைக் கலையாகப் போற்றுமளவிற்குச் சிறந்து விளங்குகின்றது. இக்காலத்தில் காட்டில் வேட்டைக்குச் சென்று வேட்டையாடுதல் ஒரு கலையாகப் போற்றப்படுகிறது. இக்கலை வீரத்தின் விளைவு என்று கூறலாம்”[49] என்று வி.சி. சசிவல்லி குறிப்பிடுகிறார்.

“மனிதன் உயிர்வாழ இன்றியமையாத பொருள் உணவாகும். பழங்கால மனிதனது முதல் தொழிலே உணவுத் தேடலாக இருந்தது. அவன் இயற்கையாய்க் கிடைத்த காய்களையும், விதைகளையும், கிழங்குகளையும் உண்டான். பின்னர் பறவைகளையும் விலங்குகளையும் வேட்டையாடி அவற்றின் இறைச்சியைப் பதப்படுத்தாமலே உண்டு வந்தான்”[50] என பி. சேதுராமன் விளக்குகிறார்.

மனிதன் தான் இருந்த இடத்தில் கிடைத்த காய்கனிகளை உண்டான். அவை அவ்விடத்தில் கிடைக்காமல் போக, உணவின் பயனாய் தேடலின் துவக்கமாய் வேட்டைத் தொழில் தோன்ற வேண்டிய நிலை ஏற்பட்டிருக்க வேண்டும்.

வேட்டைக்காகவே முதன்முதலில் மனிதன் கருவிகளைப் பயன்படுத்த துவங்கினான். இவற்றை, "முதலில் கல்லையும், எலும்பையும் கூர்மையாக்கி கருவிகளாகப் பயன்படுத்தினான். பின்னர் உலோகங்களின் பயனை அறிந்தான். ஆரம்ப காலத்தில் உணவுக்காக வேட்டையாடுவதற்கே பெரும்பாலும் மனிதன் கருவிகளைப் பயன்படுத்தினான். அதன் பிறகு, வீடு கட்டுதல், வேளாண்மை செய்தல் போன்ற தேவைகளுக்கும் கருவிகளைப் பயன்படுத்தத் துவங்கினான்"[51] என வே.தமையந்திரன் சுட்டுகிறார்.

வேட்டைத் தொழிலில் யானை, பன்றி, முயல், மான், எலி, முள்ளம் பன்றி, உடும்பு, புலி பறவை போன்றவைகள் வேட்டையாடப்பட்டன. வேட்டைக்குச் செல்லும் வேட்டுவர் நாயினை உடன் அழைத்துச் சென்றதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. இதனை,

**"ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு**
**வேய்பலில் அழுவத்துப் பிரிந்த நின்**
**நாய் பயிர் குறிநிலை கொண்டகோடே" (அகநா.318:13-15)**

என்றடிகள் விளக்குகின்றன. இப்பாடலில் வேட்டையில் ஊதுகொம்பு பயன்படுத்தப்பட்டதையும், அவை பிரிந்து சென்ற வேட்டுவர்களையும், நாயையும் அழைப்பதற்குக் குறியாகப் பயன்படுத்தப்பட்டதையும் உணர்த்துகிறது. குறிஞ்சிப் பாட்டில் வேட்டை நாயினைப் பற்றி,

**"உரவுச் சினம் பெருக்கித் தன்னுதொறும் வெகுளும்**
**முளைவாள் எயிற்ற வள்உகிர் ஞமலி" (குறுந்.130-131)**

என்னுமடிகள் விளக்குகின்றன.

இரவில் தினைப்புனத்தை மேயவரும் விலங்குகளைக் கானவர் வேட்டையாடினர் என்பதை,

**"இடி உமிழ்பு இரங்கிய விரைபெயல் நடுநாள்**
**கொடி விடுபு இருளிய மின்னுச் செய்விளக்கத்து**
**பிடியொடு மேயும் புன்செய்யானை**

**அடியொதுங்கு இயக்கம் கேட்ட கானவன்**
**நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்**
**கடுவிசைக் கவணையில் கல் கை விடுதலின்'' (கலித்.41:5-10)**

என்றடிகள் உணர்த்துகின்றன. இரவில் பரண்மீதிருந்து தினைப்புனம் காக்க கானவர் யானை தன் பிடியுடன் தினைப்புனத்தை மேயவரும் ஓசையைக் கேட்டுக் கவண் கல் கொண்டு எய்தமையை இப்பாடலடிகள் சுட்டுகின்றன. வேட்டைக் கருவியாக கவண் கல் பயன்பட்டதைக் காணமுடிகிறது.

முல்லை நில வேட்டுவச் சிறுவர்கள் எலியை வேட்டையாடியதை,

**''உழுதுஊர் காளை ஊழ் கோடு அன்ன**
**கவைமுட் கள்ளிப் பொரிஅரைப் பொருந்தி,**
**புதுவரகு அரிகால் கருப்பை பார்க்கும்**
**புன்தலைச் சிறாஅர் வில்எடுத்து ஆர்ப்பின்'' (புறநா.322:1-4)**

என்றடிகள் விளம்புகின்றன. இப்பாடலடியில் வில், அம்பு வேட்டைக் கருவியாகப் பயன்பட்டமை விளங்குகிறது. எயினச் சிறுவர்கள் உடும்பினை வேட்டையாடியதை,

**''ஊர், அருமிளையதுவே மனைவியும்**
**வேட்டைச்சிறாஅர் சேட்புலம் படராது**
**படுமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்'' (புறநா.326:7-9)**

என்றடிகள் இயம்புகின்றன. எயினச் சிறுவர்கள் வீட்டின் அண்மையில் இருந்து உடும்பினைப் பிடித்து வந்தனர் என உணர்த்துகின்றன. பாலை நிலத்தில் கானவர் இரவில் பன்றியையும் பகலில் முயலையும் வேட்டையாடினர். வேட்டைக்கு வேட்டையில் நாயினை ஈடுபடுத்தினர் என்பதை,

**''வளைமருப்பு ஏனம் வரவு பார்த்திருக்கும்**
**அரைநாள் வேட்டம் அழுங்கின், பகல்நாள்,**
**பகுவாய் ஞமலியொடு பைம்புதல் எருக்கு**
**தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி,**
**முள் அரைத் தாமரைப் புல் இதழ் புரையும்**
**நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கு அறவளைஇ**
**கடுங்கண் கானவர் கடறு கூட்டுண்ணும்**
**அருஞ்சுரம் இறந்த அம்பர்'' (பெரும்பாண்.110-117)**

என்றடிகள் புலப்படுத்துகின்றன. முயல் வேட்டையில் வலையைப் பயன்படுத்தியமையைக் காணமுடிகிறது. பன்றி வேட்டையில் அடார்

என்னும் கருவிப் பயன்படுத்தப்பட்டது. அடார் இலக்கியங்களில் கற்பொறி என வழங்கப்படுவதை,

**“விளைபுனம் நிழத்தலின் கேழல் அஞ்சிப்**
**புழைதொறும் மாட்டிய இருங்கல் அரும்பொறி”**
**(மலைபடு.193-194)**

என்றடிகள் விளக்குகின்றன. மான் வேட்டையில் பார்வை மான் பயன்படுத்தப்பட்டதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பார்வை மான் என்பது பெண் மானைக் குறிக்கும். ஆண் மானைப் பிடிக்க பெண் மான் கருவியாகப் பயன்பட்டது. அம்பினை எய்து மானைப் பிடித்தனர். இவற்றை, புறநானூறு 320ஆம் பாடல் உணர்த்துகிறது. வேட்டைக்குச் செல்லும் வேட்டுவர் எடுத்துச் செல்லும் கருவிகளை,

**“செம்பொறிக்கு ஏற்ற வீங்குஇறைத் தடக்கையின்**
**வண்ணவரிவில் ஏந்தி அம்புதெரிந்து,**
**நுண்வினைக் கச்சைத் தயக்கு அறக் கட்டி**
**…… …… …… …… …… ………**
**…… …… …… …… …… ………**
**முளைவாள் எயிற்ற வள்உகிர் ஞமலி” (123-131)**

என்றடிகளின் வழிக் குறிஞ்சிப்பாட்டு உணர்த்துகிறது.

நெய்தல் நிலத்தில் சுறாமீன் வேட்டையாடப்பட்டது. இதனை,

**“கடற்சிறு காக்கை காமர் பெடையொடு**
**கோட்டுமீன் வழங்கும் வேட்டம்மடி பரப்பின்**
**வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து” (அகநா.170:10-12**

என்னுமடிகள் இயம்புகின்றன. இப்பாடல் சிறிய கடற்காக்கை பரதவர் மீன் வேட்டைக்குச் செல்லாததால், சுறாமீன் திரிகின்ற கடற்பரப்பில் இறால் மீனைப் பிடித்து திண்ணலாம் என்று கனவுக் காண்பதாக அமைகிறது.

பரதவர்கள் முழுமதி நாளில் மீன் வேட்டைக்குச் செல்லமாட்டார்கள் என்பதை,

**“திங்களும் திகழ்வான் ஏர்தரும் இமிழ்நீர்ப்**
**பொங்கு திரைப் புணரியும் பாடுஓ வாதே**
**ஒலிசிறந்து ஓதமும் பெயரும் …” (நற்.335:1-3)**

என்றடிகள் விளக்குகின்றன. பட்டினப்பாலை சுறா மீன் கொம்பினை நட்டுப் பரதவர் வழிப்பட்டதை (84-93) ஆம் பாடலடிகளின் வழி விளக்குகிறது. சுறாமீன் பிடிக்க எறிஉளி என்னும் கருவியைப் பயன்படுத்தினர். இதனை,

**“கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி**
**முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்**
**தாங்கு அரு நீர்ச்சுரத்து எறிந்து, வாங்குவிசைக்**
**கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய”   (குறுந்.304:1–4)**

என்று இவ்வடிகள் வெளிப்படுத்துகின்றன.

**தொகுப்புரை**

❖ தமிழகம் நானிலம் கொண்டது, ஐவகை நிலமாகப் பாகுபடுத்திக் கூறுவதையும் அறியமுடிகிறது.

❖ முதன்மைத் தொழில்களாகத் தேனழித்தல், ஆநிரை மேய்த்தல், உழவு (வேளாண்மை) மீன்பிடித்தல், ஆறலைத்தல் போன்றவை இருந்துள்ளன.

❖ இத்தொழில்களின் பெரும்பாண்மை கருதியே இவை முதன்மைத் தொழில்களாகக் கொள்ளப்பட்டதை அறியலாம்.

❖ இத்தொழில்களில் பயன்படுதிய கருவிகள் பற்றிய குறிப்புகளைக் காணமுடிகிறது.

❖ திணைவாரியாகத் தொழில்கள் அத்திணை நிலத்திற்கேற்ப நிகழ்ந்துள்ளன.

❖ குறிஞ்சித்திணைத் தொழில்களில் கண்ணேணி, வில், அம்பு, கவண் வாள், தழழ், தட்டை, குளிர் அடார், ஞெகிழி, ஆகிய கருவிகள் பயன்படுத்தப்பட்டமை புலனாகிறது.

❖ முல்லைத்திணைத் தொழில்களில், கோல், எறிகோல், விசில், மத்து, உறி, நாண், கலங்கள் ஆகியவை தொழிற்கருவிகளாகக் கையாளப்பட்டன என்பதைப் பாடல்கள் தெளிவுப்படுத்துகின்றன.

❖ மருதநிலத் தொழிலில் காளை, கழப்பை, கொழு, நுகத்தடி, துளர்,தளம்பு, ஆம்பி, பன்றிபத்தர், குயம், தொடுகூடு, கழுந்து தடி போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

- நெய்தல்நிலத் தொழிலில் வலை, படகு, தூண்டில் கோல், தூண்டில்முள், கப்பல், எறிஉளி (ஈட்டி) முடிச்சுக்களுடைய வலைகள், திமில் என்றழைக்கப்படும் படகு, தோனி ஆகியன பயன்பாட்டுக் கருவிகள் என்பதை மெய்ப்பிக்கின்றன.

- பாலை நிலத்தில் வில், அம்பு, நாண், நூல் ஏனி ஆகிய கருவிகள் ஆறலைத்தல் தொழில் பயன்படுத்தப்பட்டமை விளங்குகிறது.

- குறிஞ்சியில், தினைப்புனம் காவல், முல்லையில் வீட்டின் அருகில் கன்றுகளை மேய்த்தல், தயிர், மோர் விற்றல் போன்ற தொழிலில்களிலும், மருதத்தில் களைபறித்தல், நாற்றநடுதல் போன்ற தொழிலில்களிலும் பெண்கள் ஈடுபட்டுள்ளனர்.
- ஐவகைத் திணைகளில் பெண்கள் தொழிலில் ஈடுபட்டமையை காணமுடிகின்றது.

- நெய்தலில் மீன்விற்றல், உனங்கல், உலர்த்தல் ஆகிய தொழில் ஈடுபட்டமையை அறிய முடிகின்றன.

- பெண்கள் கடல் கடந்து செல்லும் வழக்கம் இன்மைப்பற்றி அறியமுடிகிறது.

- புல்லரிசி எடுத்தல் தொழிலில் பாலைநிலப் பெண்கள் ஈடுபட்டமை தெரிகிறது.

- ஆண்கள் தினைப்புனம் காவல், ஆநிரை மேய்த்தல், உழவு, நாற்றுநடுதல், புனையடித்தல், மீன்பிடித்தல், மீன்விற்றல், வாணிபம், உப்பு விற்க செல்லுதல், ஆறலைத்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர் என்பது தெளிவாகின்றன.
- உப்பு விற்க பெண்களும் வண்டி ஓட்டிச் சென்றமை புலனாகிறது.

- ஆறலைத்தல் தொழிலில் தலைவனுக்கு அத்தொழிலைச் சரியாகச் செய்யாமைக்குத் தண்டம் கட்டிய ஏவல் தொழிலாளிகள் பற்றி விளங்க முடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் (பொருள்), பக்.17.
2. மேலது., ப.18.
3. மேலது., பக்.18-19.
4. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.774.
5. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் (பொருள்), ப.9.
6. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.371.
7. ஆசிரியர் குழு, நர்மதா தமிழகராதி, ப.238.
8. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.759.
9. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.84.
10. எஸ்.கௌமாரீஸ்வரி (தொ.ஆ.), பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும், ப.456.
11. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.779.
12. அ.முத்துச்சாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.12.
13. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.411.
14. மேலது., ப.411.
15. சா.வே.சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழகராதி, ப.927.
16. ஆசிரியர் குழாம், சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி, ப.809.
17. நா.வானமாமலை, தமிழர் வரலாறும் பண்பாடும், ப.74.
18. மறைமலை அடிகளார், வேளாளர் நாகரிகம், ப.3.
19. இல.செ.கந்தசாமி, தமிழர் வேளாண்மை மரபுகள் - சங்ககாலம், ப.28.
20. பரிமேலழகர் (உ.ஆ.)., திருக்குறள், ப.314.
21. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.317.
22. மேலது., ப.441.
23. கழகப்புலவர் குழுவினர். கழகத் தமிழகராதி, ப.292.
24. மேலது., ப.399.
25. அநுமந்தன்.கி.ர., பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு, ப.48.
26. கழகப்புலவர் குழுவினர். கழகத் தமிழகராதி, ப.82.
27. மேலது., ப.659.
28. ம.இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, பக்.59-60.

29. கழகப்புலவர் குழுவினர். கழகத் தமிழகராதி, ப.562.
30. மேலது., ப.361.
31. மேலது., ப.623.
32. ஆசிரியர் குழு, நர்மதா தமிழகராதி, ப.447.
33. சா.சுந்தரபாலு, தொழிற்கருவிகள் ஒரு மொழியியல் நோக்கு,பக்.32-33.
34. ஆசிரியர் குழாம், சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி, ப.549.
35. ஓ.முத்தையா (ப.ஆ.), மரபு அறிவு சமகாலச் செயல்பாடுகளும் தொழில்நுட்பங்களும், ப.147.
36. மேலது., ப.148.
37. அ.சற்குணன், கட்டுமரத்திலிருந்து கப்பல் வரை, ப.23.
38. சி.ர.கோவிந்தராசன், ஔவையார் அருளிய அறநூல்கள், மூலமும் தெளிவுரையும், ப.38.
39. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்., ப.34.
40. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.57.
41. அ.இராகவன், நம்நாட்டுக் கப்பற்கலை, ப.182.
42. மயிலை.சீனி.வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப.77.
43. மேலது., ப.78.
44. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழர் வரலாறு, ப.308.
45. கழகப்புலவர் குழுவினர். கழகத் தமிழகராதி, ப.668.
46. எஸ்.கௌமாரீஸ்வரி (தொ.ஆ.), பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும், ப.470.
47. மேலது., ப.475.
48. வெ.பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை, ப.11.
49. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.121.
50. பி.சேதுராமன், ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல், ப.86.
51. வே.தமையந்திரன், நமது பாரம்பரிய தொழில்நுட்ப அறிவியல், ப.5.

# இயல்-3

## துணைமைத் தொழிற்சார் கருவிகள்

### முன்னுரை

ஐவகை நிலம் சார்ந்த தொழில்களை முதன்மை, துணைமைத் தொழில்கள் எனப் பிரித்துக் காணுதல் தேவையாகின்றது. முதன்மைத் தொழில்களாக வேட்டை, கால்நடை வளர்ப்பு, உழவு, வணிகம், மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், ஆறலைத்தல் போன்றவை இருந்ததை இலக்கியங்களின் வழி காணமுடிந்தது. அத்தகைய முதன்மைத் தொழில்களுக்குத் துணைபுரியும் தச்சுத்தொழில், மட்கலத்தொழில், கொல்லுத்தொழில், உலோகத்தொழில் ஆகியவற்றின் பயன்பாட்டையும், அவற்றிற்கு உபயோகப்படுத்திய கருவிகள் பற்றியும் விளிப்பதாய் இவ்வியலானது அமையப்பெறுகிறது.

### துணைமை விளக்கம்

துணைமை என்பதற்கத் “துணை”[1] என கழகத் தமிழகராதி பொருள் விளக்கம் அளிக்கிறது. துணை என்றால் “அளவு; ஆதரவு; ஆயுதமுனை; இணை; உதவி; ஒப்பு”[2] எனவும், துணைக்கருவி என்றால் “உபகருவி”[3] எனவும் கழகத் தமிழகராதி சுட்டுகின்றது. இதனடிப்படையில் துணைமை என்பது துணைக்கருவி, உதவி செய்யும் கருவி எனப் பொருள் கொள்ளக்கூடும்.

### இரும்புத் தொழில்

‘‘பெண்கள் முற்றிலும் பங்கேற்காத மூன்றாம் வகைத் தொழில்களான தச்சு வேலை, இரும்பு வேலை, சிற்ப வேலை, பித்தளைப் பாத்திர வேலை, பொன்வேலை ஆகியவற்றுக்கான மூலப்பொருட்களைப் பண்டைக் காலத்தில் தட்டார்கள் மலைப்படுகைகளில் ஓடும் ஆற்றுப் பரப்பிலிருந்து தங்கத்துகள்களைச் சேகரித்துள்ளனர். அதுபோல மலைப்பகுதிகளின் இரும்புக் கனிமங்களைச் சேகரித்து அவற்றைக் காய்ச்சி இரும்புக் கருவிகள் செய்துள்ளனர்’’[4] என்கிறார் சீ.பக்வத்சலபாரதி.

**இரும்புப் பண்பாடு**

“இந்திய வரலாறு கி.மு. 8000ஆம் ஆண்டிற்கு முன் ஆதிச்சநல்லூரில் இரும்புப் பண்பாடு தோன்றி உள்ளது எனக் கூறலாம்”[5] என்கிறார் முத்தாலங்குறிச்சி காமராசு.

“சமையலுக்குப் பயன்படுத்திய 50 வகைக்கும் மேற்பட்ட மண்பாண்டங்களின் இரும்புப் படைக்கலன்கள், கத்திகள், குட்டையான வாள்கள், கைக்கோடரிகள், சிறிய அணிகலன்கள் ஆகியவையும் மனித எலும்புகளும் தோண்டி எடுக்கப்பட்டன”[6] எனவும் இவ் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**இரும்புப் பொருட்கள் ஆதிச்சநல்லூரில் கிடைத்தவை**

“திருநெல்வேலி மறுட்டம் ஆதிச்சநல்லூரில் இந்திய அரசு தொல்லியல் துறை அகழாய்வு நடத்திய போது கி.மு.7–8ஆம் நூற்றாண்டிற்குரிய இரும்புக் கொழு கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன”[7] என்று கோ.முத்துச்சாமி கூறுகிறார்.

“கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள காலக்கட்டத்தில் கொடுமணல் என்னும் ஊரில் இரும்பு உருக்கும் தொழில் நடைபெற்றதாகவும், அத்தொழிலுக்கு இன்றியமையாத மூலக்கூறுகளான இரும்புத் தாதுக்கள் அங்கே கிடைத்திருக்கின்றன”[8] என வே.சா.அருள்ராஜ் குறிப்பிடுகிறார்.

“எரிவேல், ஈட்டி, குத்துவாள் அல்லது பட்டாக்கத்தி, அம்பு, வேல், இருபுறமும் கூர்மையான வாள், மூவிலை வேல் (திரிசூலம்), கூரிய அம்புதலை, கைகேடாரி, வாள், வளைந்த கத்தி, இருவளைவான கொக்கித்தடி, பலி வாள், அம்புதலை, வேலாயுதம், கோடாரி, சூலாயுதம், கேடயம், அரிய ஆயுதம், சிறிய உடைவாள், சிறிய ஈட்டி, செங்கோண வாயுள்ள ஈட்டி, கூம்புவாய் ஈட்டி, ஈட்டிப் பிடியுள்ள குழிவான குழாய், குழிவான விழிம்புள்ள குத்துவாள், அகன்ற வாய்ப்பரசு, நீண்ட வட்டக் குழிவான ஈட்டி, குழிவான இரும்பக் கைப்பிடி ஈட்டி, வளைவுகளுள்ள

வாள், நுனியுள்ள வாயுடைய ஈட்டி, கத்தி''[9] ஆகியன கிடைத்ததை முத்தாலங்குறிச்சிக் காமராசு குறிப்பிடுகிறார்.

**கொல்லுத் தொழில்**

கொல்லர் தொழில் என்பது இரும்புத் தொழில் செய்யும் கொல்லர் பொன் தொழில் செய்யும் பொற்கொல்லர் என்ற இரு தொழிலைக் குறிக்கும் பதமாகும். கொல்லன் என்பதற்குக் "கம்மாளன்; அரண்மனைவாயில் காப்போன்; கருமான்"[10] எனக் கழகத் தமிழகராதி எடுத்தியம்புகிறது. கொல் என்பதற்குக் கொலை செய்தல்; வருத்தம்; கொல்லன்; தொழில்; இரும்பு; உலோகம்; குறுக்குத்தாள்; மிக அதிகமாகத் துன்புறுத்துதல்; மிகவும் பாராட்டும்படியாகச் செய்தல்; வெளுத்துக்கட்டுதல்"[11] எனச் சுராவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி விளம்புகிறது. இவ்வகராதி கொல்லர் என்பதற்கு 'கம்மாளர், அரண்மனை வாயிற்காப்போர்"[12] எனவும், கொல்லன் என்பதற்கு "கம்மாளன், இரும்பு வேலை செய்பவன்; அரண்மனை வாயிற்காவலன்"[13] எனவும் சுட்டுகிறது. இவற்றிலிருந்து கொல்லன் என்பவர் இரும்புத் தொழில் செய்பவர் என்பது தெளிவாகிறது. கம்மாளன் என்பது பொன் வேலை செய்பவரைக் குறிக்கிறது. ஆகையால் கொல்லர் இரும்பு, பொன் தொழில் செய்யும் கொல்லர்களின் தொழிலைக் குறிப்பதாய் அமைகிறது.

**இரும்புக் கொல்லர்**

இரும்பைக் கொண்டு மேற்கொள்ளப்படும் கொல்லுத் தொழிலானது சங்க இலக்கியத்தில் பரந்துபட்டுக் காணப்படுகிறது. உலோகங்களில் மிக உறுதியானதும் உபயோகமுள்ளதுமான உலோகம் இரும்பாகும். உலோகங்களில் இரும்பை 'இராஜ உலோகம்' என அழைப்பர். இரும்புக்கு இலத்தின் மொழியில் '∴பெர்ம்' (Ferrum) என்று பெயர். சங்க இலக்கியத்தில் இரும்பானது 'பொன்' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. 'பொன்' என்பது பொதுநிலையில் உலோகத்தைக் குறிக்க முதன்முதலில் பயன்படுத்தப்பட்டு வந்தது. செம்பைச் செம்பொன் என்றும், கரும்பொன் என்றும் இரும்பொன் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பொன் என்ற பொது பெயரையுடைய இரும்பால் நடைபெறும் கொல்லுத்தொழில்

பண்டைய காலத்தில் இவர்களால் கடமையாகச் செயல்பட்டு வந்தது என்பதை,

**“வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே”** (புறநா.312:3)

என்றடியின் வழி புலவர் பொன்முடியார் பாடியுள்ளார். இதன்வழி கொல்லர் தொழில் இன்றியமையாத தொழிலாக இருந்தனர் என்பதைக் காணமுடிகிறது. கொல்லர்கள் தொழில் செய்யும் இடமானது ‘உலைக்களம்’ என்று அழைக்கப்பட்டது.

கொல்லர்களின் பெயர்கள் இலக்கியங்களில் ‘கருங்கைக் கொல்லன்’ எனவும், ‘கருங்கை வினைஞர்’ எனவும் பயன்படுத்தப்பட்டுள்ளன கொல்லர்களுக்கு வழங்கப்பட்ட பெயர்களைத் தமிழ்மொழி அகராதியில் சி.டபிள்யூ.கதிரவேற்பிள்ளை (1981:79) கொடுத்துள்ளதை, வே.சா.அருள்ராஜ் அவர்கள் பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில் என்னும் நூலில்,

“1. அக்க சாலையர்
2. அறிவர்
3. அற்புதர்
4. ஓவர்
5. கண்ணாளர்
6. கண் வினைஞர்
7. கம்மியர்
8. கொல்லர்
9. சிற்பியர்
10. தபதியர்
11. துவட்டர்
12. புலவர்
13. புனைவர்
14. யவனர்
15. வித்தகர்
16. வித்தியர்
17. வினைஞர்”[14]

என எடுத்துரைக்கிறார். குகைக்காமன், கன்னான் ஆகிய பெயர்களையும் கொல்லர்க்குக் கொடுத்துள்ளார் எனவும் உரைக்கிறார் அருள்ராஜ்.

**உலைக்களம்**

கொல்லன் பயன்படுத்திய உலைகள் கொல்லுலைகள் எனப்பட்டன. இலக்கியத்தில் உலைக்களம் என வழங்கப்பட்டது. இவ்வுலைக்களம் எவ்வாறு இருந்தது என்பதை, "உலைகள் கல்லினாலும் மண்ணாலும் செய்யப்பட்டவை. பொதுவாக உலைகள் பூமிக்கடியில் அமைக்கப்படும். சுமார் நான்கு அடி ஆழத்தில் புதைத்து வைக்கப்பட்டிருக்க வேண்டும் என மரபுவழிக் கொல்லர்கள் கூறுகின்றனர்"[15] என எடுத்துரைக்கிறார் அருள்ராஜ்.

**கொல்லனின் செயல்கள்**

இரும்பைக் காய்ச்சிப் பணிபுரிந்தவர்களைக் கொல்லர்கள் எனக் கொண்டனர். கொல்லர்கள் பணிசெய்த இடமானது கொல்லுப்பட்டறை, கொற்றுறை என விளம்பப்பட்டன. இவர்களின் செயல்களாக இரும்பைத் தயாரித்தல், அதை வடித்தல், உளர்த்தல், சாணைபிடித்தல், கூர்மையாக்குதல், போர்கருவிகள், வேளாண்கருவிகள், வீட்டு உபயோகக் கருவிகள் செய்தல் போன்றவையாகும். இவற்றில் சாணைப்பிடித் தொழிலைச் செய்வோர் காரோடன் என்று அழைக்கப்பட்டனர். காரோடன் என்பதற்குச் "சாணைக்கல் செய்வோன்; ஆயுதவுறை செய்வோன்"[16] என கழகத்தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது. சாணைபிடித்தல் என்பது மழுங்கிப்போன கத்தி, அரிவாள் ஆகியவற்றிற்குப் பளபளப்பும், கூர்மையும் படுத்துவதாகும். இத்தொழிலையும் கொல்லர்கள் செய்துள்ளனர். இவற்றை அகநானூற்றின்,

**"சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய**
**கல்போல் பிரியலம் ....................." (அகநா.1:5-6)**

என்ற அடிகள் சுட்டுகின்றன. சிறுதொழிலாகிய சாணைக்கல் இயற்றுவோன் அரக்கோடு சேர்த்து இயற்றிய கல்லைப் போன்று பிரிவு இல்லை, பிரிக்க இயலாது எனத் தோழி தலைவிக்குச் தன் வண்ணம் வழியாகக் கொல்லர்களிலும் ஒருசிலர் சாணைக்கல் இயற்றும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர் என்பதும் புலப்படுகிறது.

**கொல்லர்களின் பயன்பாடு**

இரும்புத் தொழில் செய்யும் கொல்லர்களின் பயன்பாடானது பழந்தமிழரிடையே மன்னன் முதல் சாதாரண மக்கள்வரை பரவியிருந்தது. இக்கொல்லர்கள் அரசனுக்குப் போர்களுக்குத் தேவையான படைக்கருவிகள் செய்யவும், அவற்றைப் பழுதுபார்த்துக் கொடுக்கவும் பயன்பட்டுள்ளனர். வேளாண் தொழிற்குத் தேவையான கருவிகளும், வீட்டுப் பொருள்களும் செய்து கொடுக்கப்பட்டன. தச்சுத்தொழில், யானை அடக்கும் தொழில் எனப் பல தொழில்களில் இரும்பின் பயன்பாடானது மிகுந்திருந்ததைக் காணமுடிகிறது.

**கொல்லர் செய்த கருவிகள்**

போர்க்கருவிகளாகப் பழந்தமிழர் பயன்படுத்திய வேல், வாள், அம்பு, கேடயம், குந்தம் (ஈட்டி), மழுப்படை, தானியங்கும் போர்க்கருவி ஆகியனவும், வேளாண்மையில், கலப்பை, கொழு, அரிவாள், சுரை, கணிச்சி, துளர் (களைக்)கொத்து ஆகியனவும், வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்களான கோடரி, கத்திரிக்கோல், விளக்கு, ஊசி போன்றனவும், தச்சுத் தொழிலில் உளி, தூண்டில், எறியுளி போன்றவையும் மீன்பிடி கருவியும், யானை அங்குசம், பூண், சங்கிலி, ஆணி போன்ற கருவிகளும் இரும்பால் செய்யப்பட்டவையாகும்.

**கொல்லர்களின் இருப்பிடம்**

இரும்புத்தொழிலை மேற்கொள்ளும் இக்கொல்லர்களின் செல்வாக்கு மேலோங்கிக் காணப்பட்ட போதிலும் அவர்கள் எல்லா இடங்களிலும், ஊர்களிலும் இருக்கவில்லை. எண்ணிச்சொல்லும் விதமாய் ஏழு ஊர்களுக்கு ஒரு கொல்லர் உலைக்கூடம் இருந்ததையும் கொல்லர்கள் இருந்ததையும் சங்க இலக்கியத்தில்,

**“ஏழ்ஊர்ப் பொதுவினைக்கு ஓர்ஊர் யாத்த**
**உலைவாங்கு மிதிதோல் போலத்”** (குறுந்.172:5-6)

என்கின்றடிகள் இயம்புகின்றன. ஏழ் ஊரில் உள்ளவர்களுக்குப் பொதுவாக உள்ள ஒரு தொழிலின் பொருட்டு, ஓர் ஊரின் கண் கொல்லனால் கட்டப்பட்ட வலித்து அமுக்கும் துருத்தியின் தோல் என விளக்கம் அளிக்கிறது இப்பாடல்.

**கொல்லுத் தொழிற்கருவிகள்**

கொல்லர்களால் செய்யப்படும் இரும்புத் தொழிலின் பயன்பாடானது மனிதனின் பல்நிலைப் பயன்பாட்டிலும் காணப்படுகிறது. கொல்லர்கள் அத்தொழிலை மேற்கொள்வதற்குக் கருவிகளாகத் துருத்தி, குறடு, சுட்டுக்கோல், சம்மட்டி, அரம் போன்றவை பயன்பட்டுள்ளன. இக்கருவிகளையும் அவர்கள் செய்து கொண்டிருக்க வேண்டும்.

**துருத்தி**

'துருத்தி' என்பதற்கு ஆற்றிடைக்குறை, ஊதுந்துருத்தி, தோல், நீர்த்துருத்தி, மட்டத்துருத்தி, ஒத்து வயிறு"[17] என கழகத் தமிழ் அகராதி பொருள் தருகிறது. தோல், உலைத்துருத்தி, சுத்திரி, உதி, சிலை, பத்திரி, விசிறி, பந்தம், பந்தி"[18] ஆகிய பெயர்களைத் தமிழ்மொழி அகராதி சுட்டுகிறது. துருத்தி எவ்வாறு இயக்கப்படுகிறது என்பதை, "துருத்தி பொதுவாகக் கையினாலோ அல்லது கால்களினாலோ இயக்கும் தன்மையுடையது. இக்கருவியைக் கால்களாலோ கையினாலோ அமுக்கும் பொழுது காற்று உலைக்குழாயின் வழியாக உலைக்குள் செல்கிறது. அதன் பயனாய் உள்ளே எரிந்து கொண்டிருக்கும் கரி மென்மேலும் தொடர்ந்து எரிந்து கொண்டே இருக்கும். இரும்புத் தாதுக்களை உருவாக்குவதற்குப் பல மணி நேரங்கள் தொடர்ச்சியாக உலையில் தீ எரிந்து கொண்டே இருக்க வேண்டும்"[19] என்கிறார் அருள்ராஜ்.

சங்க காலத்தில் துருத்தியைக் கொல்லர்கள் கால்களினால் பயன்படுத்தியுள்ளனர். வேங்கைமரத்தின் கொத்துக்களுடைய பூக்கள் விழுந்ததற்கு உவமையாகக் கொல்லன் உலையிலிருந்து வந்த தீப்பொறி சுட்டப்பட்டது. இதனை,

**"நல்இணர் வேங்கை நறுவீ கொல்லன்**
**குருகுஊது மிதிஉலைப் பிதிர்வின் பொங்கி" (அகநா.202:5-6)**

என்றடிகளில் காணலாம். வேங்கை மரத்தின் கொத்துக்களுடையப் பூக்கள் சிதறி விழுந்தன. இப்பூக்கள் கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலைக்கலத்தினின்றும் தெரித்து எழும் தீப்பொறி போல இருந்ததாகக் குறிப்பிடுகிறது. துருத்தி கொல்லன் உலையில் தீயினை (நெருப்பினை) அதிகரிப்பதற்காகப் பயன்படுத்தும் கருவியாகும். இக்கருவி காலால்

மிதித்துக் கையாளப்பட்டதை இவ்வடிகள் தெளிவுறுத்துகின்றன. இதனைப்போன்று பெருபாணாற்றுப்படை,

**"……………………… மென்தோல்**
**மிதிஉலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன**
**கவைத்தாள் அலவன் அளற்று அளை சிதையப்"**
**(பெரும்பாண்.206-208)**

என்னும் அடிகள் கொல்லன் உலையில் காலால் மிதித்துத் துருத்தியைப் பயன்படுத்தியதையும், நண்டின் கால் போன்று இருக்கும் 'குறடு' என்ற கருவியைப் பயன்படுத்தியதையும் உணர்த்துகின்றன. துருத்தியானது தோலாலான ஓர் இரும்புக் கருவி. கயிறு கொண்டும் பயன்படுத்தப்பட்டது. இதனை,

**"வல்லோன் அடங்குகயிறு அமைப்ப கொல்லன்**
**விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிரா**
**கொடுநுகத்து யாத்த தலைய, கடுநடை**
**கால்கடுப்பு அன்ன கடுஞ்செலல் இவுளி" (அகநா.224:2-5)**

என்றடிகள் விளக்குகின்றன. தேரைச் செலுத்துவதில் வல்லவனாகிய பாகன் அடங்கிச் செல்வதற்குரிய கடிவாளக் கயிற்றில் குதிரைகளைப் பூட்டி பின் நுகத்தடியில் கட்டப்பட்ட தலையினைக் கொண்ட விரைந்த நடையினையும் காற்றிலும் விரைந்தோடும் ஓட்டத்தினையும் உடைய குதிரைகள் கொல்லன் வேகமாக இழுத்துவரும் உலைக்களத்துத் துருத்தி போல வெப்பப் பெருமூச்சுவிடும் எனச் சுட்டுகிறது. இவ்வடிகள் துயத்தியானது கயருடன் கட்டி இருக்கப்படும் என்பதை உணர்த்துகிறது. அகநானூற்றின் மற்றொரு பாடல் துருத்தியானது இழுக்கும்போதும் புடைத்துவிடும் பொழுதும் சுருங்கும் என்பதை,

**"அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை**
**விசைவாங்கு தோலின் வீங்குபு நெகிழும்" (அகநா.96:6-7)**

என்றடிகள் உணர்த்துகின்றன. ஊதப்படும் கொல்லனது உலைகளத்து, விசை கொண்டு இழுக்கும் துருத்தியைப் போலப் புடைத்துச் சுருங்கும் என உணர்த்துகிறது. இதேபோன்று அகநா.55-ஆவது பாடலும் சுட்டுகிறது. ஊதும்துருத்தியினுள் அழல் எழும் என்பதைச் சிலப்பதிகாரம்,

**"காதலர்ப் பிரிந்த மாதர் நோதக**
**ஊதுலைக் குருகி னுயர்தன ரொடுங்கி"[20]**

என்றடிகள் குறிப்பிடுகின்றன. காதலைப் பிரிந்த மாதர் பிரிவால் துன்பமுறுதலை ஊதுகின்ற துருத்தியின் உலைமூக்குப்போல அழலெழ உயிர்த்தனராய்ச் செருக்கடங்கி என உவமையாகக் கூறியுள்ளனர். சிலம்பின்,

**"காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்**
**ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே**
**ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சாயின்"**[21]

என்றடிகளும் உலைக்களத்தில் உள்ள துருத்தியின் மூக்குப் பற்றிய செய்தியினை விளம்புகின்றன. இன்றையக் காலக்கட்டத்தில் கொல்லுப்பட்டறையில் கையால் செயல்படும் துருத்திகள் காணப்படுகின்றன. துருத்தி பொன் செய்யும் இடத்திலும் பயன்பட்டது. இன்று பொன் செய்யும் இடத்தில் பொன்னை உருக்க மின்சாரத்தைப் பயன்படுத்துகின்றனர். துருத்தியானது இரும்பைப் பழுக்க வைக்க ஏற்படுத்தும் நெருப்பை அதிகரித்து நெருப்பை மூட்டுவதற்குப் பயன்படும் கருவியாகும் என்பது தெளிவாகிறது.

**உலைமூக்கு**

உலைமூக்கு என்பது துருத்திக்கும் நெருப்புக்கும் இடையிலுள்ள குழாய்ப் பகுதியாகும். இக்குழாயானது துருத்தியுடன் இணைக்கப்பட்டு இதன் முனைப்பகுதி (நெருப்பு என்பது உலைக்கலன் ஆகும்) உலையைத் தொட்டபடி அமையப் பெற்றிருக்கும். துருத்தியைக் கயிறு கொண்டு இழுக்கும் பொழுது சுருங்கி விரியும். அதனுள்ளே இருக்கும் காற்றானது குழாயின் வழியாக வந்து உலையைச் சென்றடையும். இதன் இயல்பு மூச்சை இழுத்து விடுவது போல் காணப்படும். இதனாலேயே இலக்கியங்களில் மூச்சிற்கு உவமையாகச் சுட்டப்படுகின்றது. உலை மூக்கிற்கு "குருகு, சிவை"[22] என்ற பெயர்களைத் தமிழ்மொழி அகராதி சுட்டுகிறது. இலக்கியத்தில் குருகு எனவும் வருவதைக் காணமுடிகிறது. கலித்தொகையின் 54-ஆவது பாடலான,

**"நறா அவிழ்ந் தன்னவென் மெவ்விரற் போதுகொண்டு**
**செறாஅச் செங்கண் புதைய வைத்துப்**
**புறாஅக் குருகின் உயிர்த்தலு முயிர்த்தனன்"** (9-11)

என்னும் அடிகள் தலைவியின் காமத்துன்பத்தைத் தலைவன் நீக்கினான் என்பதற்குத் துருத்தியைச் உவமையாகச் சுட்டுகின்றன. நரவம்பூ மலர்ந்ததைப் போன்று தலைவியின் மெல்லிய விரல்களையுடைய கையைத் தலைவன் தன் அருளுடைய சிவந்த கண்கள் மறையும்படி வைத்துக்கொண்டு தன் மூச்சினை இழுத்துவிட்டான் (நெட்டுயிர்ப்பு செய்தான்) என்கிறது. இப்பாடலில் உலை மூக்கானது 'குருகு' என்னும் பெயரில் இடம்பெறுவதைக் காணலாம்.

## குறடு

கொல்லர்கள் பயன்படுத்திய கருவிகளில் ஒன்று குறடு ஆகும். இன்றைக்கும் பயன்பாட்டில் மிகுதியாக இடம்பெறுகிறது. இக்குறடானது கொல்லன் உலையில் இரும்பினைப் போடுவதற்கும் பழுக்கவைத்த இரும்பை வெளியில் எடுப்பதற்கும் பயன்படக்கூடியதாகும். தமிழ்மொழி அகராதியில் குறடானது 'கம்மியா குறடு' என வழங்கப்படுகிறது. இதற்கு ஆங்கிலத்தில் 'Pincers tongs foreceps' என்ற பெயருண்டு. இக்குறடானது கொடிறு என்ற பெயரில் இடம்பெறுவதைப் பெரும்பாணாற்றுப்படை,

> **"மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன**
> **கவைத்தாளலவ னற்றளை சிதைய" (207-208)**

என்ற அடிகளின்வழிக் குறிப்பிட்டுள்ளது. குறடு கொடிறு எனவும் நண்டின் கால் போன்ற அமைப்பினையுடையது என்றும் விளக்குகின்றன. அவர் பயன்படுத்திய குறடானது நண்டின் கால் போன்று காணப்பட்டது என்பர் புலவர். குறடு என்ற சொல் மருவி வந்திருக்கலாம். கொடிறு என்ற சொல் மூலச்சொல்லாக இருந்திருக்க வேண்டும்.

இதனை அருள்ராஜ் 'பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில்' என்னும் நூலில், "குறடு என்பதற்குக் 'கொடிறு' என்ற சொல் எடுத்தாளப்பட்டுள்ளது. மொழி நோக்கில் முதன்முதலில் 'கொடிறு' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டு வந்திருக்கும்.

அச்சொல் மருவி 'கொறடு' என ஆகியிருக்கலாம். திராவிட மொழிகளில் இ > அ மாற்றம் பொதுவாக நடைபெறும். அம்மாற்றமே இங்கு நடைபெற்றிருக்கிறது. அதாவது கொடிறு > கொறடு என

மாறியுள்ளது. அடுத்தக்கட்டமாகத் திராவிடமொழிகளில் ஓ > உ என்று மாறும். இங்கும் அம்மாற்றமே நிகழ்ந்துள்ளது. அதாவது கொறடு > குறடு என ஆகியுள்ளது. இம்மாற்றங்கள் அனைத்தும் திராவிடமொழிகளில் பொதுவாக நடைபெறும் மாற்றங்கள் ஆகும். எனவே பெரும்பாணாற்றுப்படை அடிகளில் கொடுக்கப்பட்டிருக்கும் 'கொடிறு' என்றும் சொல் மூலச்சொல்லாகும். அம்மூலச்சொல்லிலிருந்தே குறடு என்ற சொல் பல மாற்றங்கள் அடைந்து வந்திருக்கலாம். அதாவது, கொடிறு > கொறுடு > குறடு என ஆகியிருக்கலாம்"[23] என்கிறார்.

**சம்மட்டி**

சம்மட்டி என்பது இரும்பை அடிக்கப் பயன்படுத்தும் கருவியாகும். உலையில் பழுக்க வைத்த இரும்பைக் கொல்லன் தான் செய்ய விரும்பும் கருவிக்கு ஏற்றவாறு இரும்பை அடிக்க இச்சம்மட்டிப் பயன்படுகிறது. இச்சம்மட்டி 'கூடம்' என்ற பெயரில் வழங்குவதைத் தமிழ்மொழி அகராதி சுட்டும். ஆங்கிலத்தில் 'Hammer' என அழைக்கப்படுகிறது. சங்க இலக்கியங்களில் இது கூடம் மற்றும் முட்டிகை என்ற பெயரில் வழங்கப்பட்டதை,

**"பெருங்கை யானைக்கொடுந்தொடி படுக்கும்**
**கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த**
**கூடத் தின்இசை வெரீஇ மாடத்து" (பெரும்பாண்.336-339)**

இவ்வடிகள் குறிப்பிடுகின்றன. போர்க்களத்தில் பகைவர்களைக் குத்தி அதனால் கொம்பில் உள்ள கிம்புரி, அழிந்த கழன்ற யானைத் தந்தத்தில் மறுபடியும் கிம்பிரியைப் போடுவதற்குச் சம்மட்டியால் கிம்பிரியை அடித்துக்கொண்டு இருந்தான் கொல்லன் என இயம்புகின்றது. இப்பாடலில் சம்மட்டி என்பது கூடம் என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளது. சம்மட்டியை முட்டிகை என வழங்குவதை நாலடியார்,

**"முட்டிகை போல முனியாது வைகலும்"[24]**

என்கிறது. இரும்பைத் தீட்டுவதற்குச் சம்மட்டி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**உலைக்கல்**

உலைக்கல் என்பது இரும்பினை வைத்து அடிக்கப்பயன்படும் கருவி ஆகும். இதன்மேல் வைத்துச் சம்மட்டியால் அடிப்பர். கறி போன்றவற்றை

வெட்டுவதற்குக் கட்டையைப் பயன்படுத்துவது போல இரும்பினை வைத்து அடிக்க உலைக்கல்லானது பயன்படுத்தப்பட்டது. இன்றும் பயன்படுத்துகின்றனர். இதற்கு ஆங்கிலத்தில் ‘Anvil’ எனப்பெயர். இதனை “அடைக்கல், பட்டைக்கல்”[25] எனத் தமிழ்மொழி அகராதி குறிப்பிடுகிறது. இந்த உலைக்கல்லானது திண்மையாகவும் செறிவு மிகுந்ததாகவும் இருந்திருக்க வேண்டும். இலக்கியத்தில் பாறைக்கு உவமையாக இவ்வுலைக்கல சுட்டப்படுவதன்வழி உலைக்கல்லானது உறுதியானது என உணரலாம். பாறை எவ்வளவு உறுதியானதோ அதைப்போன்று உறுதியுடையதாக இருந்திருக்க வேண்டும். உலைக்கல்லில் இரும்பினை வைத்து அடிப்பதால் அதுவும் இரும்பால் ஆன ஒன்றாக இருக்க வேண்டும். பாறையில் இரும்பு கொண்டு அடித்தால் உடைத்துவிடும். அதனடிப்படையில் இரும்பை இதில் வைத்து அடிக்க முடியுமானால் இக்கல்லும் இரும்பாலானதே ஆகும். பாறையை உலைக்கல்லோடு ஒப்பிடுவதை,

**“எறும்பி அளையின் குறும்பல் கனைய**
**உலைக்கல் அன்ன பாறை ஏறி**
**கொடுவில் எயினர், பகழி மாய்க்கும்”** (குறுந்.12:1-3)

என்றடிகள் எடுத்துக்காட்டுகின்றன. எறும்புப் புற்றுக்களைப் போன்ற குறுகிய பலவாகிய சுனைகளையுடைய பாறைகள் உள்ளன. அப்பாறைகள், கொல்லனது உலைக்கூடத்திலுள்ள பட்டடைக் கல்லைப்போல வெம்மையுடையவை. வளைந்த வில்லினை ஏந்திய வேட்டுவர் அப்பாறையின்மேல் ஏறித் தங்கள் அம்புகளைத் தேய்த்துக் கூர்மையாக்குவர் என இயம்புகின்றன. இப்பாடலின்வழி உலைக்கல்லானது வெம்மையுடையதாகக் காணப்பட்டதை அறியமுடிகிறது. இரும்பை அடித்து அடித்து அக்கல் வெம்மையுடையதாக இருக்கக்கூடும்.

### அரம்

அரம் ஒரு பொருளை வெட்டுவதற்கும் அறுப்பதற்குப் பயன்படும். இரும்பால் செய்யப்படும் கருவிகளைச் செம்மைப்படுத்துவதற்கும் பயன்படுகிறது. அரத்தினைக் கொண்டு இரும்புப் பொருட்களைக் கூர்மை செய்வதற்கும் சங்கு, வளையல் செய்வதற்கும் தச்சுத் தொழிலிலும் மரத்தினை வெட்டுவதற்கும் இவ்வரமானது பயன்பட்டது. அரமானது

ஆங்கிலத்தில் 'Rasp' எனப்பெயர் பெறுகிறது. அராவிச்செம்மை செய்வது அரம் என்னும் இரும்புக் கருவியாகும். அரத்தின் அமைப்பினை அகநானூற்றின்,

**"பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்**
**அர வாய் அன்ன அம்முள் நெடுங்கொடி" (அகநா.9:3-4)**

என்றடிகள் சுட்டுகின்றன. மருதநிலத்து நீர்நிலையில் அடைகரையில் அரத்தின் வாய் போன்ற அழகிய முட்களையுடைய பிரம்பின் நீண்ட கொடிக் காணப்பட்டது. என பிரம்பங் கொடிக்கு உவமையாக அரம் கூறப்படுகிறது. அம்புகளைக் கூர்மைப்படுத்த அரமானது பயன்பட்டதை,

**"மரம் புல்லென்ற முரும்பு உயர் நனந்தலை,**
**அரம் போழ் நுதிய வாளி அம்பின்,**
**நிரம்ப நோக்கின், நிரயம் கொண்மார்" (அகநா.67:4-6)**

என்கின்றடிகள் குறிப்பிடுகின்றன. கரந்தை மறவர்கள் அரத்தினால் அராவப்பட்ட முனையைக் கொண்ட பற்களையுடைய அம்புகளையும் இருக்கிக் குறிபார்க்கும் பார்வையினையும் உடையவர்கள் என விளக்குகின்றன. ஊசியை அரவவும் (கூர்மைப்படுத்தல்) அரமானது பயன்படுத்தப்பட்டது என்பதை,

**"அரம்தின் ஊசித்திரள் நுதி அன்ன" (அகநா.199:8)**

என்றடியானது உணர்த்துகிறது. சங்க இலக்கியத்தில் அரமானது இரும்புத் தொழிலில் பயன்படுத்தப்பட்டதையும் பெரும்பான்மையாகச் சங்கு வளையல்கள் செய்வதற்கு அரமானது பயன்படுத்தப்பட்டதையும் காணமுடிகிறது.

**"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த**
**வளை களைந்து ஒழித்த கொழுந்தின் அ்ன**
**தளை பிணி அவிழா, கரி முகப் பகன்றை" (அகநா.1-2)**

என்றடிகள் வேளாப்பார்பான் என்பவர்கள் வேதத்தைப் பயிலாதவர்கள் யாகம் மேற்கொள்ளாதவர்கள் என்கின்றன. இவர்கள் தொழில் சங்கு அறுத்து வளையல் செய்தல் ஆகும். இவ்வேளாளர்கள் கூர்மையான அரத்தால் அறுத்தெடுத்த வளையல்கள் போக மீதமுள்ள சங்கினது நுனிப்பகுதி போன்று கட்டமைந்த பிணிப்பு அவிழாத வலப்பக்கம் சுரிந்த முகத்தினையுடையனவாக பகன்றை மலரின் அரும்புகள் திகழ்ந்தன எனச் சுட்டுகிறது. அரத்தால் கோடாரி கூர்மைப்படுத்தப்பட்டதை,

**“கருங்கை கொல்லன் அரம்செய் அவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின் நிலை அழிந்து
வீ கமழ் நெடுஞ்சினை புலம்ப காவுதொறும்
கடிமரம் தடியும் ஓசை தன்ஊர்” (புறநா.36:6-9)**

இவ்வடிகள் வலிய கையையுடைய கொல்லனால் அரத்தால் கூர்மை செய்யப்பட்ட அழகிய வாயையுடைய நெடிய கைப்பிடியை உடைய கோடாரி கொண்டு பகைவரின் காவல் மரத்தை வெட்டினர் வீரர்கள் என உணர்த்துகிறது. அரத்தால் வளையல்கள் செய்யப்பட்டதை,

**“அரம்போழ்ந்து அறுத்த கண்தேர் இலங்குவணன்”
(மதுரை.316)**

என்றடியானது அரத்தால் அறுத்து செய்யப்பட்ட வளையல் என விளம்புகிறது. இதுபோன்ற சான்றுகளின் வழியாக அரமானது கொல்லர்களின் இரும்புத் தொழிலில் பயன்பட்டதோடு சங்கு வளையல் செய்யவும் பயன்படுத்தப்பட்டதை உய்த்துணர முடிகிறது.

**சுட்டுக்கோல்**

சுட்டுக்கோல் என்பது கொல்லன் உலையில் இரும்பினைப் பழுக்க வைக்கும்போது இரும்பினைக் கையாளவும் நெருப்பினை நீக்குவதற்கும் பயன்படுத்தப்பட்ட ஒரு கருவியாகும். சுட்டுக்கோல் என்பதற்கு “உலையாணிக்கோல்”[26] எனத் தமிழ்மொழி அகராதி பொருள் தருகிறது. ஆங்கிலத்தில் இதனை ‘Smithspoker’ என அழைப்பர். இக்கருவியும் கொல்லன் பயன்படுத்திய கருவிகளில் ஒன்றாகும். இவை யாவும் கொல்லன் தன் இரும்புத் தொழிலுக்குப் பயன்படுத்திய இரும்பு மற்றும் தோல் கருவிகளாகும்.

**கொல்லன் செய்த கருவிகள்**

கொல்லனின் கடமை வேல் வடித்தல் என இலக்கியங்கள் விளம்புகின்றன. போர்த்தொழிலுக்குப் பயன்பட்ட அனைத்துப் படைக்கருவிகளும் பெரும்பாண்மை கொல்லனால் செய்யப்பட்டவையாகும். அவை வில், வேல், வாள், ஈட்டி, கேடயம், அம்பு மழு போன்ற கருவிகளாகும். பயன்பாட்டுக் கருவிகளாக குயம், கத்திரி, யானைக்கொடுந்தொடி, தோட்டி, கவைமுட்கருவி, சம்மட்டி, உளி, வறைவுக்கத்தி, தொடலைவாள், ஊசிகள், பெரிய கோடரி போன்ற

கருவிகளையும் கொல்லர்கள்செய்தனர் என்பதையம் இலக்கியங்களின்வழி அறியமுடிகின்றது.

**வேல்**

போரில் பயன்படுத்தப்படும் கருவிகளில் ஒன்று வேல். வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லனின் கடமை என இலக்கியம் சுட்டுகிறது. வேல் கொல்லனால் செய்யப்பட்டதை,

**"............................. பாண்பசிப் பகைஞன்**
**...................................................**
**யாம்தன் இரக்கும் காலை தான்எம்**
**உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்**
**கருங்கைக் கொல்லனை இரக்கும்**
**திருந்திலை நெடுவேல் வடித்தின் எனவே"**

**(புறநா.180,7,10-13)**

என்னும் இவ்வடிகள் புலப்படுத்துகின்றன. ஈந்தூர் கிழானிடம் செல்லும் பாணர்கள் இரந்து நிற்கிறார்கள். இத்தலைவன் தன் ஊரிலுள்ள வலிய கைகளை உடைய கொல்லனிடம் பாணர்களின் பசியுடன் இருக்கும் உண்ணாத வயிற்றினைக்காட்டி, நெடியதொரு வேலை வடித்துக்கொடுக்க வேண்டுகிறான். அவ்வேலை வைத்துப் பகைவரை வென்று பொருள் ஈட்டி, பாணர்களின் பசி போக்கியுள்ளான். இவ்வாறு கொல்லனிடம் வேல் வடித்துத்தருமாறு வேண்டுகிறான் என உணர்த்துகிறது. வேலானது எ∴கம் என வழங்கப்படுகிறது. இதனை,

**"புனைமான் எ∴கம் வலவியின் எந்தி" (அகநா.215:4)**
**"அடுபுகழ் எ∴கம்" (அகநா.312:13)**
**"கருங்கடை எ∴கம்" (பெருந.119)**
**"காழ் மண்டு எ∴கம்" (மலைபடு.490)**

ஆகிய அடிகளின்வழிக் காணமுடிகிறது. வேலானது கூர்மையானதும் பளபளப்புமிக்கதாகவும் இருந்தமையை,

**"......................... பெரும்! நின்**
**தானையும் கடலென முழங்கும்; கூர்நுனை**
**வேலும் மின்னின் விளங்கும்" (புறநா.42:3-5)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இலையின் அமைப்பினைப் போன்று காணப்படும்.

**அம்பு**

அம்பும் கொல்லனால் செய்யப்படும் கருவியாகுகும். இதனை,

**"வடிநவில் அம்பின் ஏவல், ஆடவர்"** (அகநா.215:10)

என்றடி விளக்கும். வடித்தல் என்பது கொல்லனின் தொழில் அதனடிப்படையில் 'வடிநவில் அம்பு' என்றமையால் கொல்லனால் செய்யப்பட்ட அம்பு என்பது பெறப்படுகிறது.

**"கூர்நல் அம்பில் கொடுசில் கூளியர்"** (புறநா.23:5)

என்றடி கூரிய அம்புகளையும் வளை வில்களையும் வீரர்கள் கொண்டிருந்தனர் எனச் சுட்டுகிறது.

**வாள்**

போர்க்கருவிகளில் போற்றப்படும் கருவி வாளாகும். போரில் தன் மகன் புறமுதுகிட்டு இறந்தான் என கேள்வியுற்ற தாய் சினம் கொண்டு என் மகன் புறமுதுகிட்டிருந்தால் அவன் பால் உண்ட மார்பினை அறுத்து எறிவேன் என சூழுரைத்து வாளோடு போர்க்களம் புகுந்தாள் என்பதை,

**"...........................................**
**.................. உருகெழு முரசம்**
**மண்ணி வாரா அளவை, எண்ணெய்**
**நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை**
**அறியாது ஏறிய என்னைத் தெறுவர**
**இருபாற் படுக்கும் நின் வாள்வாய் ஒழித்ததை**
**அதூஉம் சாலும் நற்றமிழ் முழுது அறிதல்"** (புறநா.50:5-10)

என்றடிகள் சுட்டுகின்றன. கள்வர்கள் கையில் கூரிய வாள், உடைவாள் போன்றவற்றை வைத்திருந்தனர் என்பதை,

**"கல்லும் மறனும் துணிக்கும் கூர்மைத்**
**தொடலை வாளர் தொடுதோல் அடியர்**
**குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடி"**
**(மதுரை.635-637)**

என மதுரைக்காஞ்சி சுட்டுகிறது.

**கேடயம்**

இது தோலால் ஆன கருவியாகும். பாதுகாப்புக் கவசம் போன்றது. வில், அம்பு, ஈட்டி போன்றவற்றிலிருந்து தடுத்துத் தம்மைப் பாதுகாத்துக்

கொள்ள வீரர்கள் கையில் கொண்டிருப்பர். இதனைத் தோல் பரிசை, கிடுகு என்றும் அழைப்பர்.

**“தோல், துவைத்து அம்பில் துளை தோன்றுவ” (புறநா.4:5)**

என்பதில் வீரர்கள் தாங்கிய கேடயங்களின் மீது பாய்ந்த அம்புகள் ஒலியுடன் துளைக்கப்பட்டன. என உணர்த்துகிறது.

**மெய்க்கவசம்**

போர்களில் எதிரிகளிடமிருந்து வரும் ஆயுதங்களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள வீரர்கள் தங்கள் உடம்பில் அணிந்து கொள்ளும், ஓர் உடையே மெய்க்கவசம் ஆகும். உடல் முழுவதையும் மறைத்து மூடும் ஓர் உடுப்பு ஆகும். இக்காலத்திய “குண்டு துளைக்காத சட்டை (Bullet Proffshirt) போன்றதே மெய்மறை”[27] என சாமிநாதன் சுட்டுகிறார். மெய்க்கவசம் பற்றி,

**“நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை” (புறநா.14:13)**

**“குவியல் கண்ணி மழவர் மெய்ம்மறை!” (புறநா.21:24)**

**“வில்லோர் மெய்ம்மறை” (புறநா.65:5)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இக்கவசமானது இரும்பால் செய்யப்பட்டமையின் இரும்பு வேலை பார்க்கும் கொல்லனால் இவை செய்யப்பட்டிருக்கக்கூடும். கொல்லர்கள் போர்க்கருவிகள் மட்டுமின்றி பிற உபயோகப் பொருட்களையும் செய்ததை.

**“கல்லும் மறனும் துணிக்கும் கூர்மைத்**
**தொடலை வாளர் தொடுதோல் அடியர்**
**குறுங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடி**
**குறங்கிடைப் பதித்த கூற்றுணைக் குறும்பிடி**
**சிறந்த கருமை நுண்வினை நுணங்கு அறல்**
**நிறம்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்**
**மென்நூல் ஏணிப் பல்மான் சுற்றினர்**
**நிலன் அகழ் உளியர் கலன்நசைஇக் கொட்கும்**
**கண்மாறு ஆடவர் ஒடுக்கம் ஏற்றி” (மதுரை.635-642)**

என்றடிகளில் காணமுடிகின்றது. கள்வர்கள் தங்கள் கையில் வாள், உடைவாள், நூல் ஏணி, உளி போன்றவற்றைக் கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகிறது. இவற்றில் வாள், உளி, உடைவாள் போன்றவை கொல்லர்களால் செய்யப்பட்டவையாகும். பெண்களின் கூந்தல்

(முடி) குதிரையின் முடி ஆகியன வெட்டுவதற்கு, சீர் செய்வதற்குக் கத்திரிக்கோல் (கத்தரி) பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**“குரங்கு உளைப் பொலிந்த கொய்கவர் புரவி” (அகநா.4:8)**

என்றடியானது சுட்டுகின்றது. வளைந்த தலையாட்டத்தாள் பொலிபெற்ற கத்திரிக்கையிட்டு நறுக்கின பிடரிமயிறினை உடைய குதிரை என விளக்குகிறது.

**“மயிர்குறை கருவி மாண்கடை யன்ன**
**பூங்குழை ஊசல் பொறைசால் காதின்” (பொருந.29-30)**

என்றடிகள் பாடினியின் அழகினை வருணிக்கும் நோக்கில் பொருநராற்றுப்படையில் இடம்பெறுகின்றன. பாடினியின் காதுகள் முடியினைச் சீர்செய்யும் (வெட்டும்) கத்திரியின் வளைவு போல் இருந்தன எனச் சுட்டுகிறது. கலப்பையின் கொழு இரும்பினால் செய்யப்பட்டதை,

**“சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த”**
**(பெரும்பாண்.62)**

**“................................... உழவர்**
**நடைநவில் பெரும்பகடு புதவில்**
**பூட்டிப்பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**
**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி”**
**(பெரும்பாண்.197-200)**

எனும் பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதேபோன்று பதிற்றுப்பத்து (58:15-18), பொருநராற்றுப்படை (117-118) ஆகிய பாடலும் கலப்பையின் கொழுவைப் பற்றியும் நுகத்தடி பற்றியும் விளக்குகின்றன. உளியானது இருப்பால் ஆனதை,

**“அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத”**
**(சிறுபாண்.52)**

என்ற அடி விளக்குகிறது. நெடுநல்வாடை, வீட்டில் மாலை நேரத்தில் இருப்பினாலான விளக்கேற்றுவதை,

**“........................ பொழுதறித்து**
**இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ”**
**(நெடுநல்.41-42)**

என்ற அடிகளில் உணர்த்துகின்றது. கதிர் அரிவாள் பற்றி,

**“நெல்லரி தொழுவர் கூர்வாள்” (நற்.195:6)**

**"நெல்அரி தொழுவர் கூர்வாள் மழுங்கில்**
**பின்னை மறத்தோடு அரியக்கல்"** **(புறநா.379:3-4)**

ஆகிய அடிகள் குறிப்பிடுகின்றன. பெண்கள் அரிசி போன்றவற்றைக் குத்தப் பயன்படுமத்தும் உலக்கைக்கு இரும்பால் பூண் அணிவிக்கப்பட்டதை,

**"இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த**
**அவைப்புமாண் அரிசி அமலைவெண்சோறு"**
**(சிறுபாண்.193-194)**

என்றடிகள் இயம்புகின்றன. தற்பொழுது துணிகளைத் தைக்கப்பயன்படும் ஊசிகளைப் போன்று அன்றைய காலக்கட்டத்திலும் தைக்க ஊசியினைப் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் பயன்படுத்திய ஊசி இரும்பால் ஆனதை,

**"புள்ளி குரலைத் தோல்ஊன் உதிர்த்துத்**
**தீது களைந்து எஞ்சிய திகழ்விடு பாண்டிற்**
**பருதி போகிய புடைகிளை கட்டி**
**எ∴குடை இரும்பின் உள் அமைத்து"** **(பதிற்.74:10-13)**

என்னும் அடிகள் சுட்டுகின்றன. புள்ளியுடைய ஆண் மானின் இறைச்சி போன்றவற்றைத் தவிர்த்து வட்டமாக அறுக்கப்பட்ட தோல் விளிம்பில் இரும்பால் ஆகிய ஊசியால் செய்யப்படும் வேலைப்பாடுகள் அனைத்தும் முடித்த தோலாடை என விளக்குகின்றன.

பழந்தமிழர் தோலினைத் தைக்க இருப்பாலகிய ஊசியினைப் பயன்படுத்தியுள்ளனர். இன்றும் சாக்குப் போன்றவற்றைத் தைக்க இரும்பால் ஆகிய கோணூசியைப் பயன்படுத்துகின்றோம். அதனினும் மென்மையானதாகத் தோலைத் தைக்கப் பயன்பட்ட ஊசி இருந்திருக்க வேண்டும். மீன் பிடிக்கப் பயன்படும் தூண்டில் இரும்பால் ஆனதைதை,

**"கோள்வல் பாண்மகன் தலைவலித்து யாத்த**
**நெடுங்கழை தூண்டில் தடுங்க நாண்கொளீஇக்**
**கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்**
**பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை"**
**(பெரும்பாண்.284-287)**

என்றடிகள் சுட்டுகின்றன. மீன்பிடிப்பதில் வல்லவர்களான பாணர்கள் மீன்பிடிக்கச் செல்லும்போது பச்சை இறைச்சியைத் தோல்பையில் இட்டுச் செல்வர். நீண்ட மூங்கில் கிளையில் செய்யப்பட்ட தூண்டில் கம்பில்

வளைந்த இரும்பாலாகிய தூண்டில் முள்ளில் இறைச்சியைச் செருகி மீன்பிடிப்பர். அவற்றைத் தின்றுவிட்டுத் தப்பித்துக் கொண்டது வாளை மீன் என இவ்வடிகள் இயம்புகின்றன. இவற்றில் 'இரும்பின் மடிதலை' என்ற சொல்லானது இரும்பால் வளைந்த அமைப்பினையுடைய தூண்டில்முள்ளைக் குறிக்கிறது. அரம், கத்தி, தோட்டி போன்ற கருவிகளும் இரும்பினால் செய்யப்பட்டிருக்கின்றன.

தற்காலத்தில் சூழலில் கொல்லர்கள் விறகு வெட்டும் அரிவாள், கோடாரி, கதிர்அரிவாள், களைக்கொட்டு, வாங்கருவாள், சூரிக்கத்தி, வெட்டுக்கத்தி (கசாப்புக்கடையில் பயன்படுத்துவது) (மீன்வெட்டி) சுத்தியல், மண்வெட்டி, ஓலைக்கொத்தி போன்ற கருவிகளை இரும்பினால் செய்கின்றனர். இருப்பினால் செய்யப் பயன்படும் கருவிகளாக இரும்பு அடை, சம்மட்டி, சுத்தியல், குறடு, துருத்தி போன்றவை பயன்பட்டு வருகின்றன.

இரும்பு அடை - அறுவா போன்றவற்றை அடிக்கப் பயன்படுகிறது திருச்சி போன்ற நகரங்களில் கிடைக்கிறது.

துருத்தி - மாட்டுத்தோலால் ஆனது. நெருப்பு மூட்டவும் இரும்பைப் பழுக்க வைக்கவும் பயன்படுத்தப்படுகிறது.

துருத்தி நடுவில் சுவர், சுவரின் அடிப்பகுதியில் நடுப்பகுதி அடுப்புக்குக் குளி நோண்டுவது போன்ற அமைப்புடன் தாவுடன் காணப்படும். அந்தத் தாவில் கரிகள் போன்றவற்றைக் கொண்டு நெருப்பு உருவாக்கப்படுகின்றது. சுவரின் மேல்பகுதி திறந்த வெளியாகவும் இருக்கும். சுவரின் ஒருபுறம் துருத்தியானது இருக்கும். துருத்தியின் மேல் கயிறு கட்டப்பட்டுச் சுவரின் திறந்த வெளிப்பகுதியான மேல்புறமாக வந்து சுவரின் மறுபுறத்தில் கொல்லன் கயிற்றினைக் கையால் இழுத்துக் கீழும் மேலுமாக இழுக்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

துருத்தியின் உலைமுக்கானது சுவரின் அடிப்பகுதியிலுள்ள பொந்தின் (தாவு) முனையில் படும்படியாக வைக்கப்பட்டுள்ளது. கொல்லன் அந்தக் கயிற்றினைக் கீழும் மேலுமாக இழுக்கும் பொழுது துருத்தியானது சுருங்கி விரிந்து கற்றை உலைமுக்கின் வழியாக

வெளியிட்டுக் கரிகளால் மூட்டப்பட்டு இருந்த நெருப்பானது அனல் தெரிக்க வெப்பம் மிகுதியாகக் காணப்படுகிறது. இவ்வெப்பம் இரும்பினைப் பழுக்க வைக்கப் பயன்படுகிறது. பழுக்க வைக்கும் இரும்புகளை எடுப்பதற்குக் குறடுகளைப் பயன்படுத்துகின்றனர். குறடானது பழுக்க வைக்கும் இரும்பினை எடுப்பதற்கு ஏதுவாகச் சிறிய குறடு முதல் பெரிய குறடுகள் வரை காணப்படுகின்றன. குறடானது தேவையான இரும்புப் பொருளைச் செய்யும்பொழுது அவ்விரும்பைப் பிடித்துக் கொள்ளவும் பயன்படுகிறது.

**பொன்தொழில் (பொற்றொழில்)**

பண்டையோர் இரும்புத்தொழிலில் மேலோங்கியிருந்ததைப் போன்றே பொன்செய்வதில் வல்லண்மையும் நுணுக்கமும் மிக்கவராய் இருந்திருக்கின்றனர். பொன் செய்பவர்கள் பொற்கொல்லன் எனப்படுவர். சங்க இலக்கியத்தில் பொற்கொல்லன் என இடம்பெறவில்லையெனினும் பொன்னால் ஆகிய அணிகலன்கள் பற்றிய செய்திகள் நிரம்பிக் கிடக்கின்றன. இவற்றை நோக்கின் பொற்தொழில் மேலோங்கியிருந்தமை விளங்குகிறது. பொற்கொல்லன் என்ற சொல்லாடல் சிலப்பதிகாரத்தில்,

**"நுண்வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர**
**……………………………………………**
**……………………………………………**
**பொன்வினைக் கொல்லனிவனெனப் பொருந்தி"**[28]

என்ற அடிகளில் இடம்பெற்றுள்ளன. இவ்வடிகளில் நுணுக்கமான வேலை செய்யும் கொல்லன் எனவும், பொன் வேலை செய்யும் கொல்லன் எனவும் வருவதை நுண்வினைக் கொல்லர், பொன்வினைக் கொல்லர் என்ற பதங்கள் விளக்குகின்றன. பொன் தொழில் பற்றி,

**"ஆய்பொன் அவிர் இழை தூக்கியன்ன" (அகநா.364:4)**

**"யவணர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னோடு வந்து கறியோடு பெயரும்" (அகநா.149:9-10)**

**"வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்"**
**(பட்டினப்பாலை,187)**

ஆகிய அடிகள் விளம்புகின்றன. மதுரைக்காஞ்சி சிவந்த நிறமுடைய கிளிச்சிறை என்னும் பொன்னால் இயற்றிய பாவை பற்றி,

**“செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை”** (மதுரை.410-411)

என்னும் அடியால் விளம்புகிறது. சங்க இலக்கியம் பொன் வேலைப்பாடு நிறைந்த அணிகலன்களைப் பண்டையோர் பயன்படுத்தினர் என்பதைத் தெளிவுறுத்துகிறது. பொன்னானது பொலன், பொலம் என்ற பெயரிலும் வழங்கப்பட்டது. இவற்றை,

**“பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி”** (அகநா.254:3)

என்னும் அடியில் அறியலாம். பொன்னால் செய்யப்பெற்ற கிண்கிணி அழகு செய்யும் சிவந்த அடிகள் என உரைக்கின்றது. குறுந்தொகை,

**“தவளை வாஅய பொலம் செய் கிண்கிணி”** (142,2)

என தவளையின் வாயைப் போன்ற பொன்னாலான கிண்கிணி என்கிறது.

**பண்டையோர் அணிந்த அணிகலன்கள்**

பழந்தமிழ் மக்கள் குழை, தொடி, கிண்கிணி, வளை-கடகம், ஆரம், சிலம்பு, பொற்றாமரை போன்ற அணிகலன்களை அணிந்தனர்.

**“கோழாரம் பொற்ப வருவான்”** (பரிபாடல்.9,29)

என்றடியானது முருகன் நுண்ணிய வேலைப்பாடு நிரைந்த எதிரொளிக்கும் முத்து ஆரம் அணிந்து அழகுடன் வந்தான் எனச் சுட்டுகிறது. பெண்கள் தலையில் பொன்னால் ஆகிய தாமரைப்பூவைச் சூடினர் என்பதை,

**“பொலந்தாமரை பூச்சூட்டியும்”** (மதுரை.100)

என்ற அடி விளக்குகிறது. வளைப்பற்றி,

**“இடுவளை ஆரமொடு ஈத்தான் உடனாக
கெடுவளை பூண்டவள்”** (பரி.20:34-35)

என்றடிகள் பரத்தைக்குத் தலைவன் வளையலையும், ஆரத்தையும் அளித்ததைத் தலைமகள் கண்டதாக உணர்த்துகிறது. மற்றொரு பாடல் பவளம் வைத்துச் செய்யப்பட்ட வளையைப் பெண்கள் அணிந்ததை,

**“பவளவளை செறிந்தாள்”** (பரி.11:101)

என்று விளக்குகின்றது. பெண்கள் சிலம்பினை அணிந்தனர்.

**“மெல்லடி மேலன சிலம்பு”** (குறுந்.7:2)

பெண்கள் திருமணத்திற்குப்பின் சிலம்பினைக் கழட்ட வேண்டும். அதற்குச் ‘சிலம்புகழி நோன்பு’ என்பர். இந்நிகழ்வு மங்கல நிகழ்வாக நிகழ்ந்ததை,

**“நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்**
**எம்மனை வதுவை நல்மணம் கழிக”** **(ஐங்.399:1-2)**

என்றடிகள் சுட்டுகின்றன. பெண்கள் காதில் அணியும் குழல் மகரக்குழை என அழைக்கப்படும். இதனை,

**“நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங்குழை”**
**(திருமுருகு.86)**

என்றடியும்,

**“ஊசல் ஒண்குழை உடைவாய்த் தன்ன**
**அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி”** **(நற்.286:1-2)**

என்றடிகளும் குறிப்பிடுகின்றன. பெண்கள் காதில் அணியும் தோடு குழல் எனப்பட்டது. ஆண், பெண் மட்டுமின்றி, யானைகளுக்கும் பொன்னால் செய்யப்பட்ட முகபடாம் அணிவித்ததை,

**“ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு**
**பாணர் சென்னி பொலிய”** **(புறநா.126:1-2)**

என்றடிகள் கூறுகின்றன. பகைவரின் யானையின் பொன்னால் ஆகிய நெற்றிப்பட்டதைக் கொண்டு பொற்றாமரை செய்து அதைப் பாணர்களின் தலையில் சூடிடும் தலைமைச் சான்றவன் திருமுடிக்காரி என உணர்த்தும். புறம். 326:14-15 ஆவது பாடலும் இக்கருத்தை உணர்த்துகிறது. புறம். (369:24-26) ஆகிய பாடலும், திருமுருகாற்றுப்படை 79,82, கலித்தொகை (97:10,11) ஆகிய பாடல்களிலும் இக்கருத்தைக் காணமுடிகிறது. யானையின் தலையில் தொடங்கித் துதிக்கை வரை இம்முகபட்டம் (யானைப்பட்டம்) அணிவிக்கப்படுகிறது. யானைக்கு அணிவிக்கப்படும் இப்பொன் ‘ஓடை’ என்ற பெயரில் வழங்கப்பட்டது.

இச்சான்றுகளின்வழி பழந்தமிழர் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்கள் அணிந்தனர் என்பதை அறியமுடிகிறது. பொன்னை உரசிப்பார்க்கும் ‘உரைகல்’ பற்றிப் பல சான்றுகள் கிடைக்கின்றன. இவ்உரைகல் பொன்னைத் தூய தங்கம், தங்கமா என உரசிப் பார்க்கப் பயன்படுகிறது இக்கல் இலக்கியங்களில் ‘உரைக்கல்’, ‘கட்டளைக்கல்’ எனவும் வழங்கப்பட்டது. இதனை, ‘மாற்றுக்கல்’ என்றும் கறிப்பர்.

இவற்றை, “பொன்னாலான அணிகள் செய்ய, பொன்னுடன் செம்பு கலந்து உருக்குவர். செம்பின் அளவுக்கேற்ப அப்பொன்னின் மாற்று குறையும் அல்லது கூடும். 22 கேரட் பொன் என்றால் கூடுதல் 24இல் தங்கம் 22 பங்கு, செம்பு 2 பங்கு. இன்றைய நிலையில் 91.6 கே.டி.எம். என்பது 22 கேரட், 22/24, 100-91.6% தூய பொன் 8.4% செம்பு. இதனையே மாற்றுகாணல் என்பர்”[29] எனக் குறிப்பிடுகிறார் த.சாமிநாதன்.

பாலைநிலத்துச் சிறுவர்கள் விளையாடும் களத்தைக் கீறிக்கொண்டுச் செல்லும் நெல்லிக்காய்களை வைத்து விளையாடினர். அது பொன்னை உரசிப் பார்க்கும் கல்லைப் போன்றது என்பதை,

**“கட்டளை அன்ன இட்டு அரங்கு இழைத்து,**
**கல்லாச் சிறாஅர் நெல்லி பட்டு ஆடும்”** (நற்.3:3-4)

என்றடிகளில் அறியமுடிகிறது. இப்பாடலடி ‘கட்டளை’ எனப் பொன்னை உரசிப்பார்க்கும் கல்லைக் குறிக்கிறது. வண்டானது நறவம் பூவின் தாதைக்குடித்து அதில் ஆடும். அப்பொழுது அதன் நிறமானது பொன்நிறம் போல மாறும் எனக் கூற விறையும் புலவர் பொன்னை உரசும் பொழுது வரும் நிறம் போல் வண்டானது நிறத்தைப் பெற்றது என இயம்புகின்றார். இவற்றை,

**“நறுந்தாது ஆடிய தும்பி, பசுங்கேழ்ப்**
**பொன் உரை கல்லின் நல் நிறம் பெறுஉம்”** (நற்.25:3-4)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. உரைக்கலில் பொன்னை உரசும் பொழுது தங்கத்துகள்கள் அக்கல்லில் ஒட்டுவது இயல்பு. இவ்வாறு ஒட்டும் இப்பொன்னை ‘காக்கா பொன்’ என்று இன்றைய பொற்கொல்லர்கள் குறிப்பிடுகின்றனர். இதை,

**“மின்னின் தூவி இருங்குயில், பொன்னின்**
**உரைதிகழ் கட்டளை கடுப்ப, மாச்சினை**
**நறுந்தாது கொழுதும் பொழுது”** (குறுந்.192:3-5)

என்ற பாடலும் சுட்டுகின்றது. மின்னலைப் போன்ற ஒளியுடைய இறகுகளை உடைய கருங்குயில் மாங்கிளையிலுள்ள மாம்பூவின் மஞ்சள்நிற மகரந்தப்பொடியைக் கோதுவதால் அதன்மேல் உரை கல்லில் பொன்னை உரசுவதால் தங்கத்தின் துகள்கள் ஒட்டிக் காணப்படுவதைப் போல்

குயிலின் மேல் மகரந்தப்பொடிகள் ஒட்டிக் காணப்பட்டது என இவ்வடிகள் குறிப்பிடுகின்றன.

கட்டளைக்கல் பற்றி அகம் (178:10-11), பெரும்பாண். (220) போன்ற அடிகள் விளக்குகின்றன. பொற்றொழிலில் இக்கருவியை மட்டும் காணமுடிகிறது. பொன் செய்வதற்கும் பொன்னை உருவாக்கவும் துருத்தி (ஊதுலை), அடை, பட்டறைகட்டை, சுத்தியல், களிமண் குவளை (கார்பன் கலந்த குவளை), குறடு, டிம்மி அச்சு அல்லது குளியக்கருது, (வடிவத்திற்கு), கத்தரி, செங்கபாலம் (பொன்னை உருக்கி ஊத்தப் பயன்படும் கருவி) ஆகியன பயன்படுகின்றன. உரைக்கல்லானது கம்பம், தேனி மாவட்டத்திலிருந்து வாங்கப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். பொன், முத்து, மணி ஆகியவற்றை அணிகலன்களில் வைத்துப் புனைந்து பழந்தமிழர் அணிகலன்களாக அணிவித்தனர் என்பதை அறியமுடிகிறது. மணியானது மலைப்பகுதியிலிருந்தும், பொன்னானது காட்டுப் பகுதியிலிருந்தும், முத்தானது கடலில் இருந்தும் வந்ததாகக் இலக்கியம் சுட்டுகின்றது. இதனை,

**“மலையயந்த மணியும் கடறுபயந்த பொன்னும்**
**கடல் பயந்த கதிர் முத்தமும்”** **(புறம்.377:16-17)**

என்றடிகள் விளம்புகின்றன. இதில், “மலை என்றது மேருமலையையும், கடல் என்றது தென்பாண்டி நாட்டைச் சார்ந்த கடற்பகுதியையும் குறிப்பது ‘காடு’ என்றது மேரு மலையைச் சார்ந்த காடு என்று பொருள் கொண்டு நிறைவு எய்தலாம். தங்கவயல்கள் நிறைந்த கோலார், மைசூர் பகுதியைச் சார்ந்தது”[30] என த.சாமிநாதன் குறிப்பிடுகிறார். தமிழ்நாட்டில் தங்கம் விளையும் இடம் இல்லை. கோலார் வயலான தங்கச்சுரங்கம் மைசூர் பகுதியைச் சார்ந்தது. இதன்வழி காலந்தோறும் தமிழகம் அணிகலன் தொழிலில் சிறப்புற்றிருந்தமையை அறியமுடிகின்றது.

**அச்சுப்பொறி**

பழந்தமிழர் பொன்னை உருக்கும் வார்க்கும் அச்சுப்பொறிகளைப் பயன்படுத்தினர் என்பதை,

**“வெள்ளி உருக்குறு கொள்கலம்”** **(நற்.124:7)**

என்றடி உணர்த்துகிறது. வெள்ளி போன்றவற்றை உருக்கி வார்க்கும் அச்சு இடம்பெற்றுள்ளது. பழந்தமிழர் தங்கத்தைத் தூய பொன்னாக மாற்றுபுடமிடும் பழக்கத்தைக் கையாண்டதை,

**"சுடுபொன் ஞெகிழத்து முத்தரி சென்றார்ப்ப" (பரி.21:18)**

என்றடியானது இயம்புகிறது.

பரிபாடலும் (12:87) இவற்றினைச் சுட்டிச் செல்கின்றது.

பழந்தமிழரில் ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் அணிகலன்களை அணிந்தனர் என்பதைக் காணமுடிகிறது. பெண்கள் தலையில் தொய்யகம், சுரிதகம் தலைக்கோலம் போன்ற அணிகளை அணிந்ததை,

**"தொய்யகம் தாழ்ந்த கதுப்புப்போல" (கலித்.28:6)**

**"கைவல் வினைவன் தையுபு சொரிந்த**
**சுரிதக உருவின வாகிப் பெயரிய**
**கோங்கங் குவிமுகை அவிழ" (நற்.86:5-7)**

என்ற அடிகள் விளக்குகின்றன. பெண்கள் கழுத்தணியாகப் பொன்னில் வைரம் இழைத்து அணிந்துள்ளதை,

**"திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்**
**வயங்குகதிர் வயிரமொடு குறழ்ந்து பூண்சுடர் வர"**
**(பதிற்.16:15-16)**

என்றடிகள் உணர்த்துகின்றன. கையணிகளாகச் சங்கு, வெள்ளி வளையல்களைப் பெண்கள் அணிந்தனர் என்பதை,

**"நீர்த்திரள் கடுக்கு மாசில் வெள்ளிச்**
**சூர்ப்புறு கோல்வளை செறிந்த முன்கை" (அகநா.141:16-17)**

என்னும் அடிகள் விளம்புகின்றன. விரலணியாக இன்று மோதிரம் அணிகின்றோம். அன்றும் அணிந்துள்ளனர் என்பதை,

**"சிறுபட்டி; ஏதிலார்கை எம்மை எள்ளுபு நீதொட்ட**
**மோதிரம் பாவோ? யாம் காண்கு**
**அவற்றுள் நறாஇதழ் கண்டன்ன ஒவ்விரற்கு ஏற்பர்**
**சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்"**

**(கலித்.84:20-23)**

ஆகிய அடிகளில் காணலாம். சுறாமீன் வடிவில் மோதிரம் அமைந்திருந்ததைக் உணர்த்துகிறது.

**தச்சுத்தொழில்**

ஐவகை நிலத்தொழிலுக்குப் பயன்படும் கருவிகளை உருவாக்கும் தொழிலாளர்களில் தச்சரும் ஒருவர். அவரின் தொழில் தச்சுத்தொழில் எனப்படும். தற்பொழுது மரவேலைப் பார்க்கும் மர ஆசாரி எனப் பெயர் பெறுகின்றனர். இரும்புத்தொழில் செய்வோரும் தச்சுத்தொழில் செய்வோரும் நெருங்கியத் தொடர்புடையவர்கள் ஆவர். தச்சர் செய்யும் சில கருவிகளைக் கொண்டு இரும்புத்தொழில் நடைபெறுகிறது. இரும்புத்தொழில் செய்யும் கொல்லர்கள் செய்யும் கருவிகள் கொண்டு தச்சுத்தொழில் நடைபெறுகிறது. விசுவகர்மாக்கள் ஐவர் ஆவர். தச்சர், பொற்கொல்லர், இரும்புக்கொல்லர், கண்ணார வேலை செய்வோர், சிற்பம் செய்வோர் என அழைக்கப்படுவர்.

அவர்களில் ஒருவர் மரவேலை செய்யும் தச்சர் ஆவர். இவர்கள் யாவரும் ஆசாரி என்ற வகுப்பினைச் சேர்ந்தவர்கள். அவர்கள் செய்யும் தொழிலுக்கேற்ப தனித்தனிப் பிரிவாகப் பார்க்கப்படுகின்றனர். இவர்களில் தச்சரின் தொழிலும் இரும்புக் கொல்லரின் தொழிலும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவை. மரவேலைக்குப் பயன்படும் உளி போன்றவை இரும்புக் கொல்லரால் உருவாக்கப்படுகின்றன. இரும்புக் கொல்லர் உருவாக்கும் மண்வெட்டி, களைக்கொத்து, அறுவாள், சுத்தியல் போன்றவற்றிற்குக் கணையாக (பிடியாக) மரங்களால் ஆன கட்டைகள் தச்சரால் இடப்படுகின்றன. ஆகவே தச்சுத்தொழிலும் இரும்புத் தொழிலும் நெருங்கிய தொடர்புடையதாக அமைகின்றன. தச்சுத் தொழிலாளிகள் பண்டையக் காலத்தில் தேர் செய்வதில் வல்லவர்களாகக் காணப்பட்டனர். போரில் நான்கு படைகளில் ஒன்று தேர்ப்படை. அதன் தேவை காரணமாகவே தேர்கள் அதிகம் செய்யப்பட்டுள்ளன என்பதைக் காணமுடிகிறது. பழந்தமிழர் தேர் செய்வதில் வல்லவர்கள்.

**“வைகல் எண்தேர் செய்யும் தச்சன்” (புறநா.87)**

என்ற அடியானது ஒரேநாளில் எண் (எட்டு) தேர்களைச் செய்யும் தச்சர் எனக் குறிக்கிறது. இத்தச்சர்கள் ‘மரம் கொல் தச்சர்’ என அழைக்கப்பட்டனர். இதனை,

**“மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத்து அற்றை”** (புறநா.206:11-12)

என்ற அடிகள் விளக்குகின்றன. தச்சுத்தொழிலில் ஈடுபடும் தச்சர்களின் குழந்தைகள் மரத்திலான தேரை உருட்டினர் என்பதை,

**“தச்சர் சிறாஅர் நச்ச புனைந்த**
**ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்”** (பெரும்பாண்.246-249)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. தச்சர்களால் வீட்டு நிலைக்கால், மதில், கதவு, சாளரம், அரண்மாரிகள் போன்றவை செய்யப்படுகின்றன. நிலைக்கால் அரண்மனை, மதில் கதவுகள் தச்சர்களால் திறம்பட செய்யப்பட்டதை,

**“ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பில்**
**பருஇரும்பு பிணித்துச் செல்வரக் குரீஇ**
**துணைமாண் கதவம் பொருத்தி இணைமாண்டு**
**நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்**
**போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்**
**தாளொடு குயின்ற போரமை புணர்ப்பிற்**
**கைவல் கம்மியன் முடிக்கலிற் புரைதீர்ந்து**
**ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை”** (நெடுநல்.79-86)

என்கின்றடிகள் விளக்குகின்றன. அரண்மனையின் கோபுரவாயில்கள் ', கட்டடங்கள், எல்லாவற்றையும் தம்முள் ஒரு சேர துளைத்து, மதிலின் வாயிலில் அமைக்கப்பட்டுள்ள கதவுகளும், ஆணிகளும் பட்டங்களுமாகிய பருத்த இரும்புகளால் பிணிக்கப்பெற்றன. சாதிலிங்கக் குழம்பினால் செவ்வண்ணம் பூசப்பெற்றுத் தாழ்ப்பாளுடன் சேர்த்து இவ்விரு கதவுகளும் தம்முள் இணைந்துப் பொருந்தும்படி அமைக்கப்பட்டன.

இருகதவுகளுக்கும் மேல் உத்தரக்கட்டை அமைந்திருந்தது. அது சிறந்த மரத்தால் செய்யப்பெற்றது. குவளை போன்ற மலர் வடிவங்கள் அதில் பொறிக்கப்பட்டன. கதவுகளுக்குப் புதிய தடிகள் பொருத்தியிருந்தனர். அவற்றின் நடுவில் திருமகளின் உருவமும் பொறிக்கப்பட்டிருந்தது. கைத்தொழில் வல்ல தச்சனால் இடைவெளி தோன்றாமல், பல மரங்களைச் சேர்த்து முடிக்கி, மதிலின் வாயில் உருவாக்கப்பட்டது. அவ்வாயிலகள் நெய்பூசப்பட்டு வெண்சிறுகடுகினால் தூவப்பெற்று அழகுடையதாகக் காணப்பட்டதையும் உணர்த்துகின்றன.

இவ்வடிகளில் ‘கம்மியன்’ என்று வருவது தச்சரைக் குறிக்கிறது. ‘கம்மாளர்’ என்பதற்கு “கம்; அக்கசாலையர்; அறிவர்; அற்புதர்; ஓவர்; புலவர்; கண்ணாளர்; வித்தகர்; தச்சர்; தட்டார்”[31] என கழகத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது. மரங்களில் பொதுவாகச் செவ்வரக்குப் பூசுவது இயல்பு. மரம் பளபளப்பாகவும் மெருகுடனும் காணப்படவே அரக்குப் பூசப்படுகிறது. இவற்றையும் இப்பாடலடிகள் “செவ்வரக்குரீஇ” என விளம்புவதைக் காணமுடிகிறது. கொல்லிமலையில் கடவுள் தச்சனால் உருவாக்கப்பட்ட பாவை உள்ளது என்பதை,

**“செவ்வேர்ப் பலவின் பயன்கெழு கொல்லி**
**நிலைபெறு கடவுள் ஆக்கிய**
**பலர்புகழ் பாவை அன்னநின் நலனே”** (அகநா.209:16-17)

என்னும் அடியானது இயம்புகின்றது. சிறுபாணாற்றுப்படை நல்லியக்கோடன் அளிக்கும் பரிசில் பற்றிக் குறிப்பிடுகையில் தச்சனால் செய்யப்பட்ட தேரினைப் பாணர்களுக்குப் பரிசிலாக அளித்தான் என்பதனை,

**“திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புலம் அகற்றி**
**விறல்வேல் மன்னர் மன்எயில் முருக்கி**
**நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்**
**வாயவ தந்த வான்கேழ் நிதியமொடு**
**பருவ வான்மதி ஊர் கொண்டாங்குக்**
**கூர்உளி பொகுத வடுஆழ் நோன்குறட்டு**
**ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு**
**சிதர்பிணி அவிழ்ந்த தோற்றம் போல**
**உள் அரக்கு அறிந்த உருக்குறு போர்வைக்**
**கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி**
**ஊர்ந்துபெயர் பெற்ற எழில்நடைப் பாகரொடு**
**மாசெலவு ஒழிக்கும் மதனுடை நோன்தாள்**
**வாள்முகப் பாண்டில் வல்லனொடுதரீஇ”** (சிறுபாண்.246-260)

என்கின்றடிகள் இயம்புகின்றன. இவ்வடிகள் வலிமை பொருந்திய வெற்றியுடன் பகைவரைத் தம் நிலத்தைவிட்டு அகற்றி வெற்றியை உடைய வேலேந்திய முடிமன்னரின் அரண்களை அழித்துப் பொருள் விரும்பி வருவோர்க்கும் வறுமைத் துன்பத்தைப் போக்க வல்லவன் படைத்தலைவர்களால் தந்த மிகுந்த செல்வத்தோடு கூதிர் காலத்துத் தோன்றுகின்ற பால் போலும் ஒளிகொண்ட வட்டவடிவுடைய திங்களைப் போல பரந்திருந்தது.

தேர்ச்சக்கரக் குறட்டினைக் கூர்மையான உளியால் செதுக்கிய உருக்கள், ஆழ்ந்த ஆரங்களை அமைத்து அதைச்சுற்றிச் சூட்டினையுடைய உருளையைச் சேர்த்து முள் முருக்க மரம் மலர்ந்த தோற்றம் போன்றது. சாதிலிங்கம் வழித்த போர்வையினையும், தச்சர் தொழில் முற்றுப்பெற்ற பின்னர் ஏறிப்பார்த்து, நல்ல ஓட்டமுள்ள தேரோடு குதிரையின் வேகத்தைப் பின்னிடச்செய்யும் வனப்பும், வலிமையுமுடைய தாளினைக் கொண்ட ஒளியுடைத்தாகிய முகத்தினைக் கொண்ட வெள்ளைக் காளைகளையும், அதைச் செலுத்தும் பாகனொடு, யானை, குதிரை, அணிகலன்கள் தந்து அன்றே அனுப்புவான் என விளம்புகிறது. இவற்றில் தேர் செய்வதற்கு உளி பயன்பட்டதையும், தேரில் உருளை, ஆரம் போன்ற பகுதிகள் இருந்ததையும் அறியமுடிகிறது. குழந்தைகள் விளையாடும் சிறிய தேர்கள் பண்டைய தச்சர்களால் செய்யப்பட்டதை,

> **“தச்சன் செய்த சிறுமா வையம்**
> **ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும் கையில்**
> **ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல”** (குறுந்.61:1-3)

என்றடிகள் குறிப்பிடுகின்றன. தச்சனால் செய்யப்பட்ட சிறிய குதிரை பூட்டிய சிறிய தேரினை ஏறிச் செலுத்தி இன்பமடையாவிட்டாலும், சிறுவர்கள் அதனைக் கையால் இழுத்து இன்பம் கொள்வர் என உணர்த்துகின்றன. குழந்தைகள் பொம்மைக் குதிரைகள் போன்றவற்றைக் கொண்டு விளையாடுவர். பண்டைய தச்சர்களும் மரக்கட்டில் போன்றவற்றைச் செய்துள்ளனர். நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் கட்டில் செய்ததை,

> **“தசநான்கு எய்திய பணைமருள் நோன்தாள்**
> **இகல்மீக் கூறும் ஏந்து எழில் வரிநுதல்**
> **பொருதுஒழி நாகம் ஒழிஎயிறு அருகு எறிந்து**
> **சீரும் செம்மையும் ஒப்ப வல்லோன்**
> **கூர்உளிக் குயின்ற ஈர்இலை இடைஇடுபு**
> **தூங்கு இயல் மகளிர் வீங்குமுலை கடுப்ப**
> **புடைதிரண்டிருந்த குடத்த இடைதிரண்டு**
> **உள்ளி நோன் முதல் பொருந்தி அடி அமைத்து**
> **பேர் அளவு எய்திய பெரும்பெயர்ப் பாண்டில்”**
> **(நெடுநல்.113-123)**

என்றடிகள் புலப்படுத்துகின்றன. இவ்வடிகள் நாற்பது வயதான முரசு போன்ற வலிமையான கால்களையுடைய போரில் வல்ல உயர்ந்த அழகுடையதும் நெற்றியில் வரியையும் புள்ளிகளையும் உடைய யானை போரில் இறந்தபின்பு இயல்பாக இறந்த யானையின் தந்தங்களால் கட்டிலின் கால்கள் செய்யப்படுகின்றன.

அத்தந்தங்களில் இரு பக்கமும் கூர்மையான உளியால் தொழிலில் வல்லோனாகிய தச்சர் சிலை போன்ற வடிவங்களைச் செய்தான் என்கின்றன. கட்டிலின் இணைக்கக்கூடிய குடமானது சூல் முற்றிய மகளின் பாலுடைய பருத்த மார்பினை ஒத்திருந்தது போன்று காணப்பட்டது. கட்டிலின் கால்கள் உள்ளியின் முதல் போன்ற வடிவத்தில் காணப்பட்டன. கட்டிலின் அளவிலே பெரிய அளவிலான கட்டில் எனப் பெயர் பெற்றதாக அரசமாதேவியின் கட்டில் இருந்ததை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

தச்சரும் சிற்பம் செய்பவரைப்போன்று மரங்களில் உருவங்கள் செதுக்குவதில் வல்லவராய் இருந்தமை தெளிவாகிறது. பெரும்பாணாற்றுப்படை உப்பு விற்கச் செல்லும் உமணர் வண்டியினைப் பற்றி விளக்குகிறது. உப்பை மாட்டுவண்டிகளில் கொண்டு வந்து சிற்றூர்களில் விலைகூறி விற்பனைசெய்வர் அதற்கு ஈடாக நெல்லை பெற்றுச்செல்வர். உமணர் வண்டி எப்படிப்பட்டவை என்பதை,

**"கொழுஞ்சூட்டு அருந்திய திருந்துநிலை ஆரத்து,**
**முழவின் அன்ன முழுமர உருளி,**
**எழுஉப் புணர்ந்தன்ன பருஉக்கை, நோன்பார்,**
**மாரிக் குன்றம் மழைசுமந் தன்ன,**
**ஆரை வேய்ந்த அறைவாய் சகடம்" (பெரும்பாண்.56-50)**

என்னும் இப்பாடல் விளக்குகின்றது. உப்பு வணிகர் வண்டியின் சக்கரம் மிக உறுதியாகவும் சக்கரத்தின் விளிம்பில் வளைவு மரமும் இருந்தன. ஒரே மரத்தில் வண்டியின் குடம் செய்யப்பட்டுள்ளது. அது முழவு போன்று அமைப்புடையதாகவும் அதில் அச்சாணி செருகப்பட்டும் இருந்தது. அந்தக் குடத்திலிருந்து இரண்டு பக்கங்களிலும் நீண்ட மரங்கள் இருந்தன. இரண்டு மரங்களையும் நெடுகத்துளைத்துக் குறுக்கே ஏணிப்பழுப்போல

ஒரு மரத்தைக் கோத்துக் காட்டியுள்ளனர். அது நுகத்தடி ஆகும். வண்டி மலைபோன்று காட்சியளித்தன.

வண்டியின் மேல் வேயப்பட்ட தேர்த்தாளிபாய் கூந்தற்பனையால் முடைந்த பாய் மலை மீது மேகம் கிழித்தது போல் காணப்பட்டது. உமணர்கள் தாங்கள் வளர்த்த குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்து செய்த மணிமாலையை அணிவித்தனர். இந்த மணிமாலை மரத்தாலானது. என்பதை,

> **"நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்**
> **தறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத**
> **கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்**
> **செய்பூங் கண்ணி செவிமுத நிருத்தி**
> **............... வந்த ............ மந்தி" (சிறுபாண்.51-56)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. வாணிபத்திற்குப் பயன்பட்ட கப்பல்கள் மரக்கலங்கள் தச்சர்களால் செய்யப்பட்டதையும் பட்டினப்பாலை (173-175) மதுரைக்காஞ்சி (83-84) ஆகிய நூல்கள் உணர்த்துகின்றன.

**மட்கலத்தொழில்**

மட்கலத்தொழில் எனப்படும் குயவர் தொழில் பண்டையக் காலத்தில் சிறப்புற்றிருந்தது. மக்கள் தங்கள் பயன்பாட்டிற்குப் பயன்படுத்திய குழிசி, சாடி, கலன், கன்னல், தசும்பு, மண்டை போன்ற புலங்கு பொருட்கள் யாவும் மண்ணால் செய்யப்பட்டவை அலகுப் பொருட்களாகப் பூச்சாடி, சிலைகளின் வடிவங்கள், நிலை மணி போன்றவை செய்யப்படுகின்றன. தீச்சட்டி எடுத்தல் போன்ற நேத்திக்கடன்களில் கோயில்களில் பயன்பட்டு வருகின்றன.

தற்காலத்தில் மண்ணால் செய்யப்படும் பொருட்களாகக் குடிநீர் பானை, தயிர்க் குவளை, தேநீர்க் குவளை, பூத்தொட்டி, மலர்க்குவலை, தெய்வப் பொம்மைகள், சிலைகள், குதிரைகள், யானைகள், அகல்விளக்கு, சிற்பம் கலந்த பூச்சாடி, தண்ணீர்க் குவளை, உணவு தயாரிக்கும் பானை (கலன்), குழம்பு வைக்கும் ஆனைச்சட்டி, அடுப்பு, வீட்டு நிலைமணி என இக்காலத்திற்கேற்ப செய்து விற்பனை செய்கின்றனர்.

இத்தகைய சிறப்புமிக்க மட்பாண்டத்தொழில் வழி பண்டைய நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளங்கலாம். இந்நிலை பல நாடுகளில் வழக்கிலுள்ளன. இதனை, “மண்பாண்டத்தொழில் தொன்றுதொட்டு உலக நாடுகள் அனைத்திலும் நடைபெற்று வரும் தொழில். வேகவைத்த உணவு வேகவைக்காத உணவினும் சுவையானது என்பதை மனிதன் உணரத் தொடங்கிய காலமே மண்பாண்டங்களின் இன்றியமையாமையை உணர்ந்த காலம் எனலாம்.

இத்தொழில் மிகப்பழமையான தொழில். அடிசில் தொழிலுக்கு ஆதாரமான பானை வனையும் தொழில் உலகமெங்கிலும் நடைபெற்று வந்த உன்னதத் தொழில் என்பதை அகழாய்வுகளில் கிடைத்த பானை ஓடுகள் உறுதி செய்கின்றன.”[32] பண்டையோர் பயன்படுத்திய மட்பாண்டங்களின் வழிக் கால வரையரையை அறியப்படுகிறது. அம்மக்களின் பண்பாட்டுக் கூறுகளைத் தெரிந்துகொள்ளமுடிகிறது.

இதனை, “தொல்லியல் அகழாய்வில் கிடைக்கும் எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள் அனைத்தும் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டை வெளிப்படுத்தும் மண் அடுக்குகளில் கிடைக்கின்றன. ஓர் அகழாய்வில் அல்லது அகழாய்வுக் குழியில் பொதுவாக பல மண் அடுக்குகள் கிடைக்கும். இம்மண் அடுக்குகளில் கிடைக்கும் பண்பாட்டுக் கூறுகளின் அடிப்படையில் காலவரையறை செய்யப்படுகிறது.

ஒன்றுக்கு மேற்பட்ட மண்ணடுக்குகளுக்கு இடையே காணப்படும் பண்பாட்டுத் தரவுகளின் அடிப்படையிலும், அதன் அமைவிடம் ஆகியவற்றின் அடிப்படையிலும் காலம் கணிக்கப்படுகிறது”[33] என கா.ராஜன் குறிப்பிடுகிறார். மட்பாண்டங்கள் சக்கரத்தின்வழி செய்யப்படுகின்றன. சக்கரம் கொண்டு மண்பாண்டம் செய்யப்படுவதையும், அவ்வாறு செய்யப்படும் மட்பாண்டம் சூளையில் வைத்துச் சுடப்படும் என்பதனையும்,

**“கலம் செய் கோவே! கலம்செய் கோவே!**
**இருள் திணிந்தன்ன குரூஉத் திரள் பரூஉப் புகை**
**அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை,**
**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே!**

……………………………………

……………………………………

**கொடி நுடங்கு யானை நெடுமாவளவன்**
**தேவர் உலகம் எய்தினன் ஆதலின்,**
**அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி**
**வனைதல் வேட்டனை ஆயின், எனையதூஉம்**
**இரு நிலம் திகிரியா, பெருமலை**
**மண்ணா, வனைதல் ஒல்லுமோ, நினக்கே?''**

(புறநா.228:1-4,10-15)

என்றடிகள் சுட்டுகின்றன. இவ்வடிகள் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்துவிட அவனை அடக்கம் செய்வதற்குத் தாழியைச் செய்யுமாறு ஐயூர் முடவனார் பாடுவதாக அமைகிறது.

இவ்வடிகளில் மண்பாண்டம் செய்யும் குயவனை விளிப்பதாய், மண்ணாற் கலங்கள் செய்யும் குயவனே! மண்ணாற் கலங்களைச் செய்யும் குயவனே! இருள் திரண்டு வந்து ஓரிடத்தே நின்றதைப் போல நிறம் கொண்ட அடர்ந்த பெரும்புகை அகன்ற பெரிய ஆகாயத்தில் சென்று தங்கும் சூளையை உடைய இடம் அகன்ற பழைய ஊரில் கலங்களைச் செய்கின்ற வேட்கோவே! கொடிகள் அசைகின்ற யானையினை உடைய மிகப்பெருமை வாய்ந்த சோழன் தேவரிக்குரிய விண்ணுலகத்தை அடைந்தான்.

அத்தகையவனுக்கு அடக்கம் செய்வதற்குரியப் பெரிய தாழியை நீ செய்ய விரும்பினால் இந்தப் பெரிய நிலவட்டத்தைச் சக்கரமாகவும் மேருமலையை மண்ணாகவும் கொண்டு செய்ய முடியுமோ? உன்னால் செய்ய இயலாதல்லவா என சோழனின் புகழ் அத்தகைய பெரியது.

அத்தகைய புகழுக்கு நிகராகத் தாழி செய்ய இயலாது என புகழை உயர்த்துக் கூறுவதாக அமைகிறது. இப்பாடல் 'அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை' என சூளைப்பற்றியும், 'இரு நிலம் திகிரியா' என்றடி சக்கரத்தையும் சுட்டிச் செல்கிறது. குயவர்களை, 'கலம்செய் கோவே' என விளிப்பதையும் உணர்த்துகிறது.

திகிரி என்பதற்கு "உருளை; சக்கரப்படை; திரிகை; தண்டசக்கரம்; தேர்; பண்டி; மலை; மூங்கில்; வட்டம்; சூரியன்; அரசனுடைய ஆணை;

வட்ட வடிவம்"[34] என கழகத் தமிழகராதி விளக்கம் அளிக்கிறது. கௌரா தமிழ் அகராதி "உருளை! தேர்; பண்டி; மலை; மூங்கில் வட்டம்; சூரியன்; வட்டவடிவம்"[35] என பொருள் தருகிறது.

குயவர்களால் இறந்தவர்களை வைத்து அடக்கம் செய்யும் முதுமக்கள் 'தாழி' செய்யப்பட்டதைக் காணமுடிகிறது. இதேபோன்று 'தாழி' பற்றி,

**"கவிசெந்தாழிக் குவிபுறத் திருந்த" (புறம்.238:1)**

**"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி**
**அகலிதாக வனைமோ" (புறம்.256:5-6)**

போன்ற அடிகள் விளக்குகின்றன. 'ஈமத்தாழி' என்ற சொல் இறந்தவருக்குச் செய்யும தாழியை எனக் குறிக்கும். ஈமக்காரியம் போன்ற சொல்லாடல் இறந்தவர்க்குச் செய்யும் சடங்குகளைக் குறிப்பதை நம்மால் காணமுடிகிறது. அகம்.369, 165 ஆவது பாடல்களும் தாழி பற்றிக் குறிப்பிடுகின்றன.

**"தாழியும் மலர்பல அணியா" (அகம்.364:6)**

**"தாழிக் குவளை வாடுமலர் சூட்டி" (அகம்.165:11)**

என்ற அடிகள் தாழியில் மலர்கள் வளர்க்கப்பட்டதை இயம்புகின்றன. தாழியில் பருத்தியும் வளர்த்தனர் என்பதை,

**"தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்தி" (அகம்.129:7)**

என்னும் அடி விளக்குகிறது. மண்பாண்டங்கள் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பதை,

**"வேள்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த**
**பசுமண் குரூஉத்திரள் போல அவன்**
**கொண்ட குடுமித்து இத்தண்பனை நாடு" (புறநா.32:8-9)**

இவ்வடிகள் சுட்டுகின்றன. சோழன் நலங்கிள்ளி தன் நாட்டின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் ஏற்ப தானே முடிவெடுப்பான் என்பதைக் கூறவிளையும் புலவரானவர் உவமையின் வழியாகக் குயவரின் சிறுவர்கள் மண்திரளைச் சக்கரத்தில் இட்டுத் தாங்கள் பெறவேண்டிய கலத்தின் வடிவத்திற்கேற்பச் சக்கரத்தைச் சுழற்றி மட்கலன்களைச் செய்வது போன்று என உவமிக்கிறார்.

நாட்டின் தேவைக்கு ஏற்றார் போல் செயல்படுவான் என்பதைக் காட்டும் முகமாய் குயவச் சிறுவர்கள் மண் திறளைக் கொண்டு சக்கரத்தின் வழியாகத் தமக்குத் தேவையான கலன்களைச் செய்வர் என்பது தெளிவாகிறது. குயவர்குடியில் பிறந்த சிறுவர்களும் தம் குலத்தொழிலைத் தெரிந்தவர்களாகக் காணப்படுகின்றனர் என்பதையும் அறியமுடிகிறது.

**மட்பாண்டம் சுடுதல்**

பச்சை மண்ணில் செய்த மட்பாண்டங்களைத் திண்மையானதாகவும் வலிமையானதாகவும் மாற்றுவதற்குச் சூளையில் வைத்துச் சுடுவர். சுடுவதால் அப்பானையானது உடையா தன்மையைப் பெறுகிறது. மட்பாண்டங்கள் சுடுவதற்குச் சூளைகளை அமைத்து அவற்றில் சுட்டுள்ளனர்.

**"இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்**
**கலஞ்சுடு புகையில் தோன்றும்"** (அகநா.308:5-6)

என்னும் அடிகள் சூளை மிகப் பெரியதாகவும் அச்சூளைகளில் எழுந்த புகையானது மலைகள் மறையுமாறு வெண்மழை பொழிந்தைப் போல் இருந்ததையும் உவமையாகச் சுட்டுகின்றனர். மற்றொரு பாடல்,

**"இருள்திணிந்து அன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை**
**அகல்இடு விசும்பின் ஊன்றும் சூளை"** (புறநா.228:2-3)

என வானத்தில் இருள் திரண்டு நின்றால் போலத் திரண்ட கரிய புகையினை எழுப்பக்கூடிய பெரிய சூளை என இயம்புகின்றது.

**மட்பாண்டப் பொருட்கள்**

மண்ணால் பல வடிவங்களில் மட்பாண்டங்கள் செய்யப்படுகின்றன. "அகழ்வாராய்ச்சிகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட மட்பாண்ட வகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன"[36] என த.சாமிநாதன் குறிப்பிடுகிறார். இன்றும் மட்பாண்டங்கள் இன்றையக் காலத்திற்கு ஏற்ப பல்வேறு வடிவங்களில் செய்யப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் மட்பாண்டப் பொருள்களை முல்லைநில ஆய்ச்சியர் மோர் விற்கச் செல்லும்போது மோரைக் 'குழிசி' என்ற கலனில் வைத்துச் சென்றதை,

**"உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து**
**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ" (பெரும்பாண்.158-159)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. உறைந்த தயிரைக் கடைந்து அதிலிருந்து வந்த வெண்ணெயை எடுத்துத் தனியாக வைத்துவிட்டு மோரை அதற்குரிய புள்ளிகளுடைய மோர் பானையில் தலையில் சும்மாட்டின் மீது வைத்து எழுத்துச் செல்வதைக் குறிப்பிடுகிறது. மோர் பானை 'குழிசி' என வழங்கப்படுகிறது. பழங்காலத்தில் மண்பானையில் சோறு வடிப்பர். இதனை,

**"பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்ப,**
**சுழல்மரம் சொலித்த களகு அலை வெண்காழ்**
**தொடிமாண் உலக்கை ஊழின் போக்கி,**
**உரல்முகம் காட்டிய சுரைநிறை கொள்ளை**
**ஆங்கண் இடுஞ்சுனை நீரொடு முகவா,**
**களிபடு குழிசிக் கல் அடுப்பு ஏற்றி" (அகநா.391:9-14)**

எனும் இப்பாடலடிகளில் அறியலாம். வரகினைத் திரிகையில் திரிகி அதை முறம் கொண்டு புடைத்து அந்த அரிசியை மண்ணால் செய்யப்பட்ட பானையில் இட்டுச் சுனை நீரை ஊற்றி, கற்களை அடுக்கி அடுப்பாக்கி உலை ஊற்றியுள்ள சோறு சமைப்பதற்கும் 'குழிசி' என்ற கலன் பயன்பட்டமையைக் காண்கிறோம்.

இன்றைக்கும் ஒரு சிலர் மண்பானையில் சோறு சமைப்பர். அச்சோறு வாசம் மிகுந்தனவாக இருக்கும். நாட்டுப்புறங்களில் தைப்பொங்கல், மாரியம்மன் பொங்கல் வைப்பதற்கு இன்றும் மண்ணால் ஆன பானை பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. மான் இறச்சியைக் குழிசியில் குறவர் சமைத்தனர் என்பதை,

**"மான்தடி புழுக்கிய புலவு நாறு குழிசி" (புறநா.168:9)**

என்றடியானது இயம்பும். சமைத்தலுக்குக் குழிசிப்பயன்பட்டதை, 'ஆடுறுகுழிசி' (371:6), அட்டகுழிசி (237:7) போன்ற சொல்லாடல்கள் விளக்குகின்றன. ஆய்ச்சியர் பால் காய்ச்சுவதால் ஏற்படும் முடைநாற்றம் மாறுவதற்கு விழாம்பழத்தைப் பால் காய்ச்சும் பானையில் போட்டு வைத்தனர் என்பதை,

**“விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசி”   (நற்.12:1)**

என்றடிகள் சுட்டுகின்றன. புறநானூற்றுப் (343:4) பாடலும் குழிசிப் பற்றி விளக்குகிறது. அகநானூற்றின் (77:6-7) பாடலானது குடவோலை முறையை விளக்குகிறது. ஊர்த் தலைவரைத் தேர்தெடுக்க குடவோலை முறையைக் கொண்டிருந்தனர். பழந்தமிழர் குடவோலைமுறை என்பது கயிற்றால் கட்டி முத்திரையிட்ட இடத்தில் பெயர் எழுதிய ஓலை நறுக்குகளைப் போடவேண்டும். அக்குடத்தின் முத்திரையை நீக்கி, குடத்திலிருந்து ஓலையை எடுப்பர். இதன்வழி தலைவரைத் தேர்ந்து எடுப்பர். ஓலை நறுக்குகளைக் காப்பதற்கும் இக்குழிசியானது பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இவற்றை,

**“குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்க்**
**கயிறுபிணிக் குழிசி ஓலைகொண்மார்”   (அகநா.77:6-7)**

என்றடிகள் விளக்குகின்றன.

**குடம்**

மகளிர் தண்ணீர் எடுப்பதற்குக் குடங்களைப் பயன்படுத்தியுள்ளனர். அன்றையக் காலத்தில் ஊரணி, குளங்களில் மண்பானையில் நீர் எடுத்து வந்து தண்ணியைத் தெளிவுபடுத்த தேத்தும் விதைக் கொண்டு தேத்துவர். இதற்கு ‘தேத்தாங்கொட்டை’ என்ற பெயரும் உண்டு. மண்ணால் ஆகிய பானையில் தேத்துவதன் வழி நீர் சுத்தம் செய்யப்படுகிறது. நீரிலுள்ள கசடுகள் நீங்கி உரைந்து அடியில் போய் படிந்துவிடும். மேலே தூய தெளிந்த நீர் காணப்படும். பண்டையோர் நீர் எடுக்க மண்ணால் ஆன குடத்தைப் பயன்படுத்தினர் என்பதை,

**“.......................... மகளிர்**
**நுண்செயல் அம்குடம் இரீஇப்”   (அகம்.336:7-8)**

என்றடியானது சுட்டுகின்றது. நுண்ணிய வேலைப்பாடு நிரைந்த குடத்தைப் பெண்கள் நீர் எடுத்துவரப் பயன்படுத்தினர் என்பதை உணர்த்துகிறது. ஆநிரை மேய்க்கச் செல்லும் இடையர் தனக்குத் தேவைப்படும் தீக்கடைக்கோல், தோற்படுக்கை, பானை போன்றவற்றைத் தன் தோளில் உறியில் எடுத்துச் சென்றனர் என்பதை,

**“கடைகோல் சிறுதீ அடைய மாட்டித்**
**திண்கால் உறியன் பானையன அதளன்”   (அகம்,274:4-5)**

என்னுமடிகள் விளம்புகின்றன. பழந்தமிழர் தானியங்களைச் சேகரித்து வைப்பதற்கு ‘நெற்கூடு’ என்றழைக்கப்படும் நெற்கூட்டினைப் பயன்படுத்தினர். இது மண்ணால் செய்யப்பட்டதாகும். ‘நெற்கூடு’, ‘குதிறு’ என்றும் சுட்டபெறும். வழக்கில் சுலவடை ஒன்று சொல்வது வழக்கம். மறைக்கின்ற பொருளைத் தாமே காட்டிக் கொடுப்பது போன்றே கூறுவதாய்,

**“அப்பன் குதிறுக்குள்ள இல்ல”**

எனக் குறிப்பிடுவர். குதிறு என்பது தானியங்கள் சேமித்து வைக்கும் பொருள் ஆகும்.

**“ஏணி எய்தா நீர்நெடு மார்பின்**
**முகடு துடித்தடுக்கிய பழம்பல் உணவின்**
**குமரிமூத்த கூடோங்கு நல்லில்” (பெரும்பாண்.245-247)**

இதில் ஏணியால் எட்ட முடியாத அளவு உயர்ந்த நெற்குதிரில் பலவகை நெல்லையும் போட்டு வைத்தள்ளனர், அந்நெற்கூடு ‘குமரிமூத்த கூடு’ என்றமையால் நெற்கூடானது ஒரே மாதிரியாகவும், அவை பலநாள் பயன்பட்டு வருவதனால் ‘குமரிமூத்த கூடு’ எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்பதையும் தெளியலாம். நெற்கூடுகள் காணப்படும் வளமிக்க குடிகள் காணப்பட்டதை,

**“கூடுகெழீஇயகுடி” (பொருந.182)**

நெற்கூடுகள் நிறைந்த நகர் என்பதை,

**“கூடு விளங்கு வியனகர்” (புறநா.148:4)**

என்றடியானது விளக்கும். நெற்கூடுகள் உயரத்திலும் அகலத்திலும் பெரியனவாக இருக்கும். அதன் நிழலில் எருமைக் கன்றுகள் தூங்கும் என்பதை,

**“மோட்டெருமை முழக்குழவி**
**கூட்டுநிழல் துயில்வதியும்” (பட்.14-15)**

என்கின்ற அடிகள் உணர்த்துகின்றன. ‘தசும்பு’ என்ற மட்பாண்டக் கலன் ஆய்ச்சியர் பயன்படுத்திய தயிர் பானையைக் குறிக்கின்றது.

**“…………………… ஆய்மகள்**
**தயிர்கொடு வந்த தசும்பு நிறைய**
**ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்**

**குளக்கீழ் விளைந்த களக்கொல் வெண்ணெல்**
**முகந்தனர் .....................'' (புறநா.33:2-5)**

இவ்வடிகள் ஆயர்குலப் பெண் தயிர் கொண்டு வந்து விற்று, அதற்கு ஈடாக அவள் தயிர் கொண்டு வந்த 'தசும்பு' என்ற கலன் நிறைய வெண்ணெல்லைப் பெற்றுச் சென்றதைப் புலப்படுத்துகின்றன. 'திசும்பாவை' மதுக்குடமாகவும் மதுவைச் சேமிக்கும் குடமாகவும் புலங்கப்பட்டுள்ளது. இதனைப் புறம்.239:16, 377:17-20 போன்ற அடிகள் விளம்புகின்றன. மலைபடுகடாம்,

**''வளம்செய் வினைஞர் வல்சிநல்கத்**
**துளங்கு தசும்பு ஆக்கிய பசும்பொதித் தேறல்''**
**(மலைபடு.463-465)**

என்ற அடிகளின்வழி அசைகின்ற மிடாக்களில் உள்ள நெல்முளையால் ஆன தேறல் என்கிறது. இத்தொடர் அறிவியல் சார்ந்த ஒரு செய்தியையும் குறிப்பால் உணர்த்தும். ''மாவுப்பொருள், சர்க்கரை, பழச்சாறு ஆகியவற்றைப் புளிக்கவைத்துக் கள், தேறல் போன்ற மதுவகைகளைத் தயாரிக்க வேண்டும். இந்த வேதிமாற்றத்தை 'நொதித்தல்' Fermentation) என்பர்.

நொதித்தல் என்னும் இவ்வேதிமாற்றம் காற்றுப்புகாக் கலத்தில் நிகழும். இவ்வேதிமாற்றத்தின் விளைபொருள்கள் தேறலும், கார்பன்-டை-ஆக்ஸைடு வாயுவும் ஆகும். இவ்வேதிவினை மெதுவாகவும், தெடர்ந்தும் நடைபெறும். தொடர்ந்து கார்பன்-டை-ஆக்ஸைடு உண்டாகவே அதன் அழுத்தம் மிகும். மூடிய கலம் (தசும்பு) என்பதால் அழுத்தம் காரணமாகக் குடம் ஆடும்''[37] எனக் குறிப்பிடுகிறார் த.சாமிநாதன். குறுந்தொகைப்பாடல் ஒன்று சேமச்செப்பு என்ற மட்பாண்டம் பற்றி,

**''ஆசுஇல் தெருவின் ஆசுஇல் வியன்கடை**
**செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது**
**ஓர்இல் பிச்சை ஆரமாந்தி**
**அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்**
**சேமச் செப்பில் பெறீ இயரோ, நீயே**
**மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை**
**எக்கால் வருவது என்றி;**
**அக்கால் வருவர், எம் காதலோரே'' (277)**

எனக் குறிப்பிடுகின்றது. இப்பாடலாயானது மின்னலைப் போன்ற இடையினையுடைய தலைவி நடுங்குதற்குக் காரணமாக, மழைபெய்து முடியும் வாடைக்காலம் எப்பொழுது வரும், அப்பொழுது எம் காதல் வருவர் என்று நீ கூறாநின்றாய் என விளக்குகின்றனர்.

பொய், கொலை, களவு, கள், காமமாகிய குற்றங்கள் கடிந்தார் உறையும் தெருவில், நாயில்லாத அகன்ற வாயிலில் செந்நெல் சோற்றுத்திரளை, நரை எருமையின் வெண்ணெயோடு, எட்டு இல்லங்களில் சென்று,கவளம் பிச்சையாகப் பெறாமல், எம்முடைய ஒருமனைக் கண்ணே, அப்பிச்சை முழுவதும், உயிர் உடலோடு பொருந்தியிருப்பதற்காக உண்டு, பனிக்காலத்திற்கு ஏற்ற, விரும்பத்தக்க வெப்பத்தோடு கூடிய மெல்லிய நீரை, மூடியுடன் கூடிய காப்பினையுடைய கமண்டலத்தில் பெற்று வாழ்வாயாக என விளிப்பதாக அமைந்துள்ளது. ‘சேமச்செப்பு’ என்பது வெப்பத்தை வெளியிடாமல் வைத்திருக்கும் ஒரு கலன் என்பதை அறியமுமடிகிறது.

இச்சேமச் செப்பினைப் பற்றி, “இச்சேமச்செப்பு Thermos Flash-ஐ ஒக்கும். Thermos flash எனப்படும் இக்கலன் அமைக்கப்பட்டிருக்கும் அறிவியல் அடிப்படையை அறிந்து கொள்வது பொருத்தமுடைத்து.

A vacuum flask or Thermos flash is designed to prevent heat loss by conduction convection and radiation. There is vacuum between the walls of the confainer to shop heat flowing through the walls by conduction and convection. The mercury plated silvery white inner walls of the container reflect the heat rays back in to the container and thus heat loss by radiation is also prevented”[38] என்கின்றனர்.

வெப்பம், கடத்தல், சலனம், கதிர்வீச்சு ஆகியவற்றால் வெளியேறும் என்னும் கோட்பாடுகளைக் கருத்தில் கொண்டு அவற்றைத் தக்கமுறைகளால் தடுத்து அமைக்கப்பட்டது. இக்காலத்து நாம் பயன்படுத்தும் ‘தெர்மாசுகுடுவை’ எனக் குறிப்பிடுகிறார் த.சாமிநாதன்.

**கைத்தொழில்**

''கைத்திறமையாலோ, சிறுகருவிகளைப் பயன்படுத்தியோ செய்யப்படும் தொழில்''[39] கைத்தொழில் எனப்படும் என தற்காலத் தமிழகராதி குறிப்பிடுகிறது.

''உழைத்து தொழில் செய்து பொருளை ஆக்கும் முயற்சிகள் கைத்தொழில்கள் எனப்படுகின்றன''[40] எனக் கலைக்களஞ்சியம் எடுத்தியம்புகிறது.

''வரலாறு முழுவதிலும் மனித குலம் சிரு'டித்துளை பொருளாய்ச் செல்வத்தின் தோன்றுகால் உழைப்பே, அவனது மூளை மட்டுமின்றி கையுங்கூட உழைப்பின் மூலம் மிகச் சிக்கலான செயல்களைச் செய்யுந்திறன் வாய்ந்த, துல்லியமான உறுப்பாக அவனது கரங்கள் உருப்பெற்றுள்ளன''[41] என கைகளின் அவசியத்தை கியோர்க்கு விஹானஸவ் எடுத்துரைக்கிறார்.

சங்ககால மக்கள் எண்ணற்றத் தொழில் திறன் கொண்டிருந்தனர். அதில் ஒன்று ஓலைத்தொழில் ஆகும். அம்மக்கள் பனை, தென்னைமர ஓலைகளைக் கொண்டு அன்றாடத் தேவைக்கான பொருள்களைச் செய்துள்ளனர். பொருள்களை எடுத்துச் செல்லப் பயன்படும் கூடை, உறங்குவதற்கு உபயோகிக்கும் பாய்கள், வெயில், மழை இவற்றினின்றும் பாதுகாப்புத் தரும் பனங்குடைகள் போன்றவை செய்ததற்கான சான்றுகள் கிடைக்கின்றன. மழையிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள பண்டையத் தமிழர்கள் பயன்படுத்திய குடை ஓலையால் செய்யப்பட்டுள்ளதை,

**''உறைப்புழி ஓலை போல'' (அகநா.290-7)**

என்ற அடி விளக்குகிறது. தலையில் அணியும் ஓலைத்தொப்பியும் செய்யப்பட்டதை,

**''கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்'' (அகநா.194:7)**

எனச் சுட்டுகிறது. ஓலைகளைக் கொண்டு அக்கால மக்கள் பலவிதமான கூடைகள் செய்தனர். அவை வட்டில், புட்டில், குடை என பெயர் பெற்றன. அவற்றை,

**"வராஅல் சொரிந்த வட்டி"** **(ஐங்.48:2)**

என்ற அடியும்,

**"விதைக்குறு வட்டி"** **(குறுந்.155:2)**

என்னும் அடியும்,

**"சோறு பொதி வெண்குடை"** **(அகநா.121:12)**

என்னும் அடியும் விளக்குகின்றன.

இன்றும் பனை ஓலையால் செய்யப்பட்ட 'பட்டை' என்ற பொருளில் நீர், பதனீர் போன்றவற்றைப் பருகுகின்றனர். இதனைப் 'பட்டைப் பிடித்தல்' என்று சொல்லுவர். கூட்டாஞ்சோறு வழங்கும் இடங்களில் குழந்தைகளும் பயன்படுத்துவதைச் சிற்றூர்களில் காணமுடியும். உண்கலமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சுலகு-சொலகு என்று அழைக்கப்படும் முறமானது ஓலையால் செய்யப்பட்டதாகும். முறத்தின் வடிவத்தை,

**"முறஞ்செவி வாரணம்"** **(புறநா.339:13)**

கலித்தொகை (42:2) என்ற பாடலில் காணமுடிகின்றது. முறமானது யானையின் காதைப் போன்றது என உவமிக்கப்பட்டுள்ளது. சங்க காலத்தில் இடையர் ஓலைப்பாயைப் பயன்படுத்தினர் என்பதை,

**"பறிப்புற இடையன்"** **(அகநா.94:4)**

என்றடி விளக்குகிறது. நற்றிணை 142:4ஆம் பாடலும் இதனைச் சுட்டுகின்றது.

**தொகுப்புரை**

- ஐவகைநிலங்களின் முதன்மைத் தொழில்களுக்குத் துணையாக அமைந்தவை கொல்லர், தச்சர், மட்கலத்தொழில்கள் போன்றவை என்பதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

- கொல்லர் தொழில் இரும்புத்தொழில், பொன் தொழில் என இருநிலைகளில இருந்ததை அறியமுடிகிறது.

- இரும்பானது பழங்காலத்தில் பெரிதும் பயன்பட்டது என்பதை இரும்பாலான கருவிகள் தெளிவுப்படுத்துகின்றன.

- இரும்பு ‘பொன்’ என்ற பெயரிலும் வழங்கப்பட்டதை அறியமுடிகிறது.
- கொல்லர், கொல்லன், பொற்கொல்லன், தச்சன் போன்ற தொழிலாளர்கள் இருந்துள்ளனர்.
- வேல்வடித்துக் கொடுப்பது கொல்லர்க்குக் கடமை என்பதன்வழி போர்க்கருவிகள் கொல்லர்களால் செய்யப்பட்டமை புலப்படுகிறது.
- கருங்கைக் கொல்லன், கருங்கைவினைஞர் எனவும் வழங்கப்பட்டதை அறியமுடிகிறது.
- கொல்லர்கள் உலைக்களம் மூலம் கருவிகள் செய்தனர் என்பதும் பெறப்படுகிறது.
- கொல்லர் உலையில் துருத்தி, குறடு, உலைமூக்கு, சம்மட்டி, உலைக்கல், அரம், சுட்டுக்கோல் போன்றவை இரும்புத்தொழில் கருவிகளாகப் பயன்பட்டதைத் காணமுடிகிறது.
- கொல்லர்களின் இருப்பிடம் ஏழ் ஊர்களுக்கு ஒன்று என்பதையும் அவர்களின் இன்றியமையாமையும் இலக்கியங்கள் உணர்த்துகின்றன.
- கொல்லர்கள் வில், வேல், வாள், ஈட்டி, கேடயம், அம்பு, குயம், கத்தரி, யானை, அங்குசம், கவைமுட்கருவி செய்தளித்தமையைக் காணமுடிகிறது.
- துருத்தியானது தோலால் ஆன கருவி என்பதை அறியமுடிகிறது.
- பொன் தொழிலின் மேம்பாட்டையும் வேலைப்பாடையும் சங்க இலக்கியம் எடுத்தியம்புகிறது.
- பொன் தொழிலில் ‘உரைக்கல்’ என்ற கருவி பயன்பட்டதைக் காணமுடிகிறது.
- பண்டையோர் குழை, தொடி, சங்கு, வளை, கடகம், ஆரம், கிண்கிணி, அரைஞான் போன்ற அணிகலன்களைப் பயன்பத்தியுள்ளனர்.

- ❖ பொன், பொலம் என்ற பெயரில் வருவதைக் காணமுடிகிறது.
- ❖ உரைக்கல்லானது ‘கட்டளைக்கல்’ எனவும் வழங்கப்பட்டதை அறியமுடிகிறது.
- ❖ இரும்புத்தொழிலின் தேவையைப் போன்றே தச்சுத் தொழிலின் தேவையும் மக்கள் மத்தியில் பெரும்பங்கு வகித்தமையை அறியமுடிந்தது.
- ❖ தச்சுத்தொழிலில் உளி போன்ற கருவிகள் பயன்பட்டதை விளக்குகிறது.
- ❖ தச்சர்களால், தேர், வண்டி, மரக்கலம், சக்கரம் போன்றவை செய்து தரப்பட்டன.
- ❖ தச்சர் கட்டில், சாளரம் போன்றனவும் செய்தளித்துள்ள ‘கம்மியன்’ என்ற சொல்லாடல் பொன் செய்பவரையும், தச்சரையும் குறிக்கின்றது.
- ❖ பண்டைய நாகரிகத்தையும் கால வரையறையும் உணர்த்தும் மட்பாண்டத் தொழில் பற்றியும் காணமுடிந்தது.
- ❖ மண்ணால் புலங்கு பொருட்களான குடம், குழிசி, தயிர் சாடி, தசும்பு போன்றவை செய்யப் பெற்றமை விளங்குகிறது.
- ❖ மட்பாண்டம் செய்வோர் ‘கலம்செய்கோவே’, ‘வேட்காவே’ என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளனர்.
- ❖ மண்ணால் ஈமத்தாழி எனப்படும் முதுமக்கள் தாழியும் செய்யப்பட்டதைக் காணமுடிகிறது.
- ❖ பச்சை மட்பாண்டப் பொருட்கள் சூளையில் வைத்துச் சுடப்பட்டதையும் அறியமுடிகிறது.
- ❖ இன்றைக்கும் மரபுத் தொடர்ச்சியாக மண்ணால் குடம், தயிர் சாடி, தேனீர்குவளை, துளசிமாடம், குதிரை, யானை, தெய்வங்களின் பொம்மைகள், சாப்பாட்டுத்தட்டு, நீர்க்குவளை, மலர்குவலை, கண்ணேறு பொம்மை, வீட்டு நிலைமாட மணி, அடுப்பு, பூந்தொட்டி போன்ற புலங்குபொருட்களும் செய்யப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.555.
2. மேலது., ப.555.
3. மேலது., ப.555.
4. மேலது., ப.399.
5. ஆசிரியர் குழாம், தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி, ப.390.
6. மேலது., ப.390.
7. மேலது., ப.390.
8. வே.சா.அருள்ராஜ் (நூ.ஆ.), பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், ப.48.
9. மேலது., ப.154.
10. கழகப் புலவர்கள், கழகத்தமிழ் அகராதி, ப.328.
11. மேலது., ப.559.
12. சி.டபில்யூ.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.114.
13. வே.சா.அருள்ராஜ் (நூ.ஆ.), பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், ப.97.
14. இளங்கோவடிகள் (நூ.ஆ.), சிலப்பதிகாரம், அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும், ப.125.
15. மேலது., ப.458.
16. சி.டபில்யூ.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.49.
17. வே.சா.அருள்ராஜ் (நூ.ஆ.), பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், ப.101.
18. எஸ்.கௌமரீஸ்மரி (தொ.ஆ.), பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும், ப.116.
19. சி.டபில்யூ.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.935.
20. மேலது., 49.
21. த.சாமிநாதன் (நூ.ஆ.), சங்ககாலத் தொழில் நுட்பம், ப.83.
22. மேலது., ப.107.
23. மேலது., பக்.105-106.
24. கழகப் புலவர்கள், கழகத் தமிழகராதி, ப.282.
25. த.சாமிநாதன் (நூ.ஆ.), சங்ககாலத் தொழில்நுட்பம், ப.47.

26. கா.ராராஜன் (நூ.ஆ.), தொல்லியல் நோக்கில் சங்ககாலம், ப.60.

27. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.539.

28. ப.ஆ.எஸ்.கௌமாரீஸ்வரி, கௌரா தமிழ்அகராதி, ப.413.

29. த.சாமிநாதன் (நூ.ஆ.), சங்ககாலத் தொழில்நுட்பம், ப.50.

30. மேலது., பக்.55-56.

31. மேலது., ப.57.

## இயல்-4

## கலையியல் தொழிற்சார் கருவிகள்

சங்க காலத்தில் நில அடிப்படையில் நிலத்தின் தன்மைக்கேற்ப தொழில்கள் நடந்தேரியுள்ளன. இத்தொழில்கள் எவ்வாறு வளர்ச்சியடைந்தன, அவற்றிற்குப் பயன்படுத்தப்பட்ட கருவிகள் யாவை என்பன பற்றிக் கண்டறிவது தேவையாகின்றது. சங்க கால மக்கள் உடல் உழைப்பின் பின் ஓய்வு நேரங்களில் மனமகிழ்ச்சி, புத்துணர்ச்சி, போலச் செய்தல், திறன் வெளிப்பாடு போன்ற காரணங்களால் கலைகளில் ஈடுபாடு கொண்டு கலைகள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். கலையியல் சார்ந்த தொழில்களும் நடந்தேரியுள்ளதைச் சங்க இலக்கியங்கள் விளம்புகின்றன. இக்கலைகள் இசை, நடனம், ஓவியம், கட்டடம், மருத்துவம், சமையல் போன்றவைகளாகும். இவை சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**கலைகள் விளக்கம்**

கலை என்பதற்கு, “அரைப்பட்டிகை; ஆண்மான்; ஆண்முரசு; எட்டுவிநாடி அல்லது முப்பது காட்டை கொண்ட ஒரு கால நுட்பம்; ஒரு பலகையில் அறுபதில் ஒன்று; கலையென்னேவல்; கல்வி; காஞ்சிமரம்; குதிரைக்கலனை; சந்திரன்; பங்கு; கவ்வு; சீலை; சுறாமீன்; மூச்சின்பகுதி; நூல்; ஒளி; பேயோட்டம்; மகரமீன்; மகரராசி; மரக்கொம்பு; வண்ணங்களின் ஓரடி; வயிரம்; வித்தியாதத்துவம் ஏழில்ஒன்று; விலங்கேற்றின் பொது; சரீரம்; முசுக்கலை; துர்க்கை; திறமை; கூறு; திங்களின் பதினாறு கூறுகளில் ஒன்று; பிங்கலை; நிலை குலை; சுருதிகுலை; ஒளி; ஒருதாளப் பிரமாணம்; அறுபத்து நான்கு கலை; மொழி; இரலை; கருமான்; புல்வாய்; வச்சயம்; இடைகலை, பிங்கலைகள்; மனதைக்கலை; நீக்கு; புணர்ச்சிக்குரிய கரணங்கள்; மரக்கவடு; மேகலை; காஞ்சி என்னும் இடையணிகள்; குலை; மரவயிரம்; வித்தை; ஒரு பொருளின் சிறிய பாகம்; காலப்பிரிவின் ஒன்று; பிற; நிறம்பில்; வஞ்சகம்; விலங்கின் ஆண் பெயர்களுள் ஒன்று”[1] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழகராதி.

சுராவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி கலையென்பதற்கு, "ஆண் மான் வகை; ஆண் குரங்கு; ஆடை; சேணம்; பகுதி; ஒளி; நுட்பமான கால அளவு; எழுத்தும்; எண்ணும்; நூல்; மொழி; உடல்; பெண்களின் இடையணி; கர்பூரவகை; stag; male of black monkey; garment; dress; saddle; portion; brightness; a minute portion of time; art and science; language; body; womens girdle; a kind of camphor"[2] என விளக்கம் தருகிறது.

கலை மற்றும் கைவிணை பற்றி "There was an ancient tradion, and it Probably still lingers in remote areas, which belives there is no clividing line between and craft. for both possess individuality, artistic merit, require security and deserve respect. This seems appropriate to toys and dolls, for it is both an art and a craft"[3] என Land& people of indian statesand union territories என்னும் ஆங்கில நூல் குறிப்பிடுகிறது.

ஆயகலைகள் அறுபத்து நான்கு என்பது பொது வழக்கு. இக்கலைகள் பற்றி காமசூத்திரம் என்ற பழைய வடமொழி நூல் சுட்டுகிறது. மொழி ஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகராதி முதலியில் இக்கலைகள் யாவை என்பதையும் அதற்குத் தமிழ் விளக்கத்தையும் அளித்துள்ளார். அவை,

| **கலை** | **தமிழ் விளக்கம்** |
|---|---|
| 1. அக்கர இலக்கணம் | எழுத்திலக்கணம் |
| 2. லிகிதம் (இலிகிதம்) | எழுத்தாற்றல் |
| 3. கணிதம் | கணிதவியல் |
| 4. வேதம் | மறைநூல் |
| 5. புராணம் | தொன்மம் |
| 6. வியாகரணம் | இலக்கணவியல் |
| 7. நிதிநூல் | நயநூல் |
| 8. சோதிடம் | கணியக்கலை |
| 9. தருமசாத்திரம் | அறத்துப்பால் |
| 10. யோகம் | ஓகக்கலை |

| | | |
|---|---|---|
| 11. | மந்திரம் | மந்திரக்கலை |
| 12. | சகுனம் | நிமித்தக்கலை |
| 13. | சிற்பம் | கம்மியக்கலை |
| 14. | வைத்தியம் | மருத்துவக்கலை |
| 15. | உருவசாத்திரம் | உருப்பமைவு |
| 16. | இதிகாசம் | மறவனப்பு |
| 17. | காவியம் | வனப்பு |
| 18. | அலங்காரம் | அணியியல் |
| 19. | மதுரபாடனம் | இனிதுமொழிதல் |
| 20. | நாடகம் | நாடகக்கலை |
| 21. | நிமித்தம் | ஆடற்கலை |
| 22. | சத்தபிரமம் | ஒலிநுட்ப அறிவு |
| 23. | வீணை | யாழ் இயல் |
| 24. | வேணு | குழலிசை |
| 25. | மிருதங்கம் | மத்தள நூல் |
| 26. | தாளம் | தாளஇயல் |
| 27. | அகத்திராபரீட்சை | வில்லாற்றல் |
| 28. | கனகபரீட்சை | பொன்நோட்டம் |
| 29. | இரதபரீட்சை | தேர் பயிற்சி |
| 30. | கசபரீட்சை | யானையேற்றம் |
| 31. | அசுவபரீட்சை | குதிரை |
| 32. | இரத்தின பரீட்சை | மணிநோட்டம் |
| 33. | பூ பரீட்சை | மண்ணியல் |
| 34. | சங்கிராம இலக்கணம் | போர்ப்பயிற்சி |
| 35. | மல்யுத்தம் | கைகலப்பு |
| 36. | ஆகர்சணம் | கவிர்ச்சியல் |
| 37. | உச்சாடணம் | ஒட்டுகை |
| 38. | வித்துவேஷணம் | நட்பு பிரிக்கை |
| 39. | மதனசாத்திரம் | மயக்குக்கலை |
| 40. | மோகனம் | புணரும்கலை |
| 41. | வசீகரணம் | வசியக்கலை |

| | | |
|---|---|---|
| 42. | இராசவாதம் | இதளியக்கலை |
| 43. | காந்தவவிவாதம் | இன்னிசைப் பயிற்சி |
| 44. | னபீலவாதம் | பிறவுயிர்மொழி |
| 45. | தாதுவாதம் | நாடிப்பயிற்சி |
| 46. | கொளுத்துகவாதம் | மகிழுறுத்தம் |
| 47. | காருடம் | கலுழம் |
| 48. | நட்பம் | இழப்பறிகை |
| 49. | முட்டி | மறைத்ததையறிதல் |
| 50. | ஆகாயபிரவேசம் | வான்புகுதல் |
| 51. | ஆகாயகமனம் | வான்செல்கை |
| 52. | பரகாயப்பிரவேசம் | கூடுவிட்டுக் கூடுபாய்தல் |
| 53. | அதிரிசயம் | தன்னுறுகரத்தல் |
| 54. | இந்திரசாலம் | மாயம் |
| 55. | மகேந்திரசாலம் | பெருமாயம் |
| 56. | அக்னிதம்பம் | நீர் அழற்கட்டு |
| 57. | சாலதம்பம் | நீர்க்கட்டு |
| 58. | வாயுதம்பம் | வளசிகட்டு |
| 59. | திட்டிதம்பம் | கண்கட்டு |
| 60. | வாக்குதம்பம் | நாவுக்கட்டு |
| 61. | சுக்கிலதம்பம் | விந்துக்கட்டு |
| 62. | கன்னதம்பம் | புதையிற்கட்டு |
| 63. | கட்கதம்பம் | வாட்கட்டு |
| 64. | அவத்தைப் பிரயோகம் | சூனியம்”[4] |

என ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் விளக்குகிறார். இக்கலைகளில் இயல், இசை, நாடகம், சிற்பம், ஓவியம் போன்றவை அடங்குகின்றன. போர்ப் பயிற்சி பற்றியும் இக்கலைகளுக்குள் இடம்பெறுவதைக் காணமுடிகிறது. அறுபத்துநான்கு கலைகள் என்றாலும் அழகியல் நோக்குடன் கலையுணர்வை வெளிப்படுத்தும் முகமாகவும் அமையப்பெறுவன இசை, ஓவியம், சிற்பம், கட்டிடம், கணியம் ஆகிய கலைகள் ஆகும். அக்கலைகளின் ஊடாகத் தொழில்கள் நடந்தேரியதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் இயம்புகின்றன.

**இசைக்கலை**

ஒலிகளின் கூட்டு இசை எனப்படும். இசை என்பதற்கு "இசைப்பாட்டு, ஒலி, ஓசை, பண், கூடிநிற்றல், கொடை, பண்பு, பாட்டினிசை, பொன், சொல், புகழ், முத்தமிழின் ஒன்றாகிய இசைத்தமிழ்"[5] என கழகத் தமிழ் அகராதி பொருள் தருகிறது.

"மிடற்றுப்பாடலும் குழல், யாழ் முதலிய இசைக்கருவிகளின் ஒலியும் இவற்றின் கால அளவினை வரையறுக்கும் தாள அமைப்பும் ஆகிய இவை மூன்றும் ஒத்திசைத்து இயங்குவது இசையாகும்"[6] என வெள்ளைவாரணர் குறிப்பதை இசைத்தமிழ் நூல் ஆசிரியர் தி.நா.அறிவுஒளி குறிப்பிடுகிறார்.

"இசை என்னும் சொல்லிற்கு இசைவிப்பது, வகைப்படுத்துவது எனப் பொருள் கொள்ளலாம்"[7] எனச் சுட்டுகிறார் சு.வித்தியானந்தன்.

"இசை என்பது செவிவழியாகச் சிந்தைக்குப் புலனாகி உயிர்களுக்கு இன்ப துன்பங்களை விளைவிக்கும் ஒரு கலை. செவிப்புலனுக்குரிய பொருள் நாதம், அது ஓசை, இசை, ஒலி என முக்கூறாக அமையும் விண்வெளி, காற்று, கடல் மலைச்சாரல், மழை முதலியவற்றின் இயற்கை இயக்கத்தினின்று வெளிப்படும் நாதம் ஓசை எனப்படும்; இடி, நிலநடுக்கம், பெருவெள்ளம், புயற்காற்று, பறவை, விலங்குகளின் வாயாலும் நடையாலும் விளையும் நாதம் ஒலி எனப்படும். ஓசை, ஒலிகளை ஓரளவுக்கு உட்படுத்தி ஏற்றம், இக்கம், சமம், தெளிவுகளோடு மக்கள் குரலால் வெளிப்படுத்தும் நாதம் இசை எனப்படும்"[8] என சே.பிரேமா குறிப்பிடுகிறார்.

"தமிழை, இயல், இசை, நாடகம் என மூன்று பகுதியாக்கித் தனித்தனியே நுகர்ந்தும் அவற்றை ஒன்றிணைத்து முத்தமிழாக்கியும் முறை செய்தவன் தமிழன்"[9] என விளக்குவார் குமரிச்செழியன்.

"கவின் கலைகளுள் முதன்மையானது இசையே. இசை எக்காலத்தும், எந்நாட்டு மக்களாலும், ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய

விதிமுறைகளைக் கொண்டு வளர்க்கப்பட்ட ஒரு முழுமையானக் கலையாகும்”[10] என வாழ்வியற்களஞ்சியம் உரைக்கிறது.

இசைப்பொருளை உணர்த்தும் சொற்களைத் தொல்காப்பியம்,

**“துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்**
**இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்”[11]**

என்ற நூற்பாவின்வழி உணர்த்துகிறது. துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் நான்கும் ஓசை தழுவிய இசைப்பொருளை உணர்த்தும் சொற்களாகும் எனத் தமிழண்ணல் உரைக்கிறார். புறநானூற்றின்,

**“முரசு கடிப்பு இகுப்பவும், வால் வளை துவைப்பவும்”**
**(புறநா.158:1)**

என்னும் அடியானது முரசு அறையவும், வெண்சங்கு முழங்கவும் உடைய மலையினைக் கொண்ட பாரி மன்னனைக் குறிப்பிடுகிறது. துவைப்பவும் என்ற சொல் முழங்குதல் என்ற ஓசையைக் குறித்து நின்றதாகும்.

**“ஆமா நல் ஏறு சிலைப்பச் சேன் நின்று**
**இழுமென இழிதரும் அருவி” (திரு.315-316)**

என்ற அடிகளும் அருவி விழும் ஓசையையும்,

**“நெடு மதில் வரைப்பின் கடி மனை இயம்ப”**
**(புறநா.36:10)**

என்ற அடியும், காவல் மரம் வெட்டும் பொழுது ஏற்படும் ஓசையையும்,

**“ஏறு இரங்கு இருள் இடை இரவினில் பதம்பெறாஅன்”**
**(கலித்.46:10)**

என்ற அடியும், இரவில் நொச்சிப்பூ விழுந்த ஓசையையும் குறிக்கிறது. துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் என்ற இந்நான்கு சொற்களும் ஓசைப்பொருளில் வருவதைக் காணமுடிகிறது.

இசைப்பு என்பதை இசைத்தல் எனச்சுட்டுவார் தொல்காப்பியர். இதனை,

**“இசைப்பு இசையாகும்”[12]**

என்கிறது நூற்பா.

**இசைக் கலைஞர்கள்**

ஆற்றுப்படைக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் இசைக் கலைஞர்களைப் பற்றி எடுத்தியம்புகிறது. கி.வா.ஜகந்நாதன் ஆற்றுப்படை

பற்றி "பெரும்பாலும் யார் பயன்பெற முயல்கிறார்களோ அவர்கள் பெயரால் ஆற்றுப்படைக்குப் பெயரிடுவது வழக்கம். பாணனுக்கு வழிக்காட்டினால் பாணாற்றுப்படையாகும். புலவருக்கு கூறுவது புலவராற்றுப்படை"[13] எனக் குறிப்பிடுகிறார்.

**பொருநர்**

பொருநர் என்பதற்கு "ஏர்க்களம் பாடுநர், போர்க்களம் பாடுநர், பரணி பாடுநர்"[14] என்று அபிதானசிந்தாமணி பொருள் உணர்த்துகிறது. பொருநன் என்ற சொல்லுக்கு "நிலத்தலைவன், திண்ணியன், நாடகன், படைத்தலைவன், படைவீரன்"[15] என சதுரகராதி விளக்கம் தருகிறது.

**கூத்தர்**

"கூத்தர் என்பதற்கு நாடகர் என்றும், கூத்தன் என்பதற்கு உயிர், நடன் என்றும், கூத்தி என்பதற்கு நாடகக் கணிகை என்றும், கூத்து என்பது நடனம் எனவும், விறலி என்பதற்கு பதினாறு வயதுப் பெண், பாடன்மகடூ"[16] என சதுரகராதி சுட்டுகிறது.

"எண் வகைச் சுவையும் மனத்தின் கட்டப்பட்ட குறிப்புகளும் புறத்துப் போந்து புலப்பட ஆடுவார். அது விறலாதலின் அவ்விறல்பட ஆடுவாளை விறலியென்ப"[17] என அபிதானசிந்தாமணி விளக்கம் தருகிறது.

"சங்க காலத் தமிழ் மகளிர், நாடகத் தமிழிலும் நல்ல பயிற்சி பெற்று விளங்கினர். உள்ளக் குறிப்பினைத் தம் உடம்பிற் றோன்றும் மெய்ப்பாடுகளால் புலப்படுத்தும் முறை நாடகத்தின் பாற்பட்டதாகும். இம்முறையினை 'விறல்' என்ற சொல்லாற் குறிப்பிடுவர். விறல்பட ஆடுந்திறம் மகளிர்க்கே உரியதாகும். விறல்பட ஆட வல்லவள் 'விறலி' என வழங்கப்பெற்றாள்"[18] என்று க.வெள்ளைவாரணன் குறிப்பிடுகிறார்.

கூத்துக் கலையை நிகழ்த்துபவர்கள் கூத்தர் ஆவர். இவர்கள் நாள்தோறும் கூத்து நடத்தி அதன் வழி வரும் வருவாயினைக் கொண்டு உணவினைப் பெற்றுக் கொண்டனர். கூத்தரை ஆற்றுப்படுத்துவதற்காக இடம்பெறும் நூல் கூத்தராற்றுப்படையாகும்.

கூத்தர்களின் சிறுபிள்ளைகள் மூங்கிலில் மேல் ஆடியதை,

**"கடும்பறைக் கோடியர் மகா அரன்ன**
**நெடுங்கழை கொம்பர் கடுவன் உகளினும்"** (மலைபடு:236-237)

என்றடிகள் விளக்குகின்றன.

**பாணர்**

பாணன் என்பதற்கு **"சங்கீதம் பாடிப் புகழ்வோர்"**[19] என தமிழ் மொழி அகராதி பொருள் தருகிறது.

பண் என்னும் வேர்ச்சொல்லைக் கொண்டு பாடும் திறன் கொண்ட கலைஞர்கள் பாணர் என்றழைக்கப்பட்டனர். பாணர்களைப் பற்றி பெரும்பாணாற்றுபடை, சிறும்பாணாற்றுப்படை ஆகிய நூல்கள் எடுத்துரைக்கின்றன.

பாணர்கள் போர்த்தொழில், வேட்டைத் தொழில், கைத் தொழில், தூது போதல், மீன் பிடித்தல் நிமித்தம் பார்த்தல் போன்ற செயல்பாடுகளிலும் ஈடுபட்டனர் என்பதை சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

**கூத்தர்**

கூத்துக் கலையை நிகழ்த்துபவர்கள் கூத்தர் ஆவர். இவர்கள் நாள்தோறும் கூத்து நடத்தி அதன் வழி வரும் வருவாயினைக் கொண்டு உணவினைப் பெற்றுக் கொண்டனர். கூத்தரை ஆற்றுப்படுத்துவதற்காக இடம்பெறும் நூல் கூத்தராற்றுப்படையாகும்.

**இசைக்கருவிகளின் தோற்றம்**

இசைக்கருவிகள் மனிதனின் பொழுதுபோக்கிற்காகவும் கலைத்திறனை உணர்த்தும் நோக்கிலும் தோன்றியவை. இவ்விசைக்கருவிகள் மக்களின் பிற தேவைகளுக்கும் பயன்படுத்தப்பட்டு வந்தமையைக் காணமுடிகிறது. ஆற்றுப்படை நூல்கள் இசைக்கலைஞர்களின் வாழ்வு நிலையையும் அவர்களின் அடிப்படைத் தேவைகளையும் எங்ஙனம் பூர்த்தி செய்தமையும் நமக்குக் கண்ணாடியாய்க் காட்டுகின்றன.

அவர்கள் தங்களின் கலைத்திறத்தால் மன்னர்களிடம் சென்று அவர்களைப் புகழ்ந்துபாடி தம்முடைய வறுமையைப் போக்கிக்

கொண்டனர். அவர்கள் செய்யும் தொழில்களுக்குத் துணைக்கருவிகளாக இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டன.

மனிதனின் கலை, தொழில் தேவைகளை நிறைவேற்ற இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டமை புலனாகிறது. இவற்றையே “இசை பற்றியும், இசைக்கருவிகள் பற்றியும் ஆராய்ந்து பார்த்தால் அவை இசைக்காகத் தோன்றியதாக இல்லை. மக்களின் பல்வேறு தேவைகளின் அடிப்படையிலும், தொழில் அடிப்படைகளின் வழியில் தோன்றியிருக்கிறது. தமிழக இசைக்கருவிகளில் முதல் இசைக்கருவியாகக் கருதப்படுவது யாழ். இவை காட்டில் வேட்டையாடுவதற்காகவும், தினைப்புனம் காக்கவும் பயன்படுத்திய வில்லிலிருந்து உருவானது ஆகும். இதனை வில் யாழ் என்று குறிப்பிட்டுள்ளனர்.

இதேபோன்று மக்களின் தொழில், இறைவழிபாடு, தானியங்களை சேகரித்தல் ஆகிய செயல்களில் பயன்படுத்திய பொருள்கள் இசைக்கருவிகளாக மாறியிருக்கின்றன”[20] என ஆய்வாளர் சா.சத்யா குறிப்பிடுகிறார். இவற்றையே “இத்தகைய ஆராய்ச்சியில் நாம் புகுந்தால் இசைக்கும் சம்பந்தமில்லாத சிற்சில பழக்க வழக்கங்களிலிருந்து இசையும், இசைக்கருவிகளும் தோன்றியிருக்கக்கூடும் என்பதை உணரலாம்”[21] என பி.சைதன்யதேவ குறிப்பிடுகிறார்.

**இசைக்கருவி விளக்கம்**

“இனிய நாதத்தை உண்டாக்கி அதிலிருந்து இசையை வகைப்படுத்தி வெளியிடும் கருவியே இசைக்கருவியாகும்”[22] என்கிறார் கே.ஏ.பக்ரிசாமிபாரதி. இசைத்துறையில் பயன்படும் இசைக்கருவிகள் பஞ்சக்கருவிகள் என வழங்கப்படுகிறது. இக்கருவிகளின் அடிப்படையில் இசைக்கருவிகள் வகைப்படுத்தப்படுகின்றன. பஞ்சகருவி என்பதற்கு “தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்ற ஐவகை இசை உண்டாக்கும் கருவிகள்”[23] எனக் கழகத்தமிழ் அகராதி பொருள் அளிக்கிறது. இக்கருவிகள் எவ்வாறு அழைக்கப்படுகின்றன என்பதை இசைத்தமிழ் இலக்கண விளக்கம் “1.நரம்புக்கருவிகள் (தந்தி வாத்தியங்கள்) யாழ், 2.தோற்கருவிகள்

(சருமவாத்தியங்கள்) மிருதங்கம், மத்தளம், கெஞ்சிரா, தவுள் முதலியன, 3.துளைக்கருவிகள் (முகவாத்தியங்கள்) புல்லாங்குழல், நாகசுரம், ஆர்மோனியம், 4.கஞ்சக் கருவிகள் (வெண்கல வாத்தியங்கள்) சாலர், மணிசிப்ளா"[24] முதலியன என்று குறிப்பிடுகிறது.

**தோற்கருவிகள்**

"மரம் முதலியவற்றைக் குழலாகவும், கிண்ணமாகவும், உருளையாகவும் அமைத்து அதன் ஒரு புறத்திலோ இருபுறத்திலுமோ தோலால் விரித்துக்கட்டிக் கையாலும் சிறுகோல்களாலும் தட்டி தாள ஓசையைப் பெறும் கருவி தோற்கருவியாகும்"[25] என செ.பிரேமா, இசை மருத்துவம் என்னும் நூலில் விளக்குகிறார்.

தோற்கருவிகளின் வகைகளைப் பஞ்சமரபு என்னும் நூல் ஏழு வகைகளாகக் குறிப்பிடுகிறது. அவை, வண்மைக் கருவிகள், மென்மைக் கருவிகள், சமக்கருவிகள், தலைக்கருவிகள், இடைக்கருவிகள், கடைக்கருவிகள், வீரக்கருவிகள் ஆகும்.

**"நிசாளந் துடுமை முரசே பேரிகை**
**பறையே யடக்கம் சிறுபறை மொந்தை**
**முறையே பெரும்பறை நாழிகைப் பறையொடு**
**துடியெ வைத்துத் தொகுத்தனர் புலவர்"[26]**

என்ற அடிகள் நிசாளம், துடுமை, முரசு, பேரிகை, தேசி, திமிலை, குடமுழா, பாகம் ஆகிய கருவிகள் வன்மைக்கருவிகள் என்பதை உணர்த்துகிறது.

**மென்மைக்கருவிகள்**

**"தக்கை குடுக்கை தகுணிச்சம் தண்ணும்மை**
**மிக்க உடுக்கை விரலேறு பாங்கி**
**அந்தரி முழவொடு சந்திர வளையம்**
**மொந்தை மொழிந்த பைந்தொழிற் றடாரி**
**கண்விடு தும்பே தமருக மென்றிவை**
**மண்மிசை மென்மைக் கருவியாய் வைத்தே"[27]**

என இவ்வடிகள் தக்கை, குடுக்கை, தகுணிச்சம், தண்ணும்மை, உடுக்கை, பாங்கி, முழவு, சந்திரவளையம், மொந்தை, தடாரி, தூம்பு, தமருகம் ஆகியவை மென்மைக்கருவிகள் எனச் சுட்டுகின்றன.

**சமக்கருவிகள்**

> "மத்தளஞ் சல்லி படகங் கரடி
> இத்திற நான்குஞ் சமமென மொழிப"[28]

என்னும் அடிகள் மத்தளம், சல்லி, படகம், கரடி போன்ற கருவிகளைச் சமக்கருவிகள் என எடுத்தியம்புகின்றன.

**தலைக்கருவிகள்**

> "மன்னியசீர் மத்தளஞ் சல்லியிடக்கை யுடன்
> பின்னங் கரடிகைநற் பேரிகையுஞ் சொன்ன
> கடகஞ் குடமுடிவம் பாங்காயில் வேழும்
> அடைவே முதற்கருவி யாம்"[29]

என்ற அடிகள் மத்தளம், சல்லி, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழவம் போன்ற கருவிகளை முதன்மைக் கருவிகள் என உணர்த்துகின்றன.

**இடைக்கருவிகள்**

> "தண்ணும்மை தக்கை யுடுக்கை தகுணிச்சம்
> கண்விடு நூம்பு விரலேறு - வண்ணந்
> தமருகற் தடாரி சார்துடியு பாங்கி
> அமுதகுண் டலியந்த தறி"[30]

என்னுமடிகள் தண்ணும்மை, தக்கை, உடுக்கை, தகுனிச்சம், கண்விடு தூம்பு, விரலேறு, தமருகம், தடாரி, துடி, உபாங்கி, அமுதகுண்டலி, அந்தரிமுழவு போன்றவை இடைக்கருவிகள் என விளம்புகின்றன.

**கடைக்கருவிகள்**

> "பறையே பாகஞ் சிறுபறை யடக்கம்
> கறைவேற் கண்ணாங் கருவி"[31]

என்றடிகள் பறை, பாகம், சிறுபறை, அடக்கம் போன்றவற்றைக் கடைக்கருவியாக உரைக்கின்றன.

**வீரக்கருவிகள்**

> "முரசே நிசாளந் திமிலை துடுமை
> யரசர்க் கெய்தும் பிறர்க்கல வென்ப"[32]

என்னுமடிகள் முரசு, நிசாளம், திமிலை, துடுமை ஆகியவற்றை விரக்கருவியாக எடுத்துரைக்கின்றன.

**பறை**

பறை ஒரு தமிழிசைக் கருவியாகும். இது தோலால் ஆன மேளமாகும். பறை என்ற சொல் பேச்சு என்ற சொல்லின் அடியான 'பேசு' எனப் பொருள்படும். 'அறை' என்ற சொல்லினின்று 'பறை' தோன்றியது. பறை என்ற சொல் இசைக்கருவியையும் செய்தி அறிவிக்கும் முறையையும் குறிக்கின்றது. பறை பற்றி,

> **"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருவென மொழிப"[33]**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்துகிறது. பழங்காலத் தமிழர் வாழ்வில் முதன்மைச் செய்தி ஊடகமாக இருந்தது பறையே. ஒரு நாட்டில் நடக்கும் நிகழ்வுகளை அறிவித்தல், அரசு கட்டளைகளை ஊர் ஊராகச் சென்று சொல்லுதல் பறையறைதலாகும். அவ்வாறு ஊர் ஊராகச் செல்பவரை 'பறையர்' என்ற காரணப் பெயருடன் அழைத்தனர். 'பறையர்' என்பவர்கள் இன்று தொழிலின் அடிப்படையில் ஒருவகை சாதியினராகக் குறிப்பிடப்படுகின்றனர். இதனைப் புறநானூற்றின்,

> **"துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று**
> **இந்நான்கு அல்லது குடியும் இல்லை" (பா.335:7-8)**

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன. துடிகொட்டுபவரின் குடி, யாழிசைக்கும் பாணன்குடி, பறையடிக்கும் பறையன் குடி, கடம்பனுடையக்குடி ஆகிய நான்கு குடிகளைத் தவிர பிற குடியினர் இல்லை என 'மாங்குடிகிழார்' பாடுகிறார். "பறை என்பது ஓடும் இசையை ஒழுங்குபெற நிறுத்தி ஓர் அளவோடு சீரோடு, ஒத்த அழகோடு நடக்க, இசைக்குத் தடை கற்பிக்கும் கருவி"[34] என வளர்மதி தன்னுடைய 'பறை' ஆய்வு நூலில் விளக்குகிறார்.

'பறை' என்பதற்கு "இறகு, ஓரளவு, ஓரளவு கருவி, சாதி, சொல் பறையென்னேவல்"[35] என்று சொற்பொருள் விளக்கம் அளிக்கிறது கழகத் தமிழ் அகராதி. பறைச்சல் - பேச்சு, பறைதல் - சொல்லல், தேய்தல் - அழிதல் எனவும் இவ்வகராதி சுட்டுகிறது.

“உலக இசைக்கருவிகளின் வரலாற்றில் தோற்கருவிகளே முதலில் கண்டுபிடிக்கப்பட்டன என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு. அதிலும் விலங்குகளை விரட்டவும், எச்சரிக்கை ஒலி எழுப்பவும், மாலைநேரக் கொண்டாட்டங்களுக்காகவும் முழக்கப்பட்ட பறைதான் முதன்முதலில் மனிதன் உருவாக்கிய ஆதி இசைக்கருவி பறை இசைத்த கலைஞர்கள் பறையர்கள் எனப்பட்டார்கள்”[36] எனக் கி.பார்த்திபராஜா குறிப்பிடுகிறார்.

“இது ஒருமுகத் தோற்கருவி. இதனை ஆதிமாந்தன் உடைந்த பானை, குடம் இவற்றின் வாயின்மேல் தோலை இழுத்துப் போர்த்திச் சுற்றிலும் கட்டிக் கொண்டு முழக்கத் தொடங்கினான். ஒருமுகப்பறை பின் இருமுகப்பறைகள், பன்முகப்பறைகள் தோன்றின. பறை என்பது முழங்கும் தோற்கருவிகட்குப் பொதுப்பெயர்”[37] எனத் தமிழிசைக் களஞ்சியம் உரைக்கிறது.

**பறையின் வகைகள்**

பறையின் வகைகளாகத் தொண்பகப்பறை, அரிப்பறை, ஆறெறிப்பறை, உவகைப்பறை, சாப்பறை, சாக்காட்டுப்பறை, வெட்டியான்பறை, நெய்தல்பறை, பம்பை, மீன்கோட்பறை, மருதநிலப்பறை, கல்வெடம், குரவைப்பறை, தடறு (தொண்டகப்பறை), கோட்பறை, பன்றிப்பறை, வெறியாட்டுப்பறை ஆகிய பறைகள் காணப்படுகின்றன. இவற்றில் சங்க இலக்கியத்தில் பறைகளாகத் தொண்டகப்பறை, சிறுபறை, அரிப்பறை, ஆறெறிப்பறை, குறிஞ்சிப்பறை, மருதப்பறை, மீன்கோட்பறை, வெறியாட்டுப்பறை, காப்பறை போன்றவை காணப்படுகின்றன.

**தொண்டகப்பறை**

‘தொண்டகம்’ என்பதற்குக் “குறிஞ்சிப்பறை, ஆட்கோட்பறை, தொண்டு பூண்ட இருதயம்”[38] என்று கழகத் தமிழ் அகராதி பொருள் விளக்கம் தருகிறது. இப்பறை குறிஞ்சி நிலத்தில் பறையப்படும் பறையாகும். இதனை,

> **“தொண்டகப் பறைச்சீர் பெண்டிதொடு விரைஇ**
> **மறுகில் தூங்கும் சிறுகுடிப் பார்க்கத்து” (118:3-4)**

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்கும். தொண்டகப் பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடவர் பெண்களுடன் கலந்து தெருக்களில் கூத்தாடுவர். இதேபோன்று திருமுருகாற்றுப்படையில் இந்நிகழ்வை,

**"நீடு அமை விளைந்த தேக்கள் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர"** (195-197)

என்கின்ற அடிகள் சுட்டுகின்றன. நீண்ட மூங்கில் குழாய்களில் முற்றி விளைந்த தேறலாகிய மதுவைத் தம் சுற்றத்தாருடன் குடித்து மகிழ்ந்து தொண்டகம் என்ற சிறிய பறையை முழக்கிக் குரவைக் கூத்தாடினர். குரவைக்கூத்தில் தொண்டகப்பறை அடிக்கப்பட்டது என்பதைக் காணமுடிகிறது. சிலம்பில் வஞ்சிக்காண்டத்தில் குன்றக்குரவைக் காதையில்,

**"தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்"[39]**

என்ற அடி இடம்பெறுவதைக் காணமுடிகிறது. நற்றிணை, குறுந்தொகையிலும் இப்பறை பற்றிய குறிப்புகள் உள்ளன.

**சிறுபறை**

சிறுபறை என்பது ஆகுளி என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது.

**"விரல் ஊன்று படுகண் ஆகுளி கடுப்பக்"** (140)

என்று கூத்தராற்றுப்படையும், புறநானூற்றில்

**"நல் யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கி**
**சொல்லா மோதில் சில்வளை விறலி"** (பா.64:1-2)
**"எல்லரி தொகுமின் ஆகுளி தொடுமின்"** (பா.152:16)

என்ற பாடலடிகளும் விளக்குகின்றன.

**அரிப்பறை**

அரித்தல் ஓசையையுடைய பறை அரிப்பறையாகும். இதனைக் கிணைப்பறை, தடாரிப்பறை என்றும் சங்க காலத்தில் குறிப்பிட்டுள்ளனர். இப்பறையானது போர்க்களத்திலும் நெற்களத்திலும் அடிக்கப்பட்டது. இதனை,

**"அகன் கண் தடாரி தெளிர்ப்ப ஒற்றி**
**வெந்திறல் வியன்களம் பொலிக! என்று ஏத்தி"**
(பா.370:18-19)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. அகன்ற கண்ணையுடைய தடாரிப்பறையை ஓசையெழ அறைந்து, செவ்விய திறலை உடைய நின்னுடைய பெரிய போர்க்களம் விளக்கமுறுக என பாராட்டி வந்ததென இவ்வடிகள் உணர்த்துகின்றன.

**“அரிக்கூடு மாக்கினை இரிய ஏற்றி” (புறநா.378:8)**
**“அரிக்குரல் தடாரி இரிய ஏற்றிப்” (புறநா.390:8)**

என்ற அடிகளும் புறநானூற்றில் இடம்பெறுகின்றன. புறநானூற்றின் 348, 381, 387, 340, 395, 397, 398 ஆகிய பாடல்களிலும் இப்பறை பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

நெற்களத்தில் பறை அடிப்பது கொண்டு இப்பறை அறுவடை செய்யும் நேரத்திலும் அந்த நெற்களைப் பறவைகள் மற்ற விலங்குகளிடமிருந்து பாதுகாக்கும் நேரத்திலும் அடிக்கப்பட்டதைக் கீழ்வரும் அடிகளின்வழி அறியலாம்.

**“அரிப்பறையான் புள் ஒப்புந்து**
**நெடுநீர் கூஉம் மணல் தண்கான்**
**மென்பறையான் புள் இரியுந்து” (புறநா.396:4-6)**

அரித்த ஓசையையுடைய பறையை முழக்கிக் கதிர்களைக் கவரவரும் புள்ளினங்களை விரட்டும் நீர்மிக்க கடற்கரைக் கனமணலை வீசும் குளிர்ந்த காற்றினால் கூவும் மெல்லிதாய் பறத்தலையுடைய குஞ்சுகளோடு கூடிய புள்ளினங்கள் நீங்கிச் செல்லும் என புறநானூற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன. நற்றிணையிலும் கூத்தராற்றுப்படையிலும் இக்கருத்து இடம்பெறுகிறது.

**பன்றிப்பறை**

தினைகளை அழிக்க வரும் பன்றிகளை விரட்டுவதற்காக இப்பறை பயன்படுத்தப்பட்டமை புலனாகிறது. பாலை நிலத்தில் வழிப்பறி கொள்ளையர்கள் தங்கள் தொழிலில் ஆறெறிப்பறையைத் தங்கள் தொழிலில் பயன்படுத்தியமையைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

**முழவு**

முழவானது தாளங்களை (Rhythms) அளவாக முழக்கி அடித்துத்தரும் கருவியாகும். இது தோற்கருவி வகையைச் சார்ந்தது

(Percussion Instrument) மேலைநாட்டு இசையில் தோற்கருவிகளை மெம்பிரானோபோன்ஸ் (Membranophones) என்றழைப்பர். "முழவு என்பதற்குப் பறைப்பொது முரசு, பால்கறக்கும் கலம், குடமிழா, தம்பட்டம்"[40] என்று பொருள் தருகிறது கழகத்தமிழ் அகராதி. தாளக்கருவிகள் அனைத்தையும் பொதுவாக முழவு என்றனர் பழந்தமிழர் என இசைத்தமிழ் நூல் குறிப்பிடுகிறது. முழவானது யாழ், குழலுடன் தாள இசையில் சேர்ந்தே பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனைப் பரிபாடல்,

**"எழு உப்புணர் யாழும் இசையும் கூடக்**
**குழலளந்து நிற்ப முழவு எழுந்து ஆர்ப்ப" (78-79)**

என்ற வையை அடிகள் விளக்குகின்றன. சிலப்பதிகாரமும் இக்கருத்தை,

**"குழல்வழி நின்றது யாழே யாழ்வழித்**
**தண்ணுமை நின்றது தகவே தண்ணுயை**
**பின்வழி நின்றது தகவே முழவொடு"[41]**

என்ற அரங்கேற்றுக்காதை அடிகளின்வழி உணர்த்துகிறது. முழவானது மங்களக் கருவியாகப் பயன்பட்டுவந்துள்ளது. திருமணம், திருவிழாக்களில் முழவு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை மதுரைக்காஞ்சி,

**"முழவு இமிழும் அகல் ஆங்கன்**
**விழவு நின்ற அயல் மறுகின்**
**துணங்கை அம்தழு உவின்......" (327-329)**

என்கின்றது. முழவுகள் முழங்கும் திருவிழாக்கள் நடைபெற்ற அகன்ற தெருவின்கண் துணங்கைக்கூத்தும், குரவைக்கூத்தும் நடைபெற்றன என்பதை இவ்வடிகள் உணர்த்துகின்றன.

**முரசு**

முரசினைப்பற்றி, "முரசு பெரிய கண்ணையுடையது. ஒலிக்கும் இடம் அகன்றது. உரல் போன்ற வட்டமான வாயையுடையது. மயிர் சீவாது போர்த்தப்பட்ட கண்ணையுடையது. குறுந்தடியால் தாக்கிப் புடைத்து ஒலிக்கப்படும். இழிமென்னும் ஓசையுடையதும், இன்னிசையுடையதும், இடி போலும் ஓசையுடையதும் ஆகும்"[42] என ஆர்.ஆளவந்தார் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் முரசுகள் மூன்று. அவை மயிர்க்கண் முரசு, வீரமுரசு, மணமுரசு ஆகியனவாகும். முரசானது மங்களக் கருவியாகவும், கொடைப்பொருளாகவும், போர் பொருளாகவும்

பயன்படுத்தப்பட்டது. மன்னன் போருக்குச் செல்லும்முன் வீரர்களைத் தயார்ப்படுத்தவும், போரினைத் தெரியப்படுத்தவும் முரசு அறையப்பட்டது. முரசானது மன்னர்களைவிட மதிப்பு மிகுந்ததாகப் போற்றப்பட்டது.

பகை மன்னர்களிடமிருந்து முரசுகளைக் கைப்பற்றுதல் பெருமையாகக் கருதப்பட்டது. போருக்குமுன் முரசும் சங்கும் முழங்கப்பட்டதை புறநானூற்றில்,

**“முரசு துடிப்பு இருப்பவும் வால் வளை துவைப்பவும்**
**அரசுடன் பொருத அண்ணல் நெடுவரை**
**கறங்குவெள் அருவி கல் அலைத்து ஒழுகும்**
**பறம்பின் கோமான் பாரியும்”** (பா.158:1-4)

என்றடிகள் புலப்படுத்துகின்றன. முரசு அறையவும் வெண்சங்கு முழங்கவும் மூவேந்தருடன் பொருத தலைமையையும் நெடிய மலையில் ஒலிக்கும் வெள்ளருவி கல்லை உருட்டி ஒழுகும் பறம்பு மலையையும் உடைய வேற்கள் பாரி என்று பாரியின் பெருமையினைக் குமண மன்னனிடம் பெருஞ்சித்திரனார் பாடுவதை இவ்வடிகள் உணர்த்துகின்றன.

மற்றொரு புறநானூற்றுப் பாடலானது சோழன் நலங்கிள்ளி தனக்கு அடிபணிந்து பகைவர் தன்னிடம் இரவல் கேட்டால் நான் எனது முரசையும், அரசாட்சியையும் தருவேன் என்று கூறுவதாக இடம்பெறுகிறது. இவற்றை,

**“மெல்ல வந்து என்நல் அடி பொருந்தி**
**ஈஎன இரக்குவர் ஆயின் சீருடை**
**முரசு கெழு தாயத்து அரசோ தஞ்சம்”** (புறம்.73:1-3)

என்ற அடிகள் விளக்கும். மெல்ல வந்து எனது பிறக்கிடாத நல்ல அடியை அடைந்து எமக்குத் தருக எனத் தாழ்ந்திருந்து நிற்பாராயின் சிறப்புடைய முரசு பொருந்தியதும் தொன்மையானதுமான எனது அரசாட்சியைத் தருதலும் எளிது என்கிறான் என இப்பாடல் விளக்குகிறது. முரசானது போர் தொடங்கும் முன்பும், முடியும் பின்பும் அறையப்பட்டுள்ளது. இதனை,

**“நகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி**
**அரசிருந்து பனிக்கும் முரசு முழங்கு பாசிறை”** (78-79)

என முல்லைப்பாட்டு உணர்த்துகிறது. முரசின் பெருமையும் மதிப்பும் அறியும் வகையில் இப்பாடலடிகள் அமைகின்றன.

**தண்ணுமை**

'தண்ணுமை' என்பதற்கு "உடுக்கை உறுமிமேளம், ஒருகட்பறை, பேரிகை, முழவு, மத்தளம்"[43] என கழகத் தமிழகராதி விளக்கம் அளிக்கிறது. பறை மற்றும் முழவு இவற்றிற்குப் பொதுப்படையான பெயராகத் 'தண்ணுமை' என்ற சொல் பயின்று வருகிறது. பறையாக அறுவடையின் போது பயன்படுகிறது.

**"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇச்**
**செங்கண் எருமை இனம்பிரி ஒருத்தல்"** **(471-472)**

என்ற கூத்தராற்றுப்படை அடிகள் விளம்புகின்றன. வெண்நெல்லை அறுப்பார் கொட்டிய பறை ஓசையை வெறுத்து, அஞ்சி, சிவந்த கண்ணையுடைய எருமைகடா, தன் இனத்தைப் பிரித்து வலிமையோடு விரைந்து ஓடும் என உணர்த்துகின்றன.

**குழல்**

பண்களை இனிமையாக இசைக்கும் கருவி குழல். இது காற்றுக் கருவி வகையைச் (Wind Instrument) சேர்ந்தது. மேலைநாட்டு இசையில் காற்றுக் கருவிகளை 'ஏரோபோன்ஸ்' (Aerophones) என்பர்.

குழலின் சுருதியை அடிப்படையாய்க் கொண்டு பிற இசைக்கருவிகள் இசைக்கப்பட்டதை, "குழலின் துளைகளிலிருந்து பிறக்கும் ஒலிகள் நிலைத்து நிற்பவை. சுருதி மாறாதவை. குழலின் பற்று (ஆதார சுருதி) மாறாமல் எப்பொழுதும் ஒன்று போல் இருக்கும். ஆனால் யாழ் நரம்புகளின் சுருதி பாதிக்கப்படும். நரம்புகளின் முறுக்கிற்கு ஏற்பவும் சுருதிமாறும். ஆகவே யாழ் வல்லுநர்கள் யாழ் நரம்புகளின் ஒலியைக் குழலின் பற்றை அடிப்படையாகக் கொண்டு நிறுத்தி நிலைப்படுத்திக் கொண்டனர். யாழ் மட்டுமல்லாமல், மிடற்றுப்பாடலின் சுருதியும் தண்ணும்மை போன்ற மற்ற இசைக்கருவிகளின் சுருதியும் குழலின் பற்றை வைத்தே சுருதி சேர்க்கப்பட்டது"[44] என்று து.ஆ.தனபாண்டியன் விளக்குகிறார்.

குழலானது ஆயர்களின் கையில் இருக்கும் கோல் ஆகும். ஆநிரைகளை ஒருங்குபடுத்த ஆயர்கள் குழலினைப் பயன்படுத்தியிருக் கின்றனர். மாலைப்பொழுதில் கோவலர்கள் குழலிசைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். பிற இசைக்கருவிகள் இசைக்கப்படும் பொழுதும் குழல் இசைக்கப்பட்டுள்ளது. இதனைப் பரிபாடலின்,

**"ஒத்த குழலின் ஒலியெழ முழவு இமிழ்**
**மத்தரி, தடாரி, தண்ணும்மை, மகுளி**
**ஒத்து அளந்து சீர்தூக்கி ஒருவர் பிறப்பார்" (12:40-42)**

எனும் பாடல் புல்லாங்குழலிலிருந்து இசை ஒலித்தது என்கின்றது. முழவு, மத்தரி, தடாரி, தண்ணும்மை, மகுளி என்னும் இசைக்கருவிகள் ஒலித்தன என்ற வையைப்பாடல் உணர்த்துகிறது. குயிலின் குரலுக்குக் குழல் உவமையாகக் கூறப்படுகிறது. இதனை,

**"குருகுஇலை உதிரக் குயிலினம் கூவப்**
**பகர் குழல் பாண்டில் இயம்ப அகவுநர்" (பா.15:41-42)**

என்றடிகள் உணர்த்துகின்றன. பரிபாடலின் 17, 22 ஆவது பாடல்களிலும் குழல் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

'வங்கா' என்னும் பறவையின் குரல் குழலிசையைப்போல் இருப்பதைக் குறுந்தொகையில்,

**"வங்காக் கடந்த செங்கால் பேடை**
**எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது**
**குழலிசை குரல குறும்பல அகவும்" (பா.151:1-3)**

என்றடிகள் விளக்குகின்றன. யாழின் சிறப்பினைக் கூறுமிடத்துக் குழல் பற்றியும் சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையாகச் சொல்லப்படுகிறது.

**"நரம்பின் தீம்குரல் நிறுக்கும் குழல்போல்**
**இரங்கு இசை மிஞிறொடு தும்பிதாது ஊதத்" (கலி33:22-23)**

என்றடிகள் யாழும் அதன் இசையை அளந்து காட்டும் குழலும் போல மிஞிறும் தும்பியும் மலர்களில் ஒலிக்கின்றன. திருக்குறளிலும்,

**"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்"[45]**

என இணைத்து வருவதை அறியமுடிகிறது. மாலை நேரத்தில் கோவலர் குழலிசைப்பதைக் கலித்தொகைப் பாடலின்,

**“அணிமாலைக் கேள்வன் தரூஉமார் ஆயர்**
**மணிமாலை ஊதும் குழல்”** (பா.101:34-35)

என்றடிகள் விளக்கும். மாலை நேரத்தில் அவர்கள் ஊதும் குழலோசையாக மிதக்கும் பன்னோசை சுட்டப்பெற்றுள்ளது. கலித்தொகையில் 106, 108, 119, 129, 130 ஆகிய பாடல்களில் குழல் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. பெரும்பாணாற்றுப்படையில் கோவலர்கள் குழலிசைப்பதை,

**“ஞெலிகோல் கொண்ட பெருவிறல் ஞெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்**
**இன்தீம் பாலை முனையின்”** (178-180)

என்றடிகள் குறிப்பிடுகின்றன. கன்றுகளையும் பசுக்கூட்டத்தையும் காட்டிலே மேய்க்கும்போது மூங்கிலில் தீக்கடை கோலால் தீ உண்டாக்கி அம்மூங்கிலில் துளைபோட்டுக் குழல் செய்து குழல் இசையில் பாலைப்பண்ணை இசைப்பர் என்று விளக்குகிறது. குழலானது மூங்கிலில் செய்யப்பட்டதை உணர்த்துகின்றது.

**யாழ்**

யாழ் என்பதற்கு “நரம்பிசைக்கருவி; மிதுனராசி; ஆந்தை; பண்; a kind of stringed musical instrument; third constellation of the zodiac which has the figure of the twins as it sign; owl; melrdy”[46] என சுறாவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி குறிப்பிடுகிறது. இக்கருவியில் “தந்தி அசையும் போது காற்றில் துடிப்பகளை ஏற்படுத்தி ஒலி உருவாகி இசை பிறக்கிறது”[47] என நா.மம்மது உரைக்கிறார். சங்க இலக்கியத்தில் யாழ் வண்டுகளின் ஓசைக்கு உவமையாகவும், தலைவியின் பேச்சிற்கு உவமையாகவும், தலைவியின் துன்பத்தைத் தீர்ப்பவையாகவும், துன்பத்தை மிகுதிப்படுத்துவனவாகவும் இடம்பெறுகிறது. யாழானது அந்தந்த நிலத்திற்கு ஏற்றவாறு அந்தந்தப் பண்களில் இசைக்கப்படுகிறது.

**யாழின் அமைப்பு**

சங்க காலத்தில் வில்யாழ், சிறியயாழ், பெரியயாழ் ஆகியவை பயன்படுத்தப்பட்டன. வில் யாழ் பற்றி பெரும்பாணாற்றுப்படையின்,

**“………… குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி பிரம்பின்**
**வில்யாழ் இசைக்கும் விரல்எறி, குறிஞ்சிப்**
**பல்காற் பறவை கிளைசெத்து ஓர்க்கும்”**
**(பெரும்பாண்.180-183)**

என்றடிகள் சுட்டுகின்றன. குமிழ மரத்திலுள்ள துளையுடைய கொம்பை வளைத்து அதில் மரல் மரத்தின் கயிற்றை நரம்பாகக் கொண்டு விழ் யாழிசைப்பான். அதில் குறிஞ்சிப் பண்ணைப் பாடுவான். அவ்விசை வண்டுகளின் ரீங்கார ஒலி போன்று இருக்கும் என விளம்புகின்றன. பெரும்பாணாற்றுப்படை 14 நரம்புகளைக் கொண்ட பெரிய யாழையுடைய பாணன் பற்றியும் பெரிய யாழைப் பற்றியும் விளக்குகிறது. பெரிய யாழின் அமைப்பினை,

**“பாசிலை ஒழித்த பராஅரைப் பாதிரி**
**வள்இதழ் மாமலர் வயிற்றிடை வகுத்து அதன்**
**உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சைப்**
**பரிஅரைக் கமுகின் பாளைஅம் பசும்பூக்**
**கருஇருந் தன்ன கண்கூடு செறிதுளை**
**உருக்கிஅன்ன பொருத்துறு போர்வைச்**
**சுனைவறந் தன்ன இருள்தூங்கு வறுவாய்ப்**
**பிறைபிறந்தன்ன பின்ஏந்து கவைக்கடை**
**நெடும்பணைத் திறள்தோள் மடந்தை முன்கைக்**
**குறுத்தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின்**
**மணிவார்த் தன்ன மாஇரு மருப்பின்**
**பொன்வார்ந் தன்ன புரிஅடங்கு நரம்பின்**
**தொடை அமை கேள்வி இடவயின் தழீஇ”**
**(பெரும்பாண்.4-16)**

என்றடிகள் விவரிக்கின்றன. பசுமையான இலையை நீக்கிய பருத்த அடியையுடைய பாதிரி மரத்தின் வளமையான இதழையுடைய பெரிய மலரின் உள்ளிடத்தைப் பிளந்தால் அதன் உள்ளகம் சிவப்பாக இருக்கும். அவ்வாறு சிவப்பு நிறத்தை ஊட்டிய தோலினால் இயன்ற யாழ் பருத்த அடியினையுடைய பாக்கு மரத்தின் பசும்பூக்கள் கருவிருந்ததைப் போன்று கண்களையுடைய செறிந்த துளைகள், தெரியாத நிலையில் பொருத்தப்பெற்ற போர்வையினையுடையது.

உள்பகுதி நீர்வற்றிய சுனை இருண்டிருப்பதைப் போன்றிருந்தது. பின்பகுதி ஏந்தி கவருவிட்டிருந்தது. நீண்ட மூங்கில் வளையல் போன்று நெகிழ்ந்தும் இறுகியும் நரம்புகள் கட்டப்பெற்றிருந்தன. நீலமணி போன்ற கரிய பெரிய தண்டினையுடையதாயிருந்தது. நரம்புகள் பொன் கம்பிகள் ஒழுகியதைப் போன்றிருந்தது என இவ்வடிகள் உணர்த்துகின்றன. சிறிய யாழைப் பற்றிச் சிறுபாணாற்றுப்படை 221-234-ஆம் அடிகள் விளக்குகின்றன. சிறிய யாழ் கருமையான நிறத்தை உடையது. இதனை,

**"அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்**
**பாணர் ஆர்ப்ப பல்கலம் உதவி**
**நாளவை இருந்த நனைமகிழ்த் திதியன்"** (10-12)

என்ற அகநானூற்றின் அடிகளும்,

**"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்"** (534)

என்ற கூத்தராற்றுப்படை அடியும்,

**"களங்கனி அன்ன கருங்கோட்டு சீறியாழ்"** (பரி.127:1)

என்னும் புறநானூற்றடியும் விளக்குகின்றன. இவ்வாறாக இசைக் கருவிகளில் ஒன்றான யாழ் பற்றிய பதிவுகள் உள்ளன.

**யாழின் வகைகள்**

"இது நான்கு வகைப்படும். அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன. இவற்றில் பேரியழிற்கு நரம்பு இருபத்தொன்று; மகரயாழிற்கு பதினேழு; சகோடயாழிற்குப் பதினொன்று; செங்கோட்டியாழிற்கு ஏழாம். இவ்யாழின் உறுப்புகளாவன கோடு, ஆணி, பத்தர், மாடகம், தந்திரி முதலியன தெய்வம் மாதங்கி என்பர்"[48] என அபிதானசிந்தாமணி குறிப்பிடுகிறது. யாழின் வகைகளை,

யாழின் நரம்பு வகைகளை,

**"ஒன்றும் இருபதும் ஒன்பதும் பத்துடனே**
**நின்றபதி னான்கும் பின்னேழும் குன்றாத**
**நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே**
**மேல்வகை நூலோர் விதி"**[49]

எனப் பஞ்சமரபு விளக்குகிறது.

யாழில் ஏற்படும் குற்றங்களைப் பற்றி, "யாழ் இசைக்கும் போது நான்கு வகையான குற்றங்கள் ஏற்படும். அவைகளை,

| | | |
|---|---|---|
| செம்பகை | - | பண்ணோடு உளராமை |
| ஆர்ப்பு | - | ஓங்க இசைத்தல் |
| அதிர்வு | - | நரம்பைச் சிதற உந்தல் |
| கூட்டம் | - | தன் பகையாகிய ஆறாம் நரம்பின் இசையிற் குறைந்து தன் இசை மழுங்கல்"[50] |

என இரா.இளங்குமரன் எடுத்துரைக்கிறார்.

யாழ் இசைக்கப்படும் பொழுதுகளை வீ.பா.கா.சுந்தரம்,

"சிறுபொழுது ஆறு பண்ணும்

| | | |
|---|---|---|
| 1. வைகறை | 2-6 மணி | மருத யாழ் |
| 2. காலை | 6-10 மணி | முல்லை யாழ் |
| 3. நண்பகல் | 10-2 மணி | குரல் புணர் நல்யாழ் (அரும்பாலை) |
| 4. எற்பாடு | 2-6 மணி | நெய்தல் யாழ் |
| 5. மாலை | 6-10 மணி | நெய்தல் யாழ் முல்லை யாழ் |
| 6. யாமம் | 10-2 மணி | குறிஞ்சி யாழ் |

| யாழ் | பாலை | திணை | பெரும்பொழுது | சிறுபொழுது, |
|---|---|---|---|---|
| 1. முல்லை | செம்பாலை | இல்லிருத்தல் | கார் | மாலை |
| 2. குறிஞ்சி | படுமலை | புணர்தல் | கூதிர் | நல்லரவு |
| 3. மருதம் | கோடி | ஊடல் | இளவேனிர் | விடியல் |
| 4. நெய்தல் | விளரி | இரங்கல் | இளவேனில் | எற்பாடு"[51] |

என விளக்குகிறார்.

யாழின் சுவையைப் பற்றி,

1. "முல்லையாழ்; என்பது செம்பாலையாகும் என்று அடியார்க்கு நல்லார் உரை மூலம் அறிகின்றோம். மங்களமிக்கது; தொழுகைக்குரியது; அன்பு அரள்; இரக்கம் முதலிய அவைக்குரியது.

2. குறிஞ்சியாழ்; குறிஞ்சியாழ் என்பது படுமலைப் பாலையாகும் காதற்குரியது. இன்பம், மகிழ்வுச்சுவைக்குரியது; இது யாமப்பண் எனவும் பெயர்பெற்றது.
3. மருதயாழ்; மருதயாழ் என்பது கோடிப்பாலையாகும். இப்பண்ணிலே தொல்காப்பியம் தரும் ஊடல் பற்றிய செய்திகளை அமைத்துப் பாடுவார்கள்.
4. நெய்தல் யாழ்; நெய்தல் யாழ் என்பது விளரிப்பாலையாகும். இஃது இரங்கல் சுவையுடையது"[52]

என தமிழிசைக் கலைக்களஞ்சியம் எடுத்தியம்புகிறது.

**இசைக்கருவிகள் இடம்பெறும் மாண்பு**

பழந்தமிழ் இலக்கியமான சங்க இலக்கியங்களில் இசைக்கருவிகள் எவ்வாறு இடம்பெறுகின்றன என்பதைச் "சங்க இலக்கியத்தில் இசைக்கருவிகள் உவமைகளாகவும், இரவலர் மன்னர்களிடம் பரிசில் பெறுவதற்கும், தினைப்புனம் காக்கவும், தலைவி, வண்டுகள் ஆகியவற்றின் ஓசைகளுக்கு உவமையாகக் கூறுவதாகவும், ஒப்பிடுவதாகவும் வருகிறது. இயற்கையோடு இசைக்கருவிகளை ஒப்பிட்டுப் பார்ப்பதாகவும் இடம்பெறுகிறது. தகவல்களைச் சொல்வதாகவும் வழிபாடுகளில் பயன்படுத்துவதாகவும், இன்பத்தை ஏற்படுத்தும் விதமாகவும், துன்பத்தை ஏற்படுத்துவதாகவும், காலை, மாலை நேரங்களில் பயன்படுத்துவதாகவும் இசைக்கருவிகள் இடம்பெறுகின்றன"[53] எனச் செவ்வியல் இலக்கியங்களில் இசைக்கருவிகள் என்னும் ஆய்வேடு குறிப்பிடுகிறது. "சங்க இலக்கியத்தில் யாழ், பறை, குழல், கொம்பு, தண்ணுமை, தட்டை, துடி, தூம்பு, முழவு, மரசு, சங்கு, மணி, பதலை, உடுக்கை, மகுளி ஆகிய இசைக்கருவிகள் இடம்பெறுகின்றன"[54] எனவும் இவ்வாய்வேடு சுட்டுகிறது.

யாழானது இன்பம் தரும் இசைக்கருவியாய்க் காணப்பட்டதை,

**"நயந்த காதலித் தழீஇப் பாணர்**
**நயம்படு முரற்கையின் யாத்த பயன்தெரிந்து**
**இன்புறு புணர்ச்சி நுகரும்"** **(ஐங்.407:1-3)**

என்ற அடிகள் விளக்குகின்றன. மென்புலமாகிய முல்லை நிலத்தினையுடைய தலைவன் தன் காதலியைத் தழுவி, பாணர்கள் இனிமை மிகுமாறு இசை இலக்கணத்தோடு இணைந்து வெளிப்படுத்திய இசையை நுகர்த்தான் எனச் சுட்டுகின்றன. இவற்றைச் சீவகசிந்தாமணியும்,

**"வாசவெண்ணெய்யும் வண்டிமிர் சாந்தமும்**
**பூசு சுண்ணமும் உண்ணும் அடிசிலும்**
**காசில் போகக் கலப்பையும் கொண்டவன்**
**மாசில் மாசனம் வாயில் படுத்தவே"[55]**

என்ற அடிகளின் வழி மணத்தையுடைய எண்ணெய்யும், வண்டுகள் மொய்க்கும் சந்தனமும், உடம்பில் பூசிக்கொள்ளும் நறுமணப்பொடியும், உண்ணும் உணவும், குற்றமில்லாத இன்ப நுகர்ச்சிக்கு ஏதுவாக அமையும் யாழ் முதலியன வைத்தப் பெட்டியும் கைக்கொண்டு நல்ல மக்கள் நகரின் வாயிலில் நிறைந்தனர் என விளக்குகிறது.

யாழிசைக்கு அ.்.றிணைகள் வயப்பட்டதை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. கலித்தொகையில் யானை யாழிசைக்கு வயப்பட்டதை,

**"காழ்வரை நில்லாக் கடுங்களிற்று ஒருத்தல்**
**யாழ் வரைத் தங்கி ………"   (கலித்.2:26-27)**

என்ற அடிகள் அங்குசத்திற்கு அஞ்சாத அடங்காத மதயானை யாழிசைக்கு வயப்பட்டது என உணர்த்துகிறது.

அசுணம் என்னும் பறவை இசைக்கு மயங்கும் தன்மையுடையது. இப்பறவைப் பற்றி,

**"இருங்சிறைத் தொகுதி ஆர்ப்ப, யாழ்செத்து**
**இருங் கல் விடர் அளை அசுணம் ஓர்க்கும்"**
**(அகநா.88:11-12)**

என்ற அடிகள் விளக்குகின்றன. கரிய சிறகினையுடைய வண்டின் கூட்டம் ஒலி எழுப்பும். அவ்வொலியினை யாழின் இசையெனக் கருதி பெரிய மலைப்பிளவுகளில் உள்ள அசுணங்கள் அவ்விசையை உற்றுக் கேட்கும் இயல்புடையது. அசுணம் இசை அறிவதொரு விலங்கு என்றும், பறவை என்றும் பொருள் உரைக்கின்றனர்.

இப்பறவை பறையொலிக்கு அஞ்சும் தன்மையுடையது. இதனை,

**"இசைக்கொள் சீறியாழ் இன்னிசை கேட்ட**
**அசுண நன்மா அந்நிலைக் கண்ணே**
**பறையொலி கேட்டுத் தன் படிமறந்தது போல்"[56]**

என்ற அடிகளின்வழி பெருங்கதை உணர்த்துகிறது. அஃறிணைகள் இசைக்கு வயப்படவும், மயங்கவும் செய்கின்றன. அத்தகைய இசையைத் தன் தொழில் திறனாகக்கொண்ட கலைஞர்கள் மன்னர்களைப் புகழ்ந்து பாடி தம் வறுமையைப் போக்கிக் கொண்டதில் ஐயமில்லை. இசைக்கு இனங்காத மக்கள் இல்லையென்பதை ஆற்றுப்படை நூல்கள் உணர்த்துகின்றன. இவ்விசைக்கருவிகள் காலநிலையில் பல மாற்றங்கள் அடைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் காணப்படும் இசைக் கருவிகளின்வழி இசைக்கருவிகள் இயக்குவதில் வல்லவர்களாகப் பழந்தமிழர் இருந்தமை விளங்குகிறது.

**பிற இசைக்கருவிகள்**

பெரும்பாண்மையாகச் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்ட இசைக்கருவிகள் யாழ், பறை, குழல், முழவு, முரசு ஆகியவையாகும். சில இடங்களில் ஊதுகொம்பு, தட்டை, கினை, சங்கு, மணி, துடி ஆகியவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஊதுகொம்பு இது காற்றுக்கருவி ஆகும். ஆங்கில எஸ் வடிவில் வளைந்த இந்தக் கருவிகள் நான்கு பாகங்களைக் கொண்டவை. இவற்றில் பறை போன்று வளைந்திருப்பவை கோயில் திருவிழாக்கள், நாட்டுப்புற விழாக்களின் கொண்டாட்டங்களிலும் பயன்படுத்தப்படுகிறது.

இதனை, பி.சைதன்யதேவ தனது இசைக்கருவிகள் நூலில் "தென்னிந்தியாவில் கொம்பு என்று அழைக்கப்படும் கருவி பித்தளையினாலோ கொம்பினாலோ 'C' வடிவத்தில் செய்யப்பட்ட ஒரு கருவி. இதில் மூன்று பாகங்கள் உள்ளன. ஊதும் பாகத்தில் ஒரு வில்லை பொருத்தப்பட்டிருக்கும். மற்ற நுனி அகன்ற வட்டமான ஒரு வாய்போல் அமைந்திருக்கும். திருமணங்கள் மதசம்பந்தமான ஊர்வலங்கள், சவ ஊர்வலங்கள் இவற்றில் கொம்பு ஊதப்படும்.

பஞ்சவாத்தியம் என்று அழைக்கப்படும் ஐந்து கருவிகளுள் இது ஒன்று"[57] என்கிறார். அகநானூறு,

**"................. தடந்தாள் நாரை**
**செறிமடை வயிரின் பிளிற்று பெண்ணை" (அகநா.40:14-15)**

என நீண்ட கால்களையுடைய நாரை செறிந்த முட்டுவாயையுடைய கொம்புபோல ஒலித்தது என்ற அடிகளின் வழி கொம்பிற்கு 'வியர்' என்ற பெயருண்டு என்பதை இவ்வடிகள் மெய்ப்பிக்கின்றன. நற்றிணையில் கொம்பு வாத்தியம் காற்றுக்கருவி என்பதை,

**"வளிஎறி வயிறின் கிளிவிளி பயிற்றும்**
**நளிஇருஞ் சிலம்பின் நம்மலை நாடன்" (நற்.304:3-4)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இப்பாடல் மாறோக்கத்து நப்பசலையாரால் பாடப்பட்டது. காற்றினால் ஓசையெழுப்பக்கூடிய கொம்பு வாத்தியம் போல ஒன்றை ஒன்று அழைத்துக்கொள்ளும் கிளிகள் என இடம்பெறுகிறது. திருமுருகாற்றுப்படையில் கொம்புடன் மணி சேர்த்து ஒளிக்கப்பட்டதை,

**"கோடு வாறியவைத்து கொடிமணி இயக்கி" (திருமுருகு.246)**

என்ற அடி விளக்குகிறது. மலைபடுகடாமில்

**"மின்னிரும் பீலி அணித்தழைக் கோட்டொடு" (அடி.5)**

மயிர்பீலியால் கட்டப்பெற்ற ஊதுகொம்பு என்ற அடியின் வழியும் அறியமுடிகிறது.

**துடி**

துடி என்பது தோற்கருவிகளில் ஒன்று 'துடி' என்பதற்குக் கழகத்தமிழ் அகராதி "அகில், இசங்கி, உடுக்கை, உதடு, ஏலம், காலதசப் பிரமாணத்தொன்று. அது நிமிடம், எட்டுக்கொண்டது, கால நுட்பம், குமரன் ஆடல், குறிஞ்சிப்பறை, கூதாரிஞ்சோறு, ஏழு கன்னிகைகள் ஆடல், துடியென்னேவல், பாலை நிலப்பறை, மேன்மை, வலி, வேகம், தூதுளை, சிறுமை"[58] என பொருள் தருகிறது. இது பறை வகைகளில் ஒன்று. இழுகுப்பறை எனப்படுகிறது. 'இழுகு' என்றால் துடிப்பறை என்று பொருள்.

போர்க்களத்தில் இக்கருவி பெரும்பாண்மையாக இசைக்கப்படுவதைச் சங்க இலக்கியம் இயம்புகிறது. அகநானூற்றில் வெட்சிப்போரில் வெற்றி பெற்ற மறவர்கள் துடி கொட்டி ஆடினர் என்பதை,

**"அருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தார்**
**கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி**
**உவலைக் கண்ணியர் ஊன்புக்கு அயரும்"**

**(அகநா.159:3-10)**

என்ற அடிகள் சுட்டுகின்றன. வெட்சி மறவருடன் போரிட்டு அவரை அடித்து விரட்டி முட்டினர். அதனாற் கொண்ட பெரும் மனச்செருக்கினையும் பெற்ற வெற்றியினையும் உடையவராய் மிக்க குரலையுடைய துடியின் ஒலிக்கேற்ற தாளத்தோடு ஆடினர் என்பதைத் தெரிவிக்கின்றன. போர்த் தெய்வமான கொற்றவையை வழிபடும் பொழுது துடி கொட்டி வழிபட்டுள்ளனர் தமிழர் என்பதை,

**"மறக்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அகத்தினைப் புறனே"[59]**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகிறது. முருகன் ஆடிய துடி ஆட்டத்தைச் சிலப்பதிகாரத்தின்,

**"நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன்நின்ற**
**சூர்த்திறன் கடந்தோன் ஆடிய துடியும்"[60]**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. நீரின் அலையை அரங்கமாக அமைத்துக்கொண்டு தன்னை எதிர்த்த சூரனை அழித்து முருகப்பெருமான் 'துடி' என்னும் இசைக்கருவியைக் கொட்டி துடிக்கூத்து ஆடினார் என்கின்றது. இவற்றின் மூலம் போர்க்களத்தில் வெற்றி கொண்டபின் 'துடி' என்னும் இசைக்கருவியை வெற்றியின் மகிழ்ச்சியில் இசைத்துள்ளனர் தமிழர் என்பதை அறியமுடிகிறது.

**கிணை**

தமிழர்கள் பயன்படுத்திய இசைக்கருவிகளில் ஒன்று கிணையாகும். இவ்விசைக்கருவியைப் பற்றி, "தோலிசைக் கருவிகளில் கண்களை அதாவது துளைகளை உண்டாக்கிக் கயிறுகள் கொண்டு அக்கண்கள் வழியே இழுத்துக் கட்டைகளுடன் இணைத்துக் ட்டிய மத்தளங்களை இசைப்பவர் கண்ணுளர் என்று நமது பழந்தமிழ் இலக்கியங்கள்

சுட்டத்தெளிவுகொள்ள முடிகின்றது"[61] என கரு.அழ.குணசேகரன் குறிப்பிடுகின்றார். புறநானூற்றில் பறை வகைகளில் ஒன்றாகப் பறைகளில் சேர்க்கப்பட்டுள்ளது. கிணை என்பது 'ஒருகண் மாக்கிணை' என்று வழங்கப்படும் பறையாகும். தடாரி பறையையும் இதனையும் ஒன்றாகக் கூறுவர். தடாரிப்பறை என்பது அதிக சத்தம் எழக்கூடியப் பறையாகும். போர்க் காலங்களில் இப்பறை அறையப்பட்டுள்ளது. இப்பறை போருக்குப் பயன்படுத்தப்பட்டதை,

**"ஒரு கண் மாக்கிணை ஒற்றுபு கொடாஅ**
**உருகெழு மன்னர் ஆரளயில் கடந்து"** (பா.392:5-6)

என்ற புறநானூற்றடிகள் தெளிவுபடுத்துகின்றன. ஒரு கண் மாக்கிணையை அறைந்து திறை கொடாத அச்சம் பொருந்திய மன்னருடைய அரிய மதிலைக் கடந்து தமிழர்கள் கிணை என்ற கருவியை மற்றைய கருவிகளுடன் இசைத்துள்ளனர். பொருநர்கள் கிணையைப் பயன்படுத்தியதால் கிணைப்பொருநர்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர் என்பதை,

**"தென்கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த**
**மண்கணை முழவின் மகிழ்இசை ஓதையும்"**[62]

என்ற சிலப்பதிகார அடிகள் விளக்குகின்றன.

**தட்டை**

மூங்கிலில் செய்யப்படும் ஒரு கருவி தட்டையாகும். கிளிகளை விரட்டப் பயன்படுகிறது. இது இசைக்கருவியாகப் பயன்பட்டது. குறிஞ்சிப்பாட்டில் தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகள் கிளிகளை விரட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை இசைக்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஐங்குறுநூறு, அகநானூற்றிலும் இக்கருவி இடம்பெறுகிறது.

**வெறியாட்டில் இசைக்கருவிகள்**

தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்தும் நேரத்தில் பல இசைக்கருவிகள் இயம்பப்பட்டதைப் பட்டினப்பாலை,

**"வெறியாடு மகளிரொடு செறியத்தா அய்க்**
**குழல் அகவ யாழ் முரல**

**முழவு அதிர முருசு இயம்பு**
**விழவு அறா வியல் ஆவணத்து"** (155-158)

என்ற பாடலடிகளில் விளக்குகின்றது. முருகவேளை வழிபட்டு வெறியாடும் மகளிர் வங்கியம் இசைக்க, குழல் ஒலிக்க, யாழ் முரல, முழவுகள் அதிர, முரசுகள் முழங்க விழா எடுத்தனர் என்பதை உணர்த்துகிறது. இதனை மதுரைக்காஞ்சியும்,

**"அரிக்கூடு இன்னியம் கறங்குநேர் நிவத்துக"** (அடி.612)

என்னும் அடியின் வழி உணர்த்துகிறது. இன்னியம் என்பது இசைக்கருவி என்பதைக் குறிக்கும். இவ்வாறாக இசைக்கலை பழந்தமிழரிடையே நிலவியிருந்ததைக் காணமுடிகிறது. நுண்கலைகள் எனப்படும் ஓவியம், சிற்பம், கட்டடம், இசை, நடனம் ஆகியவற்றிற்கு அடுத்ததாக ஓவியம் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது.

**ஆலய வழிபாட்டில் இசைக்கருவிகள்**

இன்றைய ஆலயவழிபாட்டில் இசைக்கப்படும் இசைவழிபாட்டில் இசைக்கப்படும் இசைக்கருவிகள் பற்றி, "நாகச்சுரம், திருச்சின்னம், எர்காளம், முகவீண, கௌரிகாளம், கொம்பு, நவுரி, ஒத்துநாகசுரம், புல்லாங்குழல், சங்கு, துத்தரி, பலிமத்தளம், கவனமத்தளம், சுத்தமத்தளம், தவிள் பேரிகை, சந்திரப்பிள்ளை, செண்டை, டக்க, டமாரம், டங்க டமவாத்தியம், வண்டை, இடக்கை, ஜக்கி, ஜயபேரி, கனகதப்பட்டை, மிருதங்கம், முட்டு, நகார், பெரிய உடல், சின்ன உடல், சன்ன உடல், தப்பு, திமிலை, வீரகண்டி, சேகண்டி, வான்கா, தக்கை, தாளம், பிரம்மதாளம், கைத்தாளம், குழித்தாளம், மணி, கைமணி, கொத்துமணி, சேமக்கலம், கிடிகிட்டி, வீனை, கெத்து என வழிபாட்டில் இடம்பெறும் இசைக்கருவிகள் பல உண்டு எனவும், கிராம வழிபாட்டில் இடம்பெறும் இசைக்கருவிகள் பல உண்டு எனவும், கிராம தேவதைகளின் வழிபாட்டில் உடுக்கை, பம்பை, கைச்சிலம்பு முதலியனவும்"[63] இடம்பெறும் என உணர்த்துகிறார் பி.எம்.சுந்தரம்.

**ஓவியம்**

பழந்தமிழரிடையே இயற்கையாகவே ஓவியம் தீட்டும் திறன் இருந்துள்ளது. தாம் கண்டதையும் கேட்டதையும் அழகியலுடன்

ஓவியமாகத் தீட்டுவதில் வல்லவர்களாக இருந்தனர். ஓவியத்தைக் குறிப்பதற்கு ஓவு, ஓவம், ஓவியம் போன்ற சொற்கள் வழக்கில் இருந்துள்ளதை,

**"ஓவத் தன்ன வினைபுனை நல்லில்" (பதிற்.61:3)**
**"ஓவுக் கண்டன்ன" (மதுரை.365)**
**"ஓவியங் கடுப்ப" (நெடுநல்.147)**

போன்ற அடிகள் விளக்குகின்றன. ஓவியம் தீட்டுவோரைக் கண்ணுள் வினைஞர் என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இதனை,

**"எவ்வகை செய்தியும் உவமங் காட்டி**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்**
**கண்ணுள் வினைஞரும் பிறருஞ்கூடி" (மதுரை.516-518)**

என்றடிகள் எடுத்தோதுகின்றன. ஓவியம் சுவர், மரம், துணி, உலோகம் போன்றவற்றில் அழகுற வரையப்பட்டதை இலக்கியங்கள் இயம்புகின்றன. சான்றாகப் பரிபாடலில்,

**"என்றூ முறவரும் இருசுடர் தேமி**
**ஒன்றிய சுடர்நிலை உள்படு வோரும்**
**இரதி காமன இவளிவன் எனாஅ**
**விரகியர் வினவ வினாவிறுப் போரும்**
**இந்திரன் பூசை யிவளக யிகையிவன்**
**சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு**
**ஒன்றிய படியிதென்று உரைசெய் வோரும்**
**இன்ன பல பல எழுத்துநிலை மண்யம்" (பரி.19:46-53)**

என்றடிகள் மக்கள் தத்தமக்கேற்ற ஆடை அணிகலன்களை அணிந்து திருப்பரங்குன்றத்துள் உறையும் முருகக்கடவுளை வணங்கச் சென்றனர். அக்குன்றத்தில் உள்ள சித்திரங்களைக் கண்டு வினவினர். அங்குத் துருவசக்கரத்தைப் பொருத்திவரும் சூரியன் முதலிய கிரகங்களை விளக்கும் சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்தனர்.

பின் மனைவியர் வினவ கணவன்மார்கள் அச்சுவரில் இருந்த ஓவியங்களான இது இரதி, இவன் காமன் எனவும், மற்றொரு இடத்தில் இருந்த சித்திரத்தைப் பார்த்துப் பூனை உருவெடுத்த இந்திரன், அகலிகை, கௌதமன் இவரின் கோபத்தால் கல்லாகிய அகலிகை உருவம் எனச் சுட்டிக்காட்டினர். இதனைக் காணுகையில் பண்டையோர் தாம் கண்ட

காட்சியன்றி; கண்ணுக்குப் புலப்படாத கேட்டறிந்த நிகழ்வுகளையும் சித்திர வடிவில் ஓவியமாக அமைத்து இருந்ததைக் அறியமுடிகிறது. மகளிர் பொழுதுபோக்காக மணலில் பாவை செய்து விளையாடியதை,

**“மாதா மடநல்லார் மணலின் எழுதிய**
**பாவை சிதைத்த தெவழ”　(பரி.7:25-26)**

என்ற பரிபாடலடிகள் விளக்குகின்றன. துணிகளில் சித்திரம் தீட்டியதை நெடுநல்வாடை,

**“...................... வயமான்**
**வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து**
**முல்லை பல்போது உறழப் பூநிரைத்து**
**மெல்லிதின் விரிந்த சேக்கை”　(நெடுநல்.128-131)**

என்கிறது. அரசமாதேவியின் கட்டிலின் ஒப்பனைத்திறனைக் கூறுமிடத்துக் கட்டிலில் விரிக்கப்பட்ட மெல்லிய போர்வையில் வேட்டையாடுதல், அகன்ற இடத்தையுடைய காட்டில் மலர்ந்த முல்லை முதலிய பல வேறுபட்ட மலர்களின் உருவங்கள் நிரம்ப வரையப்பட்டும் இருந்தன என இவ்வடிகள் உணர்த்துகின்றன. பண்டையோர் ஓவியங்களைச் சுவர், துணி போன்றவற்றுள் வரைந்ததோடு பெண்களின் தோள், மார்பு போன்ற பகுதிகளிலும் ஓவியம் தீட்டியுள்ளனர். இக்கலையைத் தொய்யில் எழுதுவது எனச் சுட்டுவதைக் காணமுடிகிறது. இதனை,

**“பெருந்தோள் தொய்யில் வரித்தும்”　(அகநா.389:6)**
**“வேய்த்தோள் கரும்பெழுதித் தொய்யில் செய்தனை”**
**(கலித்.76:15)**

போன்ற அடிகள் விளக்குகின்றன. இவ்வழக்கமானது இன்றைய காலகட்டத்திலும் மக்களிடையே காணப்படுகிறது. தற்பொழுது இதைப் பச்சைக்குத்துதல், ‘டாட்டுப்போடுதல்’ என நவீனமுறையாக மக்கள் செய்து வருவதைக் காணமுடிகிறது.

**சிற்பக்கலை**

பண்டையோர் கலைத்துறையில் சிறந்து விளங்கியமைக்கான சான்றுகளில் மற்றொன்று சிற்பக்கலையாகும். பழந்தமிழர் சிற்பங்களை மண், மரம், சுதை, கல், பளிங்கு, தந்தம், பித்தளை, வெண்கலம், பொன் போன்ற பொருள்களில் வடித்தனர். சிற்பம் செய்வதற்கு,

**“கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்**
**மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்**
**கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை**
**பத்தே சிற்பத் தொழிற்கு உறுப்பாவன”[64]**

என கல், உலோகம், செங்கல், சுதை, மரம், மண், தந்தம், வண்ணம், சர்க்கரை, மெழுகு ஆகிய பத்துப் பொருட்கள் பயன்பட்டதைத் திவாகர நிகண்டு சுட்டுகிறது. இப்பொருள்களில் சிற்பங்கள் வடிக்கப்பட்டதை இலக்கியங்களும் உணர்த்துகின்றன. சிற்பத் தொழிலுக்கு அடிப்படையாய் அமையப்பெற்றது நடுகற்கள். போரில் மாய்ந்த போர் மறவரின் பேரும் பெயரும் புகழும் மற்றவர்கள் அறிய கல்லில் கொறிக்கப்பட்டு நடுகல் நடுவர். நடுகல் நட்டு அவர்களை வழிபடுவர். இதனை நடுகல் வழிபாடு என்று குறிப்பர். இதனை,

**“அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்**
**தினி நட்டனரே கல்லும்” (புறநா.204:3-4)**

என்றடிகள் உணர்த்துகின்றன. உலோகத்தில் சிற்பம் வடித்ததை நெடுநல்வாடை,

**“யவனர் இயற்றிய வினைமான் பாவை**
**கையேத் தையகல் நிறைநெய் செறிந்து” (101-103)**

என்றடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. யவணர்களால் செய்யப்பட்ட தொழில் மாட்சியமையுடைய பாவை தன் கையில் அகல் விளக்கினை ஏந்தி நின்றதையும் இவ்வடிகள் சுட்டுகின்றன. பொன்னால் பாவை செய்யப்பட்டதை,

**“செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை” (மதுரை.410)**

**“தாவில் நன்பொன் தைஇய பாவை” (அகநா.212:1)**

போன்ற அடிகள் இயம்புகின்றன. யானைத் தந்தத்தில் பண்டையோர் சிற்பத்தொழில் செய்தனர் என்றும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**கட்டடக்கலை**

இன்றைய காலக்கட்டத்தில் பல வண்ண வண்ண அடுக்குமாடிகள், கோபுரங்கள், நவீன வடிவமைப்புடன் கூடிய விடுதிகள், கட்டடங்கள் கட்டப்பட்டுக் காட்சிப்படுத்தப்பட்டிருப்பதை நாம் கண்டு வியக்கிறோம். அன்றே தொழில்நுட்பமும், அறிவியல் அறிவும் கொண்டு உயர்ந்த

மாடமாளிகைகளை, கோபுரங்களைக் கட்டியுள்ளனர். தொழில்நுட்பம் வளர்ச்சியில்லா காலகட்டத்தில் இவ்வாறு செயலாற்றியுள்ளனர். பண்டைத் தமிழர்கள் தங்கள் தேவைகளுக்கும் வசதிகளுக்கும் ஏற்ற வகையில் கலைத்திறனோடு தங்கள் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு வாழ்ந்துள்ளனர். வைக்கோல், புல், ஓலை, நாணல், பண், மரம் போன்றவற்றாலாகிய குடில்கள் முதல் எழுநிலை மாடங்கள் வரைக் கட்டட அமைப்பைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

**"சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்" (பெரும்பாண்.405)**

என்னும் அடியானது செங்கலாலான கட்டடத்தைக் குறிக்கிறது. பெரும்பாணாற்றுப்படை அவரவர் வாழ்ந்த நிலத்திற்கேற்ப குடில்களை இருந்தமையை விளக்குகிறது. சங்க இலக்கியங்கள் கட்டடம், மண், செங்கல், மரம், சுண்ணாம்பு, உலோகம் ஆகியவற்றைக் கொண்டு கட்டியுள்ளதை உணர்த்துகின்றன.

**கட்டிடப்பணி தொடங்கும்முறை**

ஒரு வீடு கட்ட, கட்டிடம் கட்ட வேண்டுமென்றால் நாள், நல்லநேரம் திசைப்பார்த்துத் தச்சுசெய்தல் என்பது வழக்கம். இதனையே பழந்தமிழரும் கொண்டிருந்தனர் என்பதை நெடுநல்வாடை,

**"நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்**
**தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்**
**பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனவைகுத்து" (நெடுநல்.72-79)**

என்கிறது. திசைகளில் விரிந்த கதிர்களைப் பரப்பின அகன்ற இடத்தை உடைய ஞாயிற்றின் (சூரியன்) மண்டிலம் நிலத்தில் இரண்டடித்து நாட்டப்பெற்ற இரு கோல்களின் நிழலும் அரியாதபடி தாரைபோக ஓடுகின்ற இயக்கம் நிகழ்வதாகிய சித்திரைத் திங்கள் பத்து நாட்களிலும் மேலும் இருபதாம் நாளினுள்ளும் அமைந்த யாதாமொரு நாளின் பதினைந்து நாழிகை அளவிலே சிற்பநூல் அறிந்த தச்சர் கூற நூலை நேரே பிடித்து, திசைகளைக் குறித்துக் கொண்டு அத்திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் தெய்வங்களைத் தொழுது அரசர்கள் வாழ்வதற்கு ஏற்ப அரண்மனைகளையும், வாயில்களையும், மண்டபங்களையும் கூறுபடுத்தி அமைத்தனர் என்பதை இப்பாடல் விவரிக்கின்றது.

அகழி, கற்சிறை, சுருங்கை புரம் ஆகியவற்றின் வாயிலாகவும் கட்டட அமைப்பினைக் காணக்கூடும். கற்சிறை என்பது வேகமாக வருகின்ற ஆற்று வெள்ளத்தைத் தடுத்துத் தாங்குமாறு கல்லால் ஆகிய அணை ஆகும். இதனை,

**"வருபுணல் கற்சிறை" (மதுரை.725)**

என்ற மதுரைக்காஞ்சி அடி உணர்த்துகின்றது. இதற்குச் சான்றாக கரிகாற்சோழன் கட்டிய கல்லணையைக் காணமுடிகிறது.

"கொள்ளிடத்திற்குக் குறுக்கே மேலனை என்ற சிறந்த அணை கட்டப்பட்டுள்ளது. உள்ளாறு காவிரியையும், கொள்ளிடத்தையும், இணைக்கும் இடத்தில் வெள்ளாற்றுக்குக் குறுக்கே கல்லணை எனும் அணை கட்டப்பட்டுள்ளது. இவ்வணை கரிகாற்சோழனால் கட்டப்பட்டதாகும்.

கரிகாலன் கட்டிய கல்லணை வரலாற்றுப்புப் புகழ் வாய்ந்தது. இரண்டாம் நூற்றாண்டில் சோழப் பேரரசனாக விளங்கிய கரிகாலனால் கட்டப்பட்டது இந்த அணை. இலங்கையிலிருந்து கொண்டு வரப்பட்ட கைதிகள் மூலம் கரிகாலனால் இவ்வணை கட்டப்பட்டதாக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கல், களிமண் இரண்டும் சேர்த்துக் கட்டப்பட்டதால் தான் 'கல்லணை' என்று பெயர் பெற்றது. பிற்காலத்தில் இந்த அணையின் மீது பாலமும் புதிய வகை மதகுகளும் ஆங்கில அரசு இருந்தபோது அமைக்கப்பட்டன"[65] என விளக்குகிறார் கீரன். இவைபோன்ற சான்றுகளின் வழியே கட்டிட அமைப்பினைப் பழந்தமிழர் தம் பாதுகாப்பிற்காகச் கொண்டதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

**மருத்துவர் தொழில்**

பண்டைய தமிழர்கள் மருத்துவத்திலும் மேலோங்கி யிருந்தமையை மேற்கணக்கு இலக்கியங்கள் தெள்ளிதின் புலப்படுத்துகின்றன. நோய்யுற்றவர்களின் நோய் அறிந்து அவர்களுக்கு ஏற்ற வகையில் மருந்துகளைக் கொடுத்ததுடன் உணவுக் கட்டுப்பாட்டையும் மேற்கொள்ளச் செய்துள்ளனர். இதனை,

**“மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்” (நற்.136)**

என்கின்ற அடி விளம்புகின்றது. மருத்துவர்கள் அறவோன், மருத்தன் மருத்துவன் என அழைக்கப்பட்டனர். கலித்தொகையில்,

**“திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய**
**மருந்து போல் மருந்து ஆகி .........” (17:19-20)**

என்றடிகள்,

**“அன்னர் காதலராக அவர் நமக்கு**
**இன் உயிர் போத்தரும் மருத்துவர் ஆயின்” (137:24-25)**

என்றும்,

**“பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் எமக்கே”**
**(புறநா.173:11-12)**

என்றும் பாடல்களின் வழி அறியமுடிகிறது. மருத்துவத்தில் அறுவை சிகிச்சையானது கடினமானது. அவை பழங்காலத்திலும் மேற்கொள்ளப்பட்டதை,

**“மீன்றோர் கொட்டிற் பனிக்கய மூழ்கிச்**
**சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி**
**நெடுவசி பரந்த வடு” (பதிற்.42:2-4)**

என்றடிகள் குறிப்பிடுகின்றன. போரில் ஏற்பட்ட பிளவுபட்ட காயத்தைத் தையலிடும்பொழுது நெடிய வெண்மையான ஊசியானது தசையில் புகுந்து குருதியில் தோய்ந்து பின் வெளிவரும் இயல்பானது. மீன்கொத்திப் பறவை நீரில் வாழும் மீனைக் கொத்தி எழும்பொழுது அதன் அலகு எவ்வாறு நீரில் சென்று மீளுமோ அவ்வாறு மருத்துவ ஊசி காட்சியளிப்பதாக உணர்த்துகின்றன. இதனால் அறுவைச் சிகிச்சையில் ‘வெண்மையான ஊசியினை’ பயன்படுத்தியமை புலனாகிறது.

ஊசி என்பதற்கு “இழைவாங்கி; துணி தைக்கும் ஊசி; எழுத்தாணி; குண்டூசி; நிறைகோலின் நடுமுள்; கடிகாரத்தின்முள்; கூர்மை; சிறுமை; ஊசிப்பொறி; குயவர் மட்கலத்தை அறுக்கும் கருவி; வடதிசை”[65] என்று மெய்யப்பன் தமிழகராதி பொருள் தருகிறது.

**அட்டில் தொழில்**

பழந்தமிழரிடையே சமயல் கலையிலும் கைத்தேர்ந்தவர்கள் காணப்பட்டனர். அட்டில் தொழில் என்பது சமயல் தொழிலைக்குறிக்கும்.

இலக்கியங்களில் மன்னர்களும், வள்ளல்களும், மக்களும் விருந்தோம்பல் பண்பில் சிறப்புற்றிருந்தனர் என்பதை எடுத்துக்கூறும் நோக்கில் அட்டில் சாலைகள் வைத்துச் செயல்பட்டதை அறியமுடிகிறது. அட்டில் சாலை எப்படி இருந்தது என்பதை,

> **"புலிப்பொறிப் போர்க்கதவின்**
> **திருத்துஞ்சும் திண்காப்பின்**
> **புகழ்நிலை இய மொழிவரை**
> **அறம் நிலைஇய அகன் அட்டில்"** **(பட்.40-43)**

என்னும் பட்டினப்பாலையடிகள் இயம்புகின்றன. அட்டில் சாலையானது அறம் சேர்க்கும் வாயிலாகக் காணப்பட்டது. இவ்வட்டிற்சாலை அகலமான, பாதுகாப்பான வலியமதில் சூழ்ந்து மதிற்சுவரில் திருமகளின் உருவம் எழுதப்பட்டு அதன் வாயில் இரட்டைக் கதவுகளால் ஆனது. அக்கதவுகளில் புலியுருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

**கணியன்**

பழங்கால மக்கள் தாங்கள் செய்யும் செயல்கள் நல்லபடியாக நிறைவேற விரிச்சி கேட்டல், நாள் கோள் பார்த்தல் போன்ற நடைமுறைகளைக் கடைபிடித்தனர். அவற்றில் ஒன்று காலங்களை கணித்துப் பார்க்கும் கணியன் தொழில். போருக்குச் செல்லும் முன் நாள் கோள் பார்க்கும் பழக்கம் பழந்தமிழரிடையே இருந்ததைத் தொல்காப்பியம் போன்ற நூல்கள் சுட்டுகின்றன. கணியன் தொழிலானது இன்று சோதிடம் என்றழைக்கப்படுகிறது.

சங்ககால மன்னர்கள் அரசவையில் கணியர்களைத் தங்களுடைய அலுவலர்களில் ஒருவராய் வைத்திருந்தனர். சோதிடரை 'கணி' என்றும் தலைமைச் சோதிடரை பெருங்கணி என்றும் அழைத்தனர். மேலும் நாழிகைக் கணக்கரும் இருந்தனர். இதனை நெடுநல்வாடையில்,

> **"………………… மாதிரம்**
> **விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்**
> **இருகோல் குறிநலை வழுக்காது குடக்கேர்**
> **பொருதிறஞ் சாரா அரைநாள் அமயத்து**
> **நூலறி புலவர் துண்ணிதிற் கயிரிட்டுத்**
> **தேஎங் கொண்டு தெய்வ நோக்கி"** **(73-77)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. திசைகள் எல்லாம் விரிந்து செல்லும் ஒளிக்கதிர்களைப் பரவச் செய்த அகன்ற இடத்தை உடைய ஞாயிறு (ஞாயிற்றுன் நிலை அல்லது காலம் தெரியுமாறு பொருந்திய) இரண்டு கோள்களின் நிழல் குறிக்கின்ற காலநிலை தவறாது ஞாயிற்றின் நிலை மேற்கே ஏறி ஒரு பக்கத்தைச் சாரப் போகாத அரைநாள் நண்பகல் அல்லது சரியான உச்சிப்பொழுதில் எனப் புலப்படுத்துகின்றது. இரவுப் பொழுதில் கணக்கிடும் முறையை முல்லைப்பாட்டு,

**“பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள்**
**தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி**
**எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்**
**குறுநீர்க் கன்னல் இனைத்தென்று இசைப்ப” (55-58)**

என்றடிகள் இயம்புகின்றன. இந்நாழிகைப் பார்ப்பதற்குக் கருவியாகக் கன்னல் என்னும் நாழிகை வட்டிலைப் பயன்பாட்டில் கொண்டிருந்தனர். இரவுப் பொழுதில் கூட பொழுதுகளை அறிந்து கூறும் பொய்மை இல்லாத கணக்கர் இருந்தனர் என்பதை இவ்வடிகள் விளக்குகின்றன. நீரின் அளவை அளந்து கூறும் கருவியாக குறுநீர்க் கன்னல் என்னும் நாழிகை வட்டில் கருவியும் பயன்படுத்தினர் என்பதை,

**“குறுநீர்க் கன்னல் எண்ணுதல் அல்லது**
**கதிர்மருங்கறியா தஞ்சுவரப் பாஅய்” (அகநா.43:6-7)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. இன்றைய சூழலில் இதனை நீரோட்டம் காணுதல் என்றழைக்கின்றோம்.

**தொகுப்புரை**

- கலை பற்றிய சொற்பொருள் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.
- கலைகளின் வகைகள் சுட்டப்பட்டுள்ளன.
- ஆயகலை அறுபத்துநான்கு பற்றி அறியமுடிகிறது.
- நுண்கலைகளான இசை, ஓவியம், சிற்பம், கட்டடம் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.
- சங்ககால மனிதர்களிடையே இயல்பாக கலையுணர்வு இருந்தமையை அறியமுடிகிறது.

- இயல்பான கலையுணர்வை அழகியல் நோக்குடனும் மேம்படுத்தவும் மனிதன் முயன்றான் என்பதைச் சங்க இலக்கியங்கள் விளக்குகின்றன.

- வறுமையை ஒழிக்க தம்மிடமிருந்த கலையைப் பயன்படுத்திய கலைஞர்கள் அதையே தம் தொழிலாக மாற்றி அமைத்துக் கொண்டனர்.

- தொழில் நுட்பமும், நுணுக்கமும் நிறைந்த சிற்பக்கலைஞர்களும், ஓவியம் தீட்டுவோரும் பண்டைக் காலத்தில் இருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

- பழந்தமிழர் தாம் கண்ட காட்சி, கேள்வியுற்ற நிகழ்வுகள், கற்பனை ஆகியவற்றை ஓவியமாகத் தீட்டுவதில் வல்லன்மை மிக்கவராய் இருந்ததை அறியமுடிகிறது.

- தத்தம் நிலத்திற்கேற்ப வசதிக்கேற்ப அழகியலோடு இருப்பிடங்களை அமைத்துப் பழந்தமிழர் வாழ்ந்துள்ளனர்.

- பழந்தமிழர் இயற்கையோடு இயைந்த இயல்பான வாழ்வை வாழ்ந்தாலும் தங்களுக்குள் கலையறிவைக் கொண்டிருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

- தொழிற்கருவிகளாகவும், கலைக்கருவிகளாகவும் சில கருவிகள் பயன்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.295.
2. ஆசிரியர் குழாம், சுராவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி, ப.284.
3. Gopal.K. Bhargava, Land & People of Indian, States and Union Territories, P.363.
4. இணையத்தளத் தகவல் தேடல். (Google)
5. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.96.
6. தி.நா.அறிவு ஒளி (நூ.ஆ.), இசைத்தமிழ், ப.392.
7. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.130.
8. செ.பிரேமா, இசைமருத்துவம், ப.1.
9. குமரிச்செழியன், செம்மொழித்தமிழ், ப.51.
10. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-2, ப.931.
11. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம், ப.255.
12. மேலது., ப.246.
13. கி.வ.ஜகன்நாதன் (உ.ஆ.), திருமுருகாற்றுப்படை, பக்.17-18.
14. ஆ.சிங்காரவேலு முதலயார், அபிதானசிந்தாமணி, ப.1213.
15. வீரமாமுனிவர், சதுரகராதி, ப.185.
16. மேலது., ப.82.
17. ஆ.சிங்காரவேலு முதலயார், அபிதானசிந்தாமணி, ப.494.
18. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.90.
19. ந.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.1000.
20. சா.சத்யா, ஆய்வேடு, செவ்வியல் இலக்கியங்களில் இசைக்கருவிகள், ப.15.
21. பி.சைதன்யதேவ, இசைக்கருவிகள், ப.1.
22. கே.ஏ.பக்ரிசாமிபாரதி, இந்தியக் கருவூலம், ப.374.
23. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.633.
24. வ.சு.கோமதிசங்கரயர், இசைத்தமிழ் இலக்கண விளக்கம், ப.268.
25. செ.பிரேமா, இசைமருத்துவம், ப.13.

26. பஞ்சமரபு, பா.95:1, ப.141.
27. மேலது., பா.95:2, ப.142.
28. மேலது., பா.95:3, ப.143.
29. மேலது., பா.96:6, ப.144.
30. மேலது., பா.97, ப.145.
31. மேலது., பா.95:6, ப.145.
32. மேலது., பா.95,7, ப.146.
33. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.16.
34. வளர்மதி, பறை ஆய்வுநூல், இணையத்தளத் தகவல்.
35. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.657.
36. கி.பார்த்திபராஜா, தமிழ்க் கலைமணிகள், ப.100.
37. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், தொகுதி-3, ப.263.
38. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.582.
39. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லார் உரையும், ப.510.
40. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.780.
41. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லார் உரையும், ப.74.
42. ஆர்.ஆளவந்தார், தோற்கருவிகள், ப.97.
43. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லார் உரையும், ப.515.
44. து.ஆ.தனபாண்டியன், புல்லாங்குழல் ஓர் ஆய்வு, ப.25.
45. பரிமேலழகர் (உ.ஆ.), திருக்குறள், ப.27.
46. ஆசிரியர் குழாம், சுராவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி, ப.855.
47. நா.மம்மது, தமிழிசைப் பேரகராதி, ப.316.
48. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப.1650.
49. பஞ்சமரபு, ப.10.
50. இரா.இளங்குமரன், தமிழிசை இயக்கம், ப.32.
51. வீ.ப.கா.சுந்தரம், தொல்காப்பியத்தில் இசைக்குறிப்புகள், பக்.28-29.

52. வீ.ப.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், ப.66.
53. சா.சத்யா, ஆய்வேடு, செவ்வியல் இலக்கியங்களில் இசைக்கருவிகள், ப.15.
54. மேலது., ப.15.
55. ச.வே.சுப்ரமணியன், (உ.ஆ.), ஐம்பெருங்காப்பியங்கள், தொகுதி-1, ப.464.
56. இரா.செயபால், (உ.ஆ.), அகநானூறு, தொகுதி-1, ப.266.
57. பி.சைதன்யதேவ, இசைக்கருவிகள், ப.91.
58. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழகராதி, ப.554.
59. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம் மூலமும் உரையும், ப.314.
60. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும், ப.176.
61. கரு.அழ.குணசேகரன், பண்பாட்டுத் தளங்களில் தமிழர் கலைகள், ப.83.
62. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.260.
63. பி.எம்.சுந்தரம், (சொ.பொ.) ஆலய வழிபாட்டில் இசை அறக்கட்டளைச் சொற்பொழிவு, ப.17.
64. வி.சி.சசிவல்லி, (நூ.ஆ.), பண்டைத் தமிழர் தொழில்கள், ப.259.
65. ப.மனசை.கீரன், ஊரும் ஆறும், ப.110.

## முடிவுரை

- மனிதனின் உணவு, உறையுள், உடை போன்றவற்றிருக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் அறிவுசார் வாழ்வியலுக்கும் அடிப்படையாய் அமைவன தொழில்களாகும். அத்தொழில்களைச் செய்வதற்குப் பயன்படுத்தும் உறுப்புகள் கருவிகளாகும்.
- தொழிலுக்கான விளக்கம் தொல்காப்பியம், இலக்கியங்கள் அகராதிகள், அறிஞர்களின் கருத்துகளுடன் கொடுக்கப்பட்டுள்ளன.
- தொழில்கள் அந்தந்த நிலங்களின் தன்மை, பருவங்கள், தேவைகளுக்கேற்ப தோற்றம் பெற்றுள்ளன.
- தொழில்களை வாழ்வியல், போர், வணிகம், கலைகள் போன்றவை தீர்மானித்துள்ளன. இத்தொழில்கள் ஆய்வு நோக்கில் முதன்மைத் தொழில்கள், துணைமைத்தொழில்கள், கலையியல் தொழில்கள், பொதுவான தொழில்கள் எனப் பாகுப்படுத்தப்பட்டுள்ளன.
- ஐவகை நிலத்தில் காணப்படும் முதன்மைத் தொழில்கள் கொடுக்கப்பட்டுள்ளன.
- துணைமைத் தொழில்களும் சுட்டப்பட்டுள்ளன.
- கலையியல் தொழில்கள் குறித்தும் கலைஞர்கள் பற்றியும் இயம்பப்பட்டுள்ளன.
- பொதுவான தொழில்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன.

- கருவிகள் பற்றிய விளக்கமும் ஆங்கிலத்தில் கருவிகள் குறித்த கருத்துக்களுடனும் தெளிவுப்படுத்தப்பெற்றுள்ளன.
- சங்ககாலக் கருவிகளாகக் குறிஞ்சியில், வில், அம்பு, குளிர், தட்டை, தழல், அடார், ஞெகிழி, கற்பொறி, கோல், தன்னும்மை, மால்பு எனப்படும் கண்ணேணி, கவண் போன்ற கருவிகள் காணப்படுகின்றன.
- முல்லைநிலக் கருவிகளாக மத்து, கயிறு, குழிசி, உறி, கோல், தீக்கடைக்கோல், வில், குழல், கொள்ளிக்கட்டை, திரிமரம், கலப்பை, குதிர், கோடரி, வட்டி ஆகியவை புலப்படுகின்றன.
- மருதநிலக் கருவிகளாக, கலப்பை, கொழு, துளர், குயம், ஆம்பி, பன்றிபத்தர், கிணை, குதிர், தொடுகூடு, தளம்பு, ஏற்றமரம், கழுந்துள்தடி போன்றன வெளிப்படுகின்றன.
- நெய்தல்நிலக் கருவிகளாக, படகு, வலை, தூண்டில்முள், தூண்டில்கம்பு, எறிஉளி, பறி, வட்டி, அரம் ஆகியன சுட்டப்பட்டுள்ளன.
- பாலைநிலக் கருவிகளாக வில், வாள், அம்பு, உரைவாள், நூல் ஏணி போன்றவையும் இடம்பெறுகின்றன.
- துணைமைத் தொழிற்கருவிகளாக உளி, அரம், குறடு, துருத்தி, உலைமூக்கு, சம்மட்டி, உலைக்கல், சுட்டுக்கோல், உரைக்கல், ஓலைக்கொத்தி ஆகிய கருவிகள் கிடைத்துள்ளன.

- கலைக்கருவிகளான யாழ், பறை, குழல், முழவு, முரசு, தூம்பு, ஊதுகொம்பு, மகுளி, மணி, சங்கு, தண்ணுமை, கிணை, துடி பம்பை போன்றவை குறித்து இயம்பப்பட்டுள்ளன.

- குயவுத் தொழிற் கருவியான சக்கரம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

- பொதுவான தொழிற்கருவிகளான வில், வாள், வேல், அம்பு, ஈட்டி, கவண், கேடயம், மெய்புதை, அரணம், கண்டம், கவசம், கைச்சரடு, பரம், பாரம் ஆக உரைவாள் சூலம், வச்சிரம், தண்டாயுதம், மழு, முரசு, துடி போன்ற கருவிகள் பற்றிப் புலப்படுத்தப்பட்டுள்ளன.

- முதன்மைத் தொழில்களான தேனழித்தல், தினைவிளைவித்தல், தினைப்புனம் காவல், கிழங்கு அகழ்தல், வேட்டைத்தொழில் ஆகியன குறிக்கப்பட்டுள்ளன,

- ஆநிரைமேய்தல், ஆநிரைக்காவல், தயிர், மோர், நெய் விற்றல், தானியவகைகளான தினை, எள், வரகு, கொள் போன்றவை பயிரிடல் போன்ற தொழில்களும் சுட்டப்பெற்றுள்ளன.

- ஏர் உழவு, சமப்படுத்தல், விதைப்பு, களையெடுப்பு, நீர் பாய்ச்சுதல், அறுவடை, கடாவிடுதல் ஆகிய தொழில்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

- மீன்பிடித்தல், மீன்விற்றல், மீன் உலர்த்தல், மீன் வேட்டம், கடல் வாணிபம், ஆறலைத்தல், புல்லரிசி எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்கள் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

- தேனழித்தலில் வில், கோல், கண்ணேணி பயன்படுத்தியமை குறிப்பிடப்பட்டுள்ளன.

- ஆநிரை மேய்த்தலில் கோல், குழல் ஆநிரைகளை ஒருங்கிணைக்கவும், தீக்கடைக்கோல், மூங்கிலில் துளைப்போட்டுக் குழல் செய்வதற்கும், கொள்ளிக்கட்டை கோவலரின் குளிர்ச்சியைப் போக்குவதற்கும் பயன்படுத்தப்பட்டமை விளக்கப்பட்டுள்ளன.

- தயிர், மோர், வெண்ணெய் கடைவதற்கு மத்து, கயிறு கலன், போன்றனவும், தயிர், மோர், விற்பனைக்குக் குழிசி, வட்டி ஆகிய பொருட்களையும் பயன்படுத்தியமைச் சுட்டப்பட்டுள்ளன.

- முல்லை நிலத்தில் தானியப் பயிர்கள் பயிரிடுவதற்கு நிலங்கள் உழவிடப்பட்டன. அதற்குக் கலப்பை பயன்பட்டுள்ளது. வரகுக் கதிரைப் போட்டு வைப்பதற்குக் குதிர், திரிப்பதற்குத் திரிமரம் போன்றனவும் பயன்படுத்தியுள்ளனர்.

- மருதநிலத்தில் உழுவதற்குக் கலப்பை, சமப்படுத்துவதற்குத் தளம்பு, களையெடுப்பதற்குத் துளர், நீர் பாய்ச்சுவதற்கு ஏற்றம், ஆம்பி, பன்றிபத்தர், அறுவடைக்கு குயம், உழுந்தினைப் பிரித்தெடுக்கக் கழுந்துள்தடி ஆகிய கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

- நெய்தலில் மீன்பிடிக்கப் படகு, வலை, தூண்டில், கம்பு, தூண்டில் முள், பறி, எறிஉளி ஆகிய கருவிகள் பயன்பட்டமை விளக்கப்பட்டுள்ளன.

❖ பாலையில் வில், அம்பு, நூல் ஏணி, உரைவாள் உளி போன்றவற்றைக் கள்வர் பயன்படுத்தினர் என்பதும், புல்லரிசி எடுக்க எயினப்பெண்கள் கடப்பாறையைப் பயன்படுத்தினர் என்பதும் இயம்பப்பட்டுள்ளன.

❖ வேட்டைத்தொழில் முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை ஆகிய நான்கு நிலங்களில் நடைபெற்றமை விளக்கப்பட்டுள்ளன.

❖ வேட்டைக்குச் செல்பவர்கள் தங்களுடன் நாயினை அழைத்துச் சென்றமை இலக்கியங்களின் வழி கொடுக்கப்பட்டுள்ளது.

❖ வேட்டைக்கு வில், அம்பு, ஊதுகொம்பு, கவண்கல், வலை, கற்பொறி, எறிஉளி போன்றவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

❖ வேட்டையில் பெண்களும் ஈடுபட்டனர் என்பதும் சுட்டப்பட்டுள்ளது.

❖ வேட்டைக்குப் பார்வை மான் வளர்க்கப்பட்டுள்ளது.

❖ வேட்டையில் பறவைகள், புலி, எலி, யானை, பன்றி, மான், முயல் போன்றவை வேட்டையாடப்பட்டுள்ளன.

❖ ஐவகைநிலத் தொழிலுக்கு உறுதுணையாக அமையும் துணைமைத் தொழில்களும், கருவிகளும் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ கொல்லரின் பயன்பாடானது பண்டைத் தமிழரின் வாழ்வில் பெரும்பங்கினை வகுத்தமையைக் காணமுடிகிறது.

❖ கொல்லர்களால் போர்க்கருவிகள், இல்லக்கருவிகள், வேளாண்மைக் கருவிகள் போன்றவை செய்தளிக்கப்பெற்றுள்ளன.

- ❖ தச்சர்களால் தேர், சக்கரம், வண்டிகள் செய்யப்பட்டதும், ஒரேநாளில் எண்தேர் செய்யும் திறன்மிகு தச்சர்கள் பற்றியும் விளம்பப்பட்டுள்ளன.
- ❖ ஓலைத்தொழிலில் கருவிகள் செய்யப்பெற்றதும் உணர்த்தப்பட்டுள்ளது.
- ❖ கலைக்கருவிகளான இசைக்கருவிகள் இன்ப நுகர்விற்கு மட்டுமன்றி வறுமையைத் தீர்க்கும் தொழிற்கருவிகளாகவும் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.
- ❖ பழந்தமிழர் இசைக்கருவிகள் செய்வதில் வல்லன்மை மிக்கவர்கள் என்பதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.
- ❖ இசைக்கருவிகள் வேட்டையிலும், சடங்குகளிலும், போர்களத்திலும், வேளாண்மையிலும், ஆடல் பாடல்களிலும், கூத்துக்களிலும் இசைக்கப்பட்டமை இலக்கியங்களின் வழி உணர்த்தப்பட்டுள்ளன.
- ❖ போர் ஏற்படக் காரணங்களாக மண், பொன், பெண், புகழ், வீரம், தன்முனைப்பு போன்றவை இருந்தமை சுட்டப்பட்டுள்ளன.
- ❖ போரில் கடைப்பிடிக்கப் பெற்ற அறநெறிகள் பற்றியும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.
- ❖ படைகள் நிலப்படை, நீர்ப்படை என இரண்டு, நிலப்படைகள் நான்கு என்பதும் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ வில், வேல், வாள் குறித்த விளக்கங்கள் நிகண்டுகளின்வழி கொடுக்கப்பட்டுள்ளன.

- யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்ப்படை என நிலப்படைகள் நான்கினைப் பற்றியும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

- காவல் தொழில் ஒவ்வொரு நிலத்திலும் காணப்படுகிறது.

- பொதுவான காவல் தொழில் நாடு, நகர்க்காவல், எல்லைக்காவல், ஊர்க்காவல், நீர்நிலைக்காவல், மெய்க்காவல், நாட்டுப்பெருவழிக் காவல், நிதிகாவல், படைக்கலக்கொட்டில் காவல், அந்தப்புரக் காவல் எனக் காவல் தொழில் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

- காவலில் வில், அம்பு போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டமை கொடுக்கப்பட்டுள்ளன.

- அறிவுசார் தொழில்களாக அரசர், அந்தணர், அமைச்சர், தூதர், ஒற்றர், ஆசிரியர் ஆகியோரின் தொழில்கள் இருந்தமை பற்றி எடுத்தியம்பப்பட்டுள்ளன.

- பண்டமாற்றுத் தொழிலில் ஐவகை நில மக்களின் வணிகமுறைகள் விளக்கப்பட்டுள்ளன.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

1. ஆலிஸ்.ஆ., (உ.ஆ.) - பதிற்றுப்பத்து,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
இரண்டாம் பதிப்பு - அக்டோபர் 2014.

2. செயபால்.இரா.,(உ.ஆ.) - அகநானூறு மூலமும் உரையும்,
புத்தகம்-1,2,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு - 2014.

3. சுப்பிரமணியன்.ச.வே. - சங்க இலக்கியம்,
பத்துப்பாட்டு மூலமும் தெளிவுரையும்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-600 108.
இரண்டாம் பதிப்பு - டிசம்பர் 2010.

4. சுப்பிரமணியன்.பெ. (உ.ஆ.) - பரிபாடல் மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு - அக்டோபர் 2014.

5. தட்சிணாமூர்த்தி.அ., (உ.ஆ.) - ஐங்குறுநூறு மூலமும் உரையும், புத்தகம்-1,2,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு - அக்டோபர் 2014.

6. நாகராசன்.வி., (உ.ஆ.) - குறுந்தொகை மூலமும் உரையும், புத்தகம்-1,2
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு - அக்டோபர் 2014.

7. பரிமணம்.அ.மா.(ப.ஆ.) - புறநானூறு மூலமும் உரையும், புத்தகம்-1,2
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு - அக்டோபர் 2014.

8. பாலசுப்பிரமணியன்,கு.வெ. - நற்றிணை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 090.
ஐந்தாம் பதிப்பு - அக்டோபர் 2014.

9. விசுவநாதன்.அ. (உ.ஆ.) - கலித்தொகை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
ஐந்தாம் பதிப்பு : அக்டோபர் 2014.

10. மோகன்.இரா., - பத்துப்பாட்டு மூலமும் உரையும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098. ஐந்தாம் பதிப்பு : அக்டோபர் 2014.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. அநுமந்தன்.கி.ர. - பண்டையகால நாகரிகங்களின் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 1979.
2. அருள்ராசு.வே.சா. - பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். நவம்பர் - 2002.
3. அறவாணன்.க.ப. - தமிழ் மக்கள் வரலாறு பழந்தமிழர் வழிபாடுகள், மன்னவர் மருதோன்றி அச்சகம், பாரிமுனை, சென்னை-600 001. முதற்பதிப்பு - டிசம்பர் 2005.
4. அறிவுஒளி.தி.நா. - இசைத்தமிழ், தமிழ் ஆய்வரங்கம், 2/25, எட்டாவது தெரு, மறைமலை நகர், சென்னை.
5. அன்னிதமாசு (ப.ஆ.) - தமிழக மகளிரியல், International Institute of Tamil Studies, C.P.T. Campus, Taramani, Chennai - 600 113.

6. ஆளவந்தான்.ஆர். - தமிழர் தோற்கருவிகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 2.
முதற்பதிப்பு - 1981.

7. இளங்குமரன்.இரா. - தமிழிசை இயக்கம்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம் - 608 001.

8. இளங்கோவடிகள் - சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும்
அடியார்க்கு நல்லாருரையும்,
டாக்டர் உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம்,
2, அருண்டேல் கடற்கரைச்சாலை,
பெசண்ட் நகர், சென்னை - 600 090.
முதற்பதிப்பு - 1892.

9. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
சாரதா பதிப்பகம்,
6/16, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
ஆறாம் பதிப்பு - ஜுன் 2008.

10. இராகவையங்கார்.மு. - ஆராய்ச்சித்தொகுதி,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு - 1938.

11. இராகவன்.அ. - நம்நாட்டுக் கப்பற்கலை,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 5.
1968.

12. இராசமாணிக்கனார்.மா. - பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
சாகித்திய அகாதெமி,
சாகித்திய அகாதெமி,
இரவீந்திரபவன், 35,
பெரொஸ்ஷா சாலை,
புதுதில்லி - 110 001.
முதற்பதிப்பு - 2012.

13. இராசமாணிக்கனார்.மா. - சோழர் வரலாறு,
பூரம் பதிப்பகம்,
சென்னை.
1985.

14. இராமசாமி.துளசி. - தமிழக வரலாற்றில் ஒளிர்வது
களப்பிரர் காலம்,
விழிகள்,
66/1, 3-ஆவது தெரு, சென்னை-600 042.
முதற்பதிப்பு - டிசம்பர் 2014.

15. கணபதிஸ்தபதி. - சிற்பச்செந்நூல்,
தொழில் நுட்பக் கல்வி இயக்கம்,
அடையாறு, சென்னை - 600 070.
முதற்பதிப்பு - 1978.

16. கந்தசாமி.இல.செ. - தமிழர் வேளாண்மை மரபுகள்,
கலைச்செல்வம் பதிப்பகம்,
கோயம்புத்தூர்.
முதற்பதிப்பு - 1987.

17. கந்தையா பிள்ளை.ந.சி. - தமிழ் இந்தியா,
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்பக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி.
முதற்பதிப்பு - 1945.

18. காசிம்.கா. - மகாபாரதத்தில் அரசியல் சிந்தனை,
திருவரசு புத்தக நிலையம்,
13, தீன தயாளு தெரு,
தி.நகர், சென்னை - 600 017.
இரண்டாம் பதிப்பு - 2001.

19. கியோர்க்கு விஹானஸவ் - மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 002.
1973.

20. கீரன்.மனசை.ப. - ஊரும் ஆறும்,
வேணி வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு - 1992.

21. குமரிச்செழியன் - செம்மொழித்தமிழ்,
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-14.
முதற்பதிப்பு - 2011.

22. கோசாம்பி.டி.டி. - பண்டைய இந்தியா
பண்பாடும் நாகரிகமும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
முதற்பதிப்பு - பிப்ரவரி 1989.

23. கோமதிசங்கர் ஐயர் - இசைத்தமிழ் இலக்கண விளக்கம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
1984.

24. கோவிந்தராசன்.சி.ர. - ஔவையார் அருளிய அறநூல்கள் மூலமும் உரையும்,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,
40, பிஞ்சால சுப்பிரமணியம் தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
முதற்பதிப்பு - 2002.

25. கோவிந்தன்.கா. - பண்டைத் தமிழர் போர்நெறி,
ராமையா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - 2011.

26. கௌமாரீஸ்வரி.எஸ். - திருக்குறள் பரிமேலழகர் உரை,
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - ஏப்ரல் 2002.

27. கௌமாரீஸ்வரி.எஸ். - பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்,
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு - மார்ச் 2009.

28. சசிவல்லி.வி.சி. - பண்டைத் தமிழர் தொழில்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ. அஞ்சல்,
தரமணி, சென்னை - 600 113.
முதற்பதிப்பு - நவம்பர் 1989.

29. சற்குணன்.அ. - கட்டுமரத்திலிருந்து கப்பல் வரை,
பழனியப்பா பிரதர்ஸ்,
கோனார் மாளிகை,
25, பீட்டர் சாலை,
சென்னை - 700 014.
முதற்பதிப்பு - 2011.

30. சாமிநாதன்.த. - சங்ககாலத் தொழில் நுட்பம்,
அன்னம்,
மனை எண்.1, நிர்மலா நகர்,
தஞ்சாவூர் - 613 007.
முதற்பதிப்பு - டிசம்பர் 2013.

31. சிவகுருநாதன் - வாகைத்திணை,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு, சென்னை - 600 001.
முதற்பதிப்பு - 1992.

32. சுந்தரம்.பி.எம்.(சொ.பொ.) - ஆலய வழிபாட்டில்
இசை அறக்கட்டளைச் சொற்பொழிவு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

33. சுந்தரம்.வீ.ப.கா. - தொல்காப்பியத்தில் இசைக்குறிப்புகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை - 600 113.
முதற்பதிப்பு - 1994.

34. சுபாஷ்சந்திரபோஸ்.ச. (உ.ஆ.) - தமிழ்க்களஞ்சியம்,
புறப்பொருள் வெண்பா மாலை,
இயல்,
23-பி/2739,
தொப்புள் பிள்ளையார் கோவில் தெரு,
தஞ்சாவூர் - 613 001.
மூன்றாம் பதிப்பு - 2017.

35. சுப்பிரமணியன்.ச.வே. - ஐம்பெருங்காப்பியங்கள்
மூலமும் உரையும்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை.
சூன் 2011.

36. சுப்ரமணியன்.ந. - சங்ககால வாழ்வியல்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
முதற்பதிப்பு - ஆகஸ்ட் 1986.

37. சேதுப்பிள்ளை.ரா.பி. - தமிழர் வீரம்,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை.
முதற்பதிப்பு - 1948.

38. சேதுராமன்.பி. - ஆற்றுப்படை இலக்கியத்தில்
தமிழர் வாழ்வியல்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-600 098.
முதற்பதிப்பு - டிசம்பர் 2011.

39. சைதன்யதேவ.பி. - இசைக்கருவிகள்,
இயக்குநர் நேஷனல் புக் டிரஸ்ட்,
இந்தியா,
1994.

40. ஜகன்நாதன்.கி.வா. - திருமுருகாற்றுப்படை,
அமுத நிலையம் லிமிடெட்,
சென்னை.
முதற்பதிப்பு - 1978.

41. தங்கங்கந்தசாமி - போரியல் அன்றும் இன்றும்,
சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு,
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு - 1987.

42. தமையந்திரன்,வே. - நமது பாரம்பரிய தொழில்நுட்ப அறிவியல்,
மருதம் பதிப்பகம்,
1, வடக்கு மாடவீதி,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004.
முதற்பதிப்பு - டிசம்பர் 1992.

43. தனபாண்டியன் - புல்லாங்குழல் ஓர் ஆய்வு,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு - 1991.

44. திருநாவுக்கரசு.க.த. - தென்கிழக்கு ஆசிய நாடுகளில்
தமிழ்ப் பண்பாடு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத்தொழில் நுட்பப்பயிலக வளாகம்,
தரமணி, சென்னை - 600 113.
இரண்டாம் பதிப்பு - 2010.

45. தெய்வசிகாமணிக்கவுண்டர்- வே.ரா. பஞ்சமரபு மூலமும் உரையும்,
88, வேலம்பாளையம்,
எழுமாத்தூர் வழி,
ஈரோடு வட்டம்.
இரண்டாம் பதிப்பு - 1975.

46. தேவநேயன்.ஞா. - பழந்தமிழாட்சி,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்.,
டி.டி.கே. சாலை,
திருநெல்வேலி.

47. தேவநேயப்பாவாணர்.ஞா. - தமிழர் வரலாறு,
பூம்புகார் பதிப்பகம்,
127 (ப.எண்.63), பிரகாசம் சாலை,
பிராட்வே, சென்னை - 600 108.
முதற்பதிப்பு - ஆகஸ்ட் 2011.

48. பக்கிரிசாமிபாரதி.கே.ஏ. - இந்திய இசைக்கருவூலம்,
குசேலர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2002.

49. பக்தவத்சலபாரதி.சி. - தமிழர் மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 001.
1990.

50. பார்த்திபராஜா.கி. - தமிழ்க் கலைமணிகள்,
பாரதி புத்தகாலயம்,
7, இளங்கோ சாலை,
தேனாம்பேட்டை,
சென்னை - 600 018.
முதற்பதிப்பு - 2018.

51. பிரேமா.சே. - இசை மருத்துவம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத்தொழில்நுட்ப பயிலக வளாகம்,
தரமணி,
சென்னை - 600 113.
முதற்பதிப்பு - 2009.

52. பெருமாள்.எஸ்.ஏ. - மனிதகுல வரலாறு,
ரெட்ஸ்டார் பப்ளிகேசன்,
மதுரை - 625 016.
முதற்பதிப்பு - டிசம்பர் 2001.

53. பெருமாள்சாமி.வெ. - சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணாசாலை,
தேனாம்பேட்டை,
சென்னை - 600 018.
மூன்றாம் பதிப்பு - மே 2011.

54. பொற்கோ.பி.பி.சி. - தமிழோசையில்,
நண்பர்கள் அச்சகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 1973.

55. மம்மது.நா. - தமிழிசைப் பேரகராதி,
இன்னிசை அறக்கட்டளை,
இன்னிசை இல்லம்,
7-12/28, பனையடியான் கோவில் தெரு,
மகாத்மா காந்தி நகர்,
மதுரை - 625 014.
முதற்பதிப்பு - 2010.

56. மறைமலை அடிகளார் - வேளாளர் நாகரிகம்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 1963.

57. முகம்மது செரீபு.நா. - மனிதன் எங்ஙனம் பேராற்றல் மிக்கவன் ஆனான்,
ராதுகா பதிப்பகம்,
மாஸ்கோ.
முதற்பதிப்பு - 1987.

58. முகைதீன்பாதுஷா.அ.ஹா. - தொல்லியல் விதிகளும் வகைகளும்,
சுல்தான் பப்ளிகேஷன்ஸ்,
திருநெல்வேலி.
2007.

59. முத்தாலக்குறிச்சி காமராசு - ஆதிச்ச நல்லூர் ஆய்வுகள்,
காவியா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.
முதற்பதிப்பு - 2010.

60. . முத்துசாமி.கோ. - சங்ககால நாகரிக பண்பாட்டு வளர்ச்சியில் இரும்பின் முக்கிய பங்கு,
பண்டைக்கால உலோகத் தொழிலியல் கருத்தரங்கில் படிக்கப்பட்டது,
24, 25 ஜுன் 1988,
மியூசியம் அரங்கு,
சென்னை.

61. முத்தையா.ஒ. - மரபு அறிவு சமகாலச் செயல்பாடுகளும் தொழில் நுட்பங்களும்,
தமிழ்த்துறை,
காந்தி கிராமியப் பல்கலைக்கழகம்,
காந்தி கிராமம், தமிழ்நாடு.
முதற்பதிப்பு - சனவரி 6.7.2014.

62. . ராஜன்.கா. - தொல்லியல் நோக்கில் சங்க காலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத்தொழில் நுட்பப்பயில வளாகம்,
தரமணி, சென்னை - 600 113.
முதற்பதிப்பு - 2004.

63. வானமாமலை.நா. - தமிழர் வரலாறும் பண்பாடும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
முதற்பதிப்பு - பிப்ரவரி 1966.

64. வெள்ளைவாரணன்.க. - சங்ககாலத் தமிழ் மக்கள்,
நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,
சென்னை.
முதற்பதிப்பு - 1950.

65. வேங்கடசாமி.சீனி.மயிலை. - பழங்காலத் தமிழர் வாணிகம்
(சங்க காலம்),
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
முதற்பதிப்பு - மார்ச் 1974.

**ஆங்கில நூல்கள்**

1. Gopal K. Bhargava - Land & People of Indian States and Union Territories (Volume-1), Kalpaz Publication, Delhi - 110 052.
2. Shamasastry,Dr.R.(T.R.)- Kautilya's Arthasastra, Mysore Printing and Publishing House, Mysore. 1967.

**நிகண்டுகள்**

1. சுப்பிரமணியன்.ச.வே. - தமிழ் நிகண்டுகள், மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் - 608 001. முதற்பதிப்பு - 2008.

**களஞ்சியங்கள்**

1. இராசேந்திரன் - தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, மாணிக்கம் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர். முதற்பதிப்பு - 2001.
2. ….. - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி1, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர். முதற்பதிப்பு - 1988.

3. சிங்காரவேலு முதலியார்.ஆ.- அபிதானசிந்தாமணி,
தமிழ்க் கலைக்களஞ்சியம்,
செம்பதிப்பு,
6/16, தோப்பு வெங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.

4. சுந்தரம்.வி.பா.கா. - தமிழிசைக் கலைக்களஞ்சியம்,
தொகுதி-4,
யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்,
101-D, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
சென்னை - 600 004.
முதற்பதிப்பு - 1997.

5. ….. - வாழ்வியல் களஞ்சியம் தொகுதி-2,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
மறுபதிப்பு - 1991.

**அகராதிகள்**

1. ஆசிரியர் குழு - நர்மதா தமிழ் அகராதி,
நர்மதா பதிப்பகம்,
நல்லநூல் வெளியீட்டாளர்கள்,
10, நானா தெரு, தி.நகர்,
சென்னை - 600 017.
பதிப்பு - 2011.

2. கழகப் புலவர்கள் - கழகத் தமிழ் அகராதி,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
154, டி.டி.கே.சாலை, சென்னை-600 010.
முதற்பதிப்பு - ஏப்ரல் 1964.

3. கதிரைவேற்பிள்ளை.நா. - தமிழ்மொழி அகராதி,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
2009.

4. கந்தயாப்பிள்ளை.ந.சி. - செந்தமிழ் பேரரகராதி,
கழக வெளியீடு,
சென்னை-1.
1957.

5. குழாம் ஆசிரியர் (தொ.ஆ.) - சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி,
சுராபுக்ஸ் (பி) லிட்.,
1620 'ஜே' பிளாக்,
16-வது பிரதான சாலை,
அண்ணாநகர்,
சென்னை - 600 040.
செப்டம்பர் 2013.

6. கௌமாரீஸ்வரி.எஸ். - கௌரா தமிழ் அகராதி,
சாரதா பதிப்பகம்,
சென்னை - 600 014
2010.

7. சுப்பிரமணியன்.ச.வே. - மெய்யப்பன் தமிழ் அகராதி,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை - 800 108.
முதற்பதிப்பு -2011.

8. ….. - பெருஞ்சொல்லகராதி தொகுதி-3,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
K.P.T. Industries அண்ணாமலை நகர்,
தஞ்சாவூர் - 608 002
முதற்பதிப்பு - 2002.

9. ….. - பேரகராதி,
லிப்கோ ஸ்தாபகர் சர்மாஜி,
(நூற்றாண்டு வெளியீடு),
லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி) லிட்.,
மேற்கு சி.ஐ.டி. நகர்,
சென்னை - 600 035.
முதற்பதிப்பு - 2008.

10. வீரமாமுனிவர் - சதுரகராதி,
பப்ளிக் இன்ஸ்ரெக்ஷன் டிரஸ்,
சென்னை.
1860.

**ஆங்கில அகராதி**

1. Murugan (Editor) - Oxford English - English - Tamil Dictionary,
Oxford University, Press,
XMCA Library Building,
1, Jaising Road,
New Delhi - 110 001
India.
First - 2000.

**ஆய்வேடுகள்**


1. ஆக்னஸ்மேரி.இ. - பரிணாமவியல் நோக்கில் சங்ககாலப் போரியல், இலக்கியவியல்துறை, புதுச்சேரி அரசு நிறுவனம், புதுச்சேரி - 605 008. முதற்பதிப்பு - 2014.
2. சத்யா.சா. - செவ்வியல் இலக்கியங்களில் இசைக்கருவிகள், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3. 2013.

# சங்க இலக்கியங்களில் தொழிற்கருவிகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**சா.சத்யா**

(பதிவு எண் : 0879)

நெறியாளர்

பேரா. **மு.பாண்டி**




## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில்3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி ம
ற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**பிப்ரவரி - 2019**

## முடிவுரை

- மனிதனின் உணவு, உறையுள், உடை போன்றவற்றிருக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் அறிவுசார் வாழ்வியலுக்கும் அடிப்படையாய் அமைவன தொழில்களாகும். அத்தொழில்களைச் செய்வதற்குப் பயன்படுத்தும் உறுப்புகள் கருவிகளாகும்.
- தொழிலுக்கான விளக்கம் தொல்காப்பியம், இலக்கியங்கள் அகராதிகள், அறிஞர்களின் கருத்துகளுடன் கொடுக்கப்பட்டுள்ளன.
- தொழில்கள் அந்தந்த நிலங்களின் தன்மை, பருவங்கள், தேவைகளுக்கேற்ப தோற்றம் பெற்றுள்ளன.
- தொழில்களை வாழ்வியல், போர், வணிகம், கலைகள் போன்றவை தீர்மானித்துள்ளன. இத்தொழில்கள் ஆய்வு நோக்கில் முதன்மைத் தொழில்கள், துணைமைத்தொழில்கள், கலையியல் தொழில்கள், பொதுவான தொழில்கள் எனப் பாகுப்படுத்தப்பட்டுள்ளன.
- ஐவகை நிலத்தில் காணப்படும் முதன்மைத் தொழில்கள் கொடுக்கப்பட்டுள்ளன.
- துணைமைத் தொழில்களும் சுட்டப்பட்டுள்ளன.
- கலையியல் தொழில்கள் குறித்தும் கலைஞர்கள் பற்றியும் இயம்பப்பட்டுள்ளன.
- பொதுவான தொழில்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன.

- கருவிகள் பற்றிய விளக்கமும் ஆங்கிலத்தில் கருவிகள் குறித்த கருத்துக்களுடனும் தெளிவுப்படுத்தப்பெற்றுள்ளன.
- சங்ககாலக் கருவிகளாகக் குறிஞ்சியில், வில், அம்பு, குளிர், தட்டை, தழல், அடார், ஞெகிழி, கற்பொறி, கோல், தன்னும்மை, மால்பு எனப்படும் கண்ணேணி, கவண் போன்ற கருவிகள் காணப்படுகின்றன.
- முல்லைநிலக் கருவிகளாக மத்து, கயிறு, குழிசி, உறி, கோல், தீக்கடைக்கோல், வில், குழல், கொள்ளிக்கட்டை, திரிமரம், கலப்பை, குதிர், கோடரி, வட்டி ஆகியவை புலப்படுகின்றன.
- மருதநிலக் கருவிகளாக, கலப்பை, கொழு, துளர், குயம், ஆம்பி, பன்றிபத்தர், கிணை, குதிர், தொடுகூடு, தளம்பு, ஏற்றமரம், கழுந்துள்தடி போன்றன வெளிப்படுகின்றன.
- நெய்தல்நிலக் கருவிகளாக, படகு, வலை, தூண்டில்முள், தூண்டில்கம்பு, எறிஉளி, பறி, வட்டி, அரம் ஆகியன சுட்டப்பட்டுள்ளன.
- பாலைநிலக் கருவிகளாக வில், வாள், அம்பு, உரைவாள், நூல் ஏணி போன்றவையும் இடம்பெறுகின்றன.
- துணைமைத் தொழிற்கருவிகளாக உளி, அரம், குறடு, துருத்தி, உலைமூக்கு, சம்மட்டி, உலைக்கல், சுட்டுக்கோல், உரைக்கல், ஓலைக்கொத்தி ஆகிய கருவிகள் கிடைத்துள்ளன.

- கலைக்கருவிகளான யாழ், பறை, குழல், முழவு, முரசு, தூம்பு, ஊதுகொம்பு, மகுளி, மணி, சங்கு, தண்ணுமை, கிணை, துடி பம்பை போன்றவை குறித்து இயம்பப்பட்டுள்ளன.

- குயவுத் தொழிற் கருவியான சக்கரம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

- பொதுவான தொழிற்கருவிகளான வில், வாள், வேல், அம்பு, ஈட்டி, கவண், கேடயம், மெய்புதை, அரணம், கண்டம், கவசம், கைச்சரடு, பரம், பாரம் ஆக உரைவாள் சூலம், வச்சிரம், தண்டாயுதம், மழு, முரசு, துடி போன்ற கருவிகள் பற்றிப் புலப்படுத்தப்பட்டுள்ளன.

- முதன்மைத் தொழில்களான தேனழித்தல், தினைவிளைவித்தல், தினைப்புனம் காவல், கிழங்கு அகழ்தல், வேட்டைத்தொழில் ஆகியன குறிக்கப்பட்டுள்ளன,

- ஆநிரைமேய்தல், ஆநிரைக்காவல், தயிர், மோர், நெய் விற்றல், தானியவகைகளான தினை, எள், வரகு, கொள் போன்றவை பயிரிடல் போன்ற தொழில்களும் சுட்டப்பெற்றுள்ளன.

- ஏர் உழவு, சமப்படுத்தல், விதைப்பு, களையெடுப்பு, நீர் பாய்ச்சுதல், அறுவடை, கடாவிடுதல் ஆகிய தொழில்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

- மீன்பிடித்தல், மீன்விற்றல், மீன் உலர்த்தல், மீன் வேட்டம், கடல் வாணிபம், ஆறலைத்தல், புல்லரிசி எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்கள் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

- தேனழித்தலில் வில், கோல், கண்ணேணி பயன்படுத்தியமை குறிப்பிடப்பட்டுள்ளன.

- ஆநிரை மேய்த்தலில் கோல், குழல் ஆநிரைகளை ஒருங்கிணைக்கவும், தீக்கடைக்கோல், மூங்கிலில் துளைப்போட்டுக் குழல் செய்வதற்கும், கொள்ளிக்கட்டை கோவலரின் குளிர்ச்சியைப் போக்குவதற்கும் பயன்படுத்தப்பட்டமை விளக்கப்பட்டுள்ளன.

- தயிர், மோர், வெண்ணெய் கடைவதற்கு மத்து, கயிறு கலன், போன்றனவும், தயிர், மோர், விற்பனைக்குக் குழிசி, வட்டி ஆகிய பொருட்களையும் பயன்படுத்தியமைச் சுட்டப்பட்டுள்ளன.

- முல்லை நிலத்தில் தானியப் பயிர்கள் பயிரிடுவதற்கு நிலங்கள் உழவிடப்பட்டன. அதற்குக் கலப்பை பயன்பட்டுள்ளது. வரகுக் கதிரைப் போட்டு வைப்பதற்குக் குதிர், திரிப்பதற்குத் திரிமரம் போன்றனவும் பயன்படுத்தியுள்ளனர்.

- மருதநிலத்தில் உழுவதற்குக் கலப்பை, சமப்படுத்துவதற்குத் தளம்பு, களையெடுப்பதற்குத் துளர், நீர் பாய்ச்சுவதற்கு ஏற்றம், ஆம்பி, பன்றிபத்தர், அறுவடைக்கு குயம், உழுந்தினைப் பிரித்தெடுக்கக் கழுந்துள்தடி ஆகிய கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

- நெய்தலில் மீன்பிடிக்கப் படகு, வலை, தூண்டில், கம்பு, தூண்டில் முள், பறி, எறிஉளி ஆகிய கருவிகள் பயன்பட்டமை விளக்கப்பட்டுள்ளன.

❖ பாலையில் வில், அம்பு, நூல் ஏணி, உரைவாள் உளி போன்றவற்றைக் கள்வர் பயன்படுத்தினர் என்பதும், புல்லரிசி எடுக்க எயினப்பெண்கள் கடப்பாறையைப் பயன்படுத்தினர் என்பதும் இயம்பப்பட்டுள்ளன.

❖ வேட்டைத்தொழில் முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை ஆகிய நான்கு நிலங்களில் நடைபெற்றமை விளக்கப்பட்டுள்ளன.

❖ வேட்டைக்குச் செல்பவர்கள் தங்களுடன் நாயினை அழைத்துச் சென்றமை இலக்கியங்களின் வழி கொடுக்கப்பட்டுள்ளது.

❖ வேட்டைக்கு வில், அம்பு, ஊதுகொம்பு, கவண்கல், வலை, கற்பொறி, எறிஉளி போன்றவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

❖ வேட்டையில் பெண்களும் ஈடுபட்டனர் என்பதும் சுட்டப்பட்டுள்ளது.

❖ வேட்டைக்குப் பார்வை மான் வளர்க்கப்பட்டுள்ளது.

❖ வேட்டையில் பறவைகள், புலி, எலி, யானை, பன்றி, மான், முயல் போன்றவை வேட்டையாடப்பட்டுள்ளன.

❖ ஐவகைநிலத் தொழிலுக்கு உறுதுணையாக அமையும் துணைமைத் தொழில்களும், கருவிகளும் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ கொல்லரின் பயன்பாடானது பண்டைத் தமிழரின் வாழ்வில் பெரும்பங்கினை வகுத்தமையைக் காணமுடிகிறது.

❖ கொல்லர்களால் போர்க்கருவிகள், இல்லக்கருவிகள், வேளாண்மைக் கருவிகள் போன்றவை செய்தளிக்கப்பெற்றுள்ளன.

- தச்சர்களால் தேர், சக்கரம், வண்டிகள் செய்யப்பட்டதும், ஒரேநாளில் எண்தேர் செய்யும் திறன்மிகு தச்சர்கள் பற்றியும் விளம்பப்பட்டுள்ளன.
- ஓலைத்தொழிலில் கருவிகள் செய்யப்பெற்றதும் உணர்த்தப்பட்டுள்ளது.
- கலைக்கருவிகளான இசைக்கருவிகள் இன்ப நுகர்விற்கு மட்டுமன்றி வறுமையைத் தீர்க்கும் தொழிற்கருவிகளாகவும் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.
- பழந்தமிழர் இசைக்கருவிகள் செய்வதில் வல்லன்மை மிக்கவர்கள் என்பதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.
- இசைக்கருவிகள் வேட்டையிலும், சடங்குகளிலும், போர்களத்திலும், வேளாண்மையிலும், ஆடல் பாடல்களிலும், கூத்துக்களிலும் இசைக்கப்பட்டமை இலக்கியங்களின் வழி உணர்த்தப்பட்டுள்ளன.
- போர் ஏற்படக் காரணங்களாக மண், பொன், பெண், புகழ், வீரம், தன்முனைப்பு போன்றவை இருந்தமை சுட்டப்பட்டுள்ளன.
- போரில் கடைப்பிடிக்கப் பெற்ற அறநெறிகள் பற்றியும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.
- படைகள் நிலப்படை, நீர்ப்படை என இரண்டு, நிலப்படைகள் நான்கு என்பதும் விளக்கப்பட்டுள்ளன.
- வில், வேல், வாள் குறித்த விளக்கங்கள் நிகண்டுகளின்வழி கொடுக்கப்பட்டுள்ளன.

- யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை என நிலப்படைகள் நான்கினைப் பற்றியும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.
- காவல் தொழில் ஒவ்வொரு நிலத்திலும் காணப்படுகிறது.
- பொதுவான காவல் தொழில் நாடு, நகர்க்காவல், எல்லைக்காவல், ஊர்க்காவல், நீர்நிலைக்காவல், மெய்க்காவல், நாட்டுப்பெருவழிக் காவல், நிதிகாவல், படைக்கலக்கொட்டில் காவல், அந்தப்புரக் காவல் எனக் காவல் தொழில் பற்றி விளக்கப்பட்டுள்ளன.
- காவலில் வில், அம்பு போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டமை கொடுக்கப்பட்டுள்ளன.
- அறிவுசார் தொழில்களாக அரசர், அந்தணர், அமைச்சர், தூதர், ஒற்றர், ஆசிரியர் ஆகியோரின் தொழில்கள் இருந்தமை பற்றி எடுத்தியம்பப்பட்டுள்ளன.
- பண்டமாற்றுத் தொழிலில் ஐவகை நில மக்களின் வணிகமுறைகள் விளக்கப்பட்டுள்ளன.